




உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# தாயுமான சுவாமிகள் பாடல்.



இஃது

மதுரைத்தமிழ்ச்சங்கத்து வித்துவான்

வண்ணக்களஞ்சியம்

காஞ்சி - நாகலிங்க முதலியார்

அரும்பதவுரையோடு.



சென்னை:

சல்லா - சென்னகேசவுலு நாயடுவினால்

தமது

ஸ்ரீநிகேதன அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



பெங்களூர் - இரத்தின நாயகரால்

வெளியிடப்பட்டது.

1906.



இதன் விலை ரூ. 1.






தாயுமான சுவாமி.

௨

கணபதி துணை.

# பிரகடன பத்திரம்.





இந்த யோக்கியதாபத்திரிகை திருக்கைலாச பரம்பரை மெய்கண்ட சிவாசாரியார் சந்தானம் ஸ்ரீநகரம் காஞ்சிபுரம் ஞானபீடம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசதேசிக சுவாமிகள் ஆதீன குருமூர்த்திகளால் கொடுக்கப்பெற்றது.

**ஸ்ரீமத் - தாயுமான சுவாமிகள்** திருவாய்மலர்ந்தருளிய **திருப்பாடற்றிரட்டு** இதற்கு முன் பல பண்டிதர்களாலே பதிப்பிக்கப்பட்டிருப்பினும் அவற்றை யுற்றுநோக்கி மிகவும் நன்றாகப்பரிசோதித்து **அரும்பதவுரை**யுடன் திருத்தமானலிபியிலே உயர்ந்தகடிதத்திலேசென்னைமாநகரம் ஜெனரல் முத்தையா முதலி வீதி ௬௬ - வது எண்ணுள்ள கிருகத்தில் வசிக்கும் மதுரைத்தமிழ்ச்சங்கத்து வித்துவானும் மெய்கண்ட சாத்திரப்பிரசாரகருமாகிய வண்ணக்களஞ்சியம் **காஞ்சி - நாகலிங்கமுதலியார்** அவர்களாலே அழகுபெற அச்சிடுவித்த புத்தகம் நோக்குந்தோறும் படிக்கும்படி மனவெழுச்சியைச் செய்தலால் ஒவ்வொரு சிவநேசரும் ஆசையோடும் வாங்கி ஓசையோடும் ஓதிச் சிவபெருமான் திருவருளைப் பெறக்கடவரென்று நம்புகின்றோம்.

இங்ஙனம்,

விஸ்வாவசு வருஷம் மாசிமீ உ௬௨ } கா. ஞானப்பிரகாசதேசிகாசாரியார், காஞ்சீபுரம்.

சிவமயம்.

# ஸ்ரீமத்தாயுமானசுவாமிகள்

## வரலாறு.

அணியாகு மென்னெஞ்சே யன்பர் தலைக்குத்
தணியா சலக்கடவு டாள்.

எந்நாட்டினும் நன்றுடைனப் பன்னூலாய்ந்த பாவலர்களாற்புகழப்படாநின்ற சோழமண்டலத்திலே, திருமறைக்காடு என்னும் தென்மொழிப்பெயரையுடைய வேதாரணியம் என்ற தெய்வத் திருப்பதியிலே, வேளாளமரபிலே சற்றேறக்குறைய இருநூற்று முப்பது வருஷங்களுக்கு முன்னே அவதரித்த கேடிலியப்பிள்ளை என்பவர் ஒருவரிருந்தனர். இவர் கல்வி கேள்விகளில் முதிர்ந்து, சிவபக்தி அடியார்பக்தி முதலியவைகளிற் சிறந்து, வடமொழி வேதங்களால் பூசிக்கப்பெற்றுத் திருக்காப்புக் கொண்டருளியதும், தென்மொழிவேதங்களால் பூசிக்கப்பெற்று அத்திருக்காப்பு நீக்கப்பெற்றதுமாய தன்னூர்ச் சிவபெருமான் திருக்கோயிற்றருமவிசாரணைத்தொழிலில் நியமிக்கப்பட்டிருந்தனர்.

அக்காலத்திலே, சோழநாட்டிலே திரிசிரபுரத்தை இராஜதானியாகக் கொண்டு அரசாண்ட *விஜயரகுநாத சொக்கலிங்க நாயகர் என்பவர் கேடிலியப்பிள்ளையவர்களின் யோக்கி

* இவர் மதுரைமாநகரையாண்ட திருமலை நாயகர்க்குப் பவுத்திரர் என்றும், இவர்பெயர் விஜயரங்க சொக்கநாத நாயகர் என்றும், இவர் சாலிவாகன சகம் 1627—வருஷமுதல் 1654—வருஷம் வரையில் அரசாண்டனர் என்றும் கூறுவாருமுளர்.

ணக்கு வல்லமை முதலியவற்றைப்பற்றிச் சில முதி
ள் சொல்லக்கேட்டு அவரை வரவழைத்துத்தன்னிட
ருபெரியசேவையில் அமர்த்திக்கொண்டனர். பிள்ளை
நம் தன்னரசன் சந்தோஷிக்குமாறு மிகவும் திறமை
இராஜாங்க காரியத்தைநடாத்திக்கொண்டுவந்தனர்.

ப்போது,வேதாரணியத்திலே இருந்த * தனது தமை
த்திரப்பேறில்லாமல் வருந்துவதைக் கண்டு மனம்
தவராய்த் தன்னுடைய அருமைப்புதல்வராகிய சிவ
ரப் பிள்ளையை அவருக்கு ஸ்வீகாரபுத்திரனாய்க் கொ
விட்டுத் தனது மோக்ஷநிலைக்கோர் சற்புத்திரன்
மென்னும் விருப்பமுடையவராய்த் திரிசிராமலையின்
வீற்றிருந்தருளும் தாயுமானேசுரரைத் தினந்தோறுந்
நிதம் போற்றி வருவாராயினர்.

ங்நாளிலே,சிவபெருமானது பெருங்கருணைத் திருவரு
ள்ளையவர்கள் † மனைவியார் திருவயிற்றிலே கருப்ப
ாகிப் பத்துத்திங்களும் நிரம்பப்பெற்றுத் தனதூரா
தாரணியத்திலே மிக்க சுபவேளையில் பெறுதற்கரிய
ர்மகவைப் பெற்றனர். தந்தையார் தனக்கு மகன்
இடம் திருமறைக்காடாயினும் அம்மகவுவிஷயமாக
ம் பெருந்தவம் பல செய்துவந்த இடம் திரிசிரபுரத்
ந்தருளியிருக்கும் தாயுமானேசுரர் திருவடியே ஆத
அக்குழந்தைக்குத் தாயுமானவர் என்னும் திருப்பெய
பெயராகவைத்துச் சுக்கில பக்ஷத்துச் சந்திரன்போல
ரு மேனியாக வளர்த்துக்கொண்டு வந்தார்.

றகு இக்குழந்தை தக்கவயதிலே வித்தியாரம்பம் செய்
பெற்று, நெடுங்கணக்கு முதலியவற்றைச் செவ்வனே

---

* இவர் பெயர் வேதாரணியப்பிள்ளை என்பார்பலர்.
† இவ்வம்மையார் கெஜவல்லியம்மாள் எனப்படுவராம்.

ஆராய்ந்துகொண்டு, நிகண்டுகற்று இலக்கியம் இலக்கணம் தருக்கம் முதலிய கருவி நூல்களையும், வடமொழியின் கண்ணதாகிய இலக்கிய இலக்கணங்களையும், வேதாகம ஸ்மிருதி புராண இதிகாச முதலிய வற்றையும் நன்கு கற்று மிகவும் வல்லவராயினர். அப்பால் *தேவாரம் திருவாசகம் திருக்கோவையார் திருவிசைப்பா திருப்பல்லாண்டு திருமந்திரம் பிரபந்தமாலை பெரியபுராணம் என்னும் சைவத்திருமுறைகளையும்; திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞானபோதம் சிவஞானசித்தியார் இருபாவிருபது உண்மைவிளக்கம் சிவப்பிரகாசம் திருவருட்பயன் வினாவெண்பா போற்றிப்பஃறொடை கொடிக்கவி நெஞ்சுவிடுதூது உண்மைநெறிவிளக்கம் சங்கற்பநிராகரணம் என்னும் † சைவசித்தாந்த சாத்திரங்களையும்; திருப்புகழ் திருவகுப்பு கந்தரந்தாதி கந்தரலங்காரம் கந்தரனுபூதி என்னும் கௌமாரத் திருமுறைகளையும் பாராயணஞ்செய்து வருவாராயினர்.

இங்ஙனம், தாயுமானவர் பல்லாற்றானும் சிறப்புற்றிருக்கும் காலத்திலே தந்தையாராகிய கேடிலியப்பிள்ளை என்பவர் சிவசாயுஜ்ய மெய்தினர். அப்பால் அவருக்கு நடைபெற வேண்டிய கருமங்கள் முற்றிலும் சைவபத்ததியின்படி ஆசாரியரால் செவ்வனே நடத்தி முடித்துக்கொண்டு, உடனே திரிசிரபுரத்து அரசனாகிய விஜயரகுநாத சொக்கலிங்க நாயகரின் வலாத்காரத்தின் மேல் தகப்பனாருடைய உத்தியோகத்தை வகித்து மன்னன்பெரிதும் வியக்குமாறு இராசகாரியங்களை மிகவும் ஒழுங்காக நடாத்திக்கொண்டு வந்தனர்.

இவ்வாறு லௌகிகத் தொழிலையேற்று நடத்திவந்த போதிலும் அவரது மனமோ ஆன்மஞானம் பெற்று உயிர்க்கோருறுதிதேடும் வழியையே நாடி நின்றமையால், இருவினை

---

*இந்நூலில் அடியார்வணக்கமும், குருமரபின்வணக்கமும் கவனிக்க.
† இச்சாத்திரம் பதினன்கும் மெய்கண்டசாத்திரம் எனப்படும்.

யொப்பு வாய்ந்து மலபரிபாகம் பெற்றுச் சத்திநிபாதமுடைய ராய், வேதாந்தத்திலே கூறப்படும் ஜகஜீவபரங்களாகிய பதி பசுபாசமென்னும் திரிபதார்த்தங்களின் அநுபவ இலக்கணங் களை ஐயந்திரிபற எடுத்துக்காட்டும் ஞானாசாரியன் எங்குளன், எப்போது கண்ணுக்குப் புலப்படுவன் என்கிற எண்ணமுடை யவராய் அக்காலத்தை எதிர்பார்த்த வண்ணமாயிருந்தனர்.

அங்ஙனமிருக்குநாளிலே, ஆன்மகோடிகளுய்யுமாறு வே தாகமப் பொருளைத் திருமந்திரமாலையாற் காட்டியருளிய திரு மூலநாயனார் மரபிலே அருளுபதேசம் பெற்றுத் திருக்கயி லாய பரம்பரைச் சந்தானகுரவருள் ஒருவராகிய அருணந்தி சிவாசாரியர் என்னும் சகலாகம பண்டிதர் ஜனனபூமியாகிய திருத்துறையூரிலே சிலபகல் தங்கியிருந்து, அப்பெரியார் கட்டளையின் கீழ் நிஷ்டைகொண்டுசிதம்பரத்திலே* மௌன குருசுவாமிகள் என்னும் திருப்பெயருடன் எழுந்தருளிய சற்குருமூர்த்திகள் தலயாத்திரை செய்வான் புகுந்து, சில ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு திரிசிரபுரம்சென்று, அங் கே திருமலையில்கோயில்கொண்டருளிய தாயுமானேசுரரைத் தரிசிக்குமாறு மாலைப்போதினில் அநுட்டானபரராய், மலை யின்மீது சென்று தக்ஷிணாமூர்த்தி சந்நிதானத்தில் நிஷ்டை கொண்டு வீற்றிருந்தனர்.

அந்நாளிரவிலே, தாயுமானவர் வழக்கப்படி அர்த்தயாம தரிசனம் செய்ய நித்திய கடன்களை முடித்துக்கொண்டு மலைக்கோயிலுக்குச் சென்று விதிவழியே சிவதரிசனம் செய் யிக்கப்பெற்றுத் தக்ஷிணாமூர்த்தியின் மாஹாசந்நிதானத்திலே வந்து, அங்கே ஞானநிஷ்டை கொண்டு வீற்றிருந்தருளும் மௌனகுருநாதனைக் கண்டு,அப்பெரியார் சக்ஷுதீக்ஷையால் தன்வயமிழந்து, அக்குருமூர்த்தியின் வயப்பட்டு, அடியற்ற மரம்போல் அவர் பாதத்திலே வீழ்ந்து, அவரை அஷ்டாங்க

* இங்கே ஒரு திருமடம் இப்பெயரால் வழங்கப்படுகின்றது.

பஞ்சாங்கமாகப் பலமுறை நமஸ்கரித்து வாய்பொத்திக் கை கட்டி நின்றுகொண்டிருந்தனர். குருமூர்த்திகளாகிய மௌன யோகிகள் ஞானநிஷ்டையினின்றும் கலைந்தகோலமுடைய வராய் அத்தளியில் ஒருஏகாந்த ஸ்தானத்தைச் சென்றடைந்தனர். தாயுமானவரும் விடாது பின்பற்றிப் போந்து ஐய! எம்பெருமானே! தமது அருமைத் திருக்கரத்திலுள்ள புத்தகம் யாது? அதனைத் திருவுளம் பற்றவேண்டும் என்றிரந்தார்.

குருமூர்த்திகள் தாயுமானவரைப்பார்த்து இங்கே நமது கருணைக்கிலக்காயினை, செம்பைத்தானே வேதிகையிட்டுப் பொன்னுக்குவதுபோல நோக்கினுலும் வாக்கினுலும் பரிசத்தாலும் பாவனையாலும் ஆகமத்தாலும் ஔத்திரியாலும் அஷ்டமாசித்திகளையும் நினக்குணர்த்திப் பதிவிளக்கம் செய்விக்கின்றும் எனக்கூறித் திருவடிதீக்ஷை செய்தருளி எல்லாமாயல்லதுமா யிருந்தபடி யிதுவென்னவிருந்து காட்டிப் பின்னுங் கூறுவாராயினர். குழந்தாய்! வானிலே பறக்கவும் மண்ணிலே நுழையவும் வானவர் வணங்கவும் மற்றொருவர் ஊனிலே புகுதவும் அவரவருளந்தனினினைந்ததை யுரைக்கவும் போனதோருயிரை எழுப்பவும் எண்சித்தியெல்லாம் கைவரினும் இவையனைத்தும் ஞானசாதகனது பாததூளிக்குமிணையாகா ஆதலின், சிவாநுபவ ஞானபோத நிலையைப்பெற்றுக் கொள்வாயாக. அதனையே விளங்க வெடுத்துரைப்பது நமது கையிலுள்ள புத்தகம். இதனை உலகம் * சிவஞானசித்தியார் என்று கூறும்.

இந்நூல், பரபக்ஷம் சுபக்ஷம் என இரண்டு பிரிவினையுடையது. முந்திய பரபக்ஷத்திலே உலகாயதன்முதல் பாஞ்சராத்திரி ஈறுகிய பரசமயிகளுடைய கோட்பாடுகளைஎடுத்துக் காட்டிச் சித்தாந்தப் பார்வையால் மறுப்புச்செய்யப்படும்.

* இந்நூலில் மௌனகுருவணக்கம் 2-செய்யுள் கவனிக்கற்பாலது.

பிந்திய சுபக்ஷத்திலே தம்மையொழிந்தொழிந்த எத்திறத்துச் சமயவாதிகளாலும் விடுக்கப்படும் ஆட்சேபங்களுக்கெல்லாம் பரபக்ஷப்பார்வையால் சமாதானஞ்செய்து சுவமதம் நாட்டுதல் செய்யப்படும். இச்சுபக்ஷத்திலே அமைந்த பன்னிரண்டு சூத்திரத்துள் முதல் இரண்டு மூன்று என்னும் மூன்றையும் பிரமாணவியலெனவைத்து முதற்சூத்திரத்தாற் உலகிற்கு நிமித்தகாரணனாகிய பதியுண்மைக்குப் பிரமாணமும், இரண்டாஞ் சூத்திரத்தாற் பாசவுண்மைக்குப் பிரமாணமும்; மூன்றாஞ்சூத்திரத்தாற் பசுவுண்மைக்குப் பிரமாணமும்; நான்கு ஐந்து ஆறு என்னும் மூன்றையும் இலக்கண வியலெனவைத்து நான்காஞ்சூத்திரத்தாற் பசுலக்ஷணமும், ஐந்தாஞ்சூத்திரத்தாற் பாசலக்ஷணமும், ஆறாஞ்சூத்திரத்தாற் பதிலக்ஷணமும்; ஏழு எட்டு ஒன்பது என்னும் மூன்றையும் சாதனவியலெனவைத்து ஏழாஞ்சூத்திரத்தாற் சாதித்துப் பெறுதற்குரிய அதிகாரமுடையது இதுவென்பதும், எட்டாஞ்சூத்திரத்தாற் சிறந்த கருவியெனப்படும் சாதனம் இதுவென்பதும், ஒன்பதாஞ் சூத்திரத்தாற் சாதனஞ்செய்யுமாறு இதுவென்பதும்; பத்துப் பதினொன்று பன்னிரண்டு என்னும் மூன்றையும் பயனியலெனவைத்துப் பத்தாஞ்சூத்திரத்தாற்பெத்த நீக்கப்பயனும், பதினொன்றாஞ் சூத்திரத்தால் முத்திப்பயனும், பன்னிரண்டாஞ் சூத்திரத்தாற் பெத்தநீக்கமும், முத்தியும் பெற்றவர்க்குச் சீவன் முத்தி நிலைக்கணிகழுமியல்பும் வகுத்துக்கூறப்படும். *

குறித்த பதிபசுபாசங்கள் மூன்றும் அஜன்ய பதார்த்தங்களும் ஒன்றிலொன்று விஜாதிகங்களுமாம். இவற்றுள் பதி சத்தாயுள்ளது. பாசம் அசத்தாயுள்ளது. பசு சத்தோடு சேர்ந்தவழிச் சத்தாயும் அசத்தோடு சேர்ந்தவழி அசத்தாயும் உண்மையில் சத்துமாகாமல் அசத்துமாகாமல் சதசத்தாயுள்ளது. இனிப் பதியாகிய முதல்வன் ஞானக்கிரியா ஸ்வரூபனாய்ப்

* இவ்விஷயங்களெல்லாம் திராவிடமாபாடியத்தில் விளக்கமாம்.

பசுவை ஞானக்கிரியைகளாலும் பாசத்தைக்கேவலங் கிரியையாலும் இயங்கப்பண்ணுவன். அங்ஙனம் பண்ணுங்கால் சுவப்பிரயோசனங் கருதாது, பரப்பிரயோசனத்தையே திருவுள்ள மிசைந்தியற்றும். நம்பெருமான் ஆணவகேவலத்திற் கிடந்த பசுக்க ளென்னும் எண்ணிறந்த வுயிர்களையும் அவரவர் வினைக்கேற்ப மாயையைத் துணையாகச் சேர்த்து வெளிப்படுத்துவன். இதனால் பதி ஏகமும் பசு பலவும் பாசம் மூன்றுமென வெளிப்படும். பாசத்தையும் பசுவையும் சேர்க்கவும் பிரிக்கவும் வல்லபதி தான் இயங்கும்போது தனது சத்தியால் அநந்தமூர்த்திகளாவன். பாசம் அநந்த ரூபமாய்ப் பதியாற் காரியப்பாட்டைப் பெறும். பசு பலயோனிகளிற் புக்குழலாநிற்கும். பதியினுடைய அநந்த வடிவங்கள் விபூதியென்று வேதங்களும், பசுவினுடைய அநந்த ஜநநங்களை வினைப்போகமென்று சுருதிகளும் பேசும். பாசத்தினுடைய காரியப்பாடுகளைச் சிருஷ்டியென்று முதனூல் செப்பும். சிவம் நிர்மலமுடையதாகலின் அதனிடத்தில் சமலரூபியாகிய உயிர்க்குற்பத்தி கூறுதல் கூடாது. பாசம் கேவலம் மலமேயாகையால் நிர்மலமாகிய சிவத்திற் காரியப்படாது. சிவனும் சிவனும் சித்தாயிருப்பினும் அவை அறிவிக்குஞ் சித்தும் அறியும் சித்துமா யிருக்கு முண்மையால், அறிவிக்கும் சித்தாகிய சிவத்தில் அறியும் சித்தாகிய உயிர்க்குற்பத்தி யுரைத்தல் கூடாது. பாசம் கேவலம் சடமாகையால் மேல் உபய சித்துக்களில் இதற்கிடமில்லை. அசித்தாகிய பாசத்தின் காரியமெல்லாம் சித்தேயாம். இடையே நின்ற உயிர் பாசத்தோடு சேர்ந்தவழிப் பந்தத்தையும் பாசத்தினின்று நீங்கிச் சிவத்தோடு சேர்ந்தவழி முத்தியையும் பெறும்.

சிவானந்தச்செல்வ! இம்முத்திநிலை *தசகாரிய அனுட்டிப்பால் சித்தியாகும், அவையாவன:— முப்பத்தாறு தத்துவங்

* இவ்விஷயம் என்னால் பதிப்பிக்கப்பட்டுவரும் பண்டாரசாத்திரம் (மூலமும் உரையும்.) பதினன்கனுள் விரிவாகக் காணலாம்.

களுடைய தொழிலைத் தனக்கு வேறா யறிதலாகிய தத்துவ ரூபமும், தத்துவங்களைச் சடமென் றறிதலாகிய தத்துவ தரிசனமும், அவைகளைச் சிவஞானத்தாலே தனக்கன்னியமென் றறிதலாகிய தத்துவ சுத்தியும், மலங்கள் நீங்கி ஆத்தும ஞானமென வறிவே வடிவென அறிதலாகிய ஆத்துமரூப மும், தனக்கெனவொரு செய்தியு மில்லையென் றறிதலாகிய ஆத்துமதரிசனமும், பெத்தத்தினும் முத்தியினும் சிவன் உப கரிக்கின்றான் என்னும் தன்னுடைய ஆணியை அறிந்து சிவ ஞானத்தாலே அழுந்துதலாகிய ஆத்தும சுத்தியும், ஆணவமலத்திலே கிடக்கிற ஆன்மாவைச் சிவன் பஞ்சகிருத் தியங்களைச் செய்து மலங்களை நீக்கி மோக்ஷத்திலே விடுவ னென்று திடமாயறிதலாகிய சிவரூபமும், சிவன் செய்யும் பஞ்சகிருத்தியங்களை ஆன்மா செய்யானென்றறிந்து ஆன்மா வைத் தரிசிப்பித்து நின்ற ஞானமாகிய சிவதரிசனமும், சிவ சத்தி செய்யும் கிருத்திய மெல்லாம் சிவனுக்குச் சற்றுமில்லை என்றறிந்து சிவசத்தியை யன்றித் தனக்கும் பிறருக்கும் சற் றும் செய்தியில்லை என்றுதெரிந்து திருவருளோடு அழுந்துத லாகிய சிவயோகமும், சிவத்தோடிரண்டற நின்று அத்து வித சாயுச்சிய ஆனந்தத்தைப் புசித்துவாழ்தலாகிய சிவபோக முமாம். இதுவே சுத்தாத்துவிதமாம். இவ்வத்துவித மொன் றனையே * [illegible]" என்று சுருதிகொண்டாடி மகிழும்.

மாணவக! இந்நிலையானது பூர்வ ஜென்மாந்திர புண்ணிய முற் றவர்க்கே கைவல்லியமாகும். இத்தகைய சிவானுபூதியினை நீயடைதற்கேற்ற இலக்கணங்களை வாய்ந்துள்ளாய். ஆகலின் ஆண்டவனருளால் அடைக என ஆசிர்வதித்து, மெய்கண்ட சந்தான சாத்திரங்களின் உண்மைகளையும் சம்பிரதாயங்

* இ—ள். அம்மனத்தின் இலயத்தினால் சுத்தாத்வைதம் சித் திப்பது. பேதமற்றிருந்தால் ஈதே உயர்தத்துவமாம். என்க.

களையும் ஆழ்ந்தகன்ற சித்தாந்த நயங்களையும், பொருளுட்பங்களையும் சாங்கோபாங்கமாக உபதேசித்தருளினர். இதன் வழியானே தாயுமானவரும் வைதிக சைவ சுத்தாத்துவித சித்தாந்தமே உண்மைநிலை யென்பதும், அதிற் கூறப்படும் சிவபெருமானே பரமபதியென்பதும், அவருடன் இரண்டறக் கலத்தலே அத்துவித முத்தியென்பதும் நன்குணர்ந்தனர்.

இப்பால், மௌனகுருசுவாமிகள் தாயுமானவரைநோக்கி ஏ மாணவ! இங்கு இன்னும் சிறிது காலம் இலௌகிகத் தொழிலை நடாத்திக்கொண்டிருந்து இல்லறத்தொழுகிப்புத்திரனைப் பெறுதி பின்னர் யாம்வந்து நிஷ்டைகூடும் வழியைத் தெரிவிப்போம் என்று கட்டளையிட்டெழுந்தார். எழுந்தகுருமூர்த்திகளின் பிரிவையாற்றாது மிகவும்வருந்திநின்ற தாயுமானவரை அக்குருநாதன் மீண்டும் பார்த்து நீ சிறிதும் கவலைகொள்ளவேண்டாம். நம்உபதேசவழியே அநுட்டானபரனாய் ஒழுகிக்கொண்டு*சும்மா இரு நாம் சிலபகலில் உன்னை நிச்சயமாய்ச் சந்திப்போம் என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுப் போயினர். போயினும் தாயுமானவர் மனதில் மௌனகுருசுவாமிகள் திருவுருவமும் அவர்திருவாய்மலர்ந்தருளிய "சும்மா இரு" என்ற சொல்லும் அச்சொல்லின் பொருளும்வேரூன்றி நிலைத்துவிட்டன. நிலைத்துவிடுதலும் தாயுமானவர் ஆசிரியரிடத்திற் பெற்றுக்கொண்ட உபதேசப்பொருளைச் சிந்தித்து அந்தவழியே நடந்து வருவாராயினர். இவ்வாறுசிந்தித்து வரலால் அவருக்கு இராஜாங்கத் தொழிலிலும் மற்ற இலௌகிகத் தொழிலிலும் விரக்திதோன்றி அறவே அத்தொழில்களை மறந்தொழித்தனர்.

அப்பால், விஜயரகுநாத சொக்கலிங்கநாயகர் என்னும் மன்னவன் தாயுமானவருடைய திவ்விய குணங்களை நன்றாக

---

* இது மஹாவாக்கியமென்பது "சும்மா இரு" என்று கட்டளையிட்டருளிய கந்தரனுபூதி யாலும் உணர்க.

அறிந்திருப்பவனுதலாலும், நாளுக்குநாள் அப்பெரியார் ஆன்மஞானம் நிரம்பப் பெற்று முதிர்ச்சியடைந்து வருகின்றார் எனப் பலரால் கேள்விப்பட்டு மிருக்கின்றபடியாலும், அவரிடத்தில் அன்பும் அச்சமும் அதிகரிக்க அவரிடத்தேசென்று சுவாமி! தேவரீரது மகிமையை அறியமாட்டாது சாஸ்வதமில்லாத இவ்வாசாங்கத் தொழிலில் தங்களை நியமிக்கலானேன். இவ்விஷயமாக அடியேனை மிகவும் மன்னித்து இனிமேல் தேவரீருக் கவஸ்யமான பணி யாவையும் யானே செய்யும்படி கட்டளையிட்டருள வேண்டும் என்று முறையிட்டு நின்று, அந்நாள் முதல் தனது வாழ்நாள் முற்றிலும் அவர் மனம் பெரிதும் சந்துஷ்டியடையும்படி நடந்துவந்தான். பின்னுளிலே அரசனும் ஆன்மஞானம் பெறும் எண்ணமுடையவனுய் அதிதீவர பக்குவத்தை அடைந்து தாயுமானவரிடத்தே வைத்தபத்தியின் முதிர்ச்சியால் உலக காரியத்திலே வெறுப்படைந்து சித்தாந்த ஞானநிஷ்டனுய்ப் பன்னுளிருந்து சிவசாயுஜ்யமெய்தினுன்.

பிறகு, அரசனுக்காக வேண்டிய கர்மாதிகள் முற்றிலும், புத்திரசந்தான மில்லாமையால் அரசனது மனைவியாராகிய * மீனுக்ஷியம்மையார் செய்து முடித்து இராஜாங்கக்காரியத்தில் பிரவேசிக்கலாயினள். அப்போது மீனுக்ஷி யம்மை தாயுமானவரைப் பலமுறையும் பார்த்துளா ளாகலின் கண்ணைத்தானே கவரும் அழகினர் இவரை ஒத்தவர் மற்றெவரையும் காணுது அவர்மீது மோகமுற்று அவரைமரியாதையுடன் வரவழைத்துத் தக்க ஆசனத்திலெழுந்தருளச்செய்துதன்னுடைய தகாத செய்கைக்கு இணங்கும்படி விண்ணப்பித்து என்னிராஜ்ஜியத்திற்குத் தேவரீரைத் தலைவராகக் கொண்

* இவ்வம்மை சாலிவாகனசகம் 1654 - வருஷமுதல் 1659 - வருஷம் வரையில் அரசாண்டனள் என்பர் டெயிலர்துரை.

டேன் என்னுடைய உடல் பொருள் ஆவி மூன்றினையும் தந்துவிட்டேன் என்று*சொல்லிக்கொண்டு நின்றார். மீனாக்ஷி யம்மை எண்ண மின்னதெனை நன்றாக அறிந்துகொண்ட தாயுமானவர் அவளுக்கு எந்தப்படி புத்திவருவிக்க வேண்டுமோ அந்தப்படி இனிமையாக உபதேசம் செய்துவிட்டு, அந்த இடத்திலிருந்தும் வெளியேவந்து இனி இத்திரி சிராபுரத்தி லிருந்தால், தன் பெருமைக்குச் சிறுமை வருமென்றெண்ணி அப்போதே அந்நகரைவிட்டுப் புறப்பட்டுத் * தேவையம்பதி யைச் சென்றடைந்து வசித்து வரலாயினர்.

இங்கே நடந்த விஷயங்களனைத்தையும் கேட்டுணர்ந்த தாயுமானவரின் தமையனாகிய சிவசிதம்பரப்பிள்ளையவர்க ளும், அவர் சிறியதாயார் குமாரராகிய அருளையப்பிள்ளையவ ர்களும் தமதூராகிய வேதாரணியத்தினின்றும் புறப்பட்டுத் தேவையம்பதியைச்சென்று தாயுமானவர் வசிக்குமிடத்தைத் தெரிந்துகொண்டு, அங்கே போய் அவரை அணுகிச் சந்ததி விளங்கும்படி திருக்கலியாணம் செய்தருளவேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டனர்கள். தாயுமானவருக்குச் சம் சாரபந்தத்திற் கட்டுப்பட்டுக்கிடக்க இஷ்டமில்லாமற் போன போதினும், மௌனகுரு சுவாமிகளின் கட்டளையையும் தமை யனாது வேண்டுகோளையும் மறுத்தற்கஞ்சினவராய் ஒருவா றிசைந்து நின்றனர். உடனே சிவசிதம்பரப்பிள்ளையவர்களும் அருளையப் பிள்ளையவர்களும் தாயுமானவரை அங்கேயிருந் தும்கூட்டிக்கொண்டு வேதாரணியம் போய்ச்சேர்ந்தார்கள்.

அப்பால், சிவசிதம்பரப்பிள்ளை யவர்கள் தாயுமானவருக் குத் திருமணஞ்செய்யும் தொழிலிலே கருத்துடையராய்த் தன் மரபுக்கொத்த மரபு ஒழுக்கம் செல்வம் முதலிய வற்றால் குறைவற்ற குடியிற்பிறந்து நற்குணம் நற்செய்கை அறிவு

* தேவை என்பது இராமேச்சுரம்.

ஆசாரம் அடக்கம் அழகுகற்புடைமைமுதலிய அமைந்த கன்னி எங்குள்ளிகள் என்று தேடிக்கொண்டிருந்தார். அப்படியிருக்கும்போது அவ்வேதாரணியமற்றோனே உத்தம குலத்திற்றோன்றி மட்டுவார் குழலம்மை என்னும் பெயருடன் அழகால் இலக்குமியையும் கற்பால் அருந்ததியையும் புறங்கண்டு வளர்ந்துகொண்டு வந்த பெண்மணியாரைச் சிவசிதம்பரப்பிள்ளை அவர்கள் தாயுமானவருக்கு மணம்பேசி மணவினைக்குரிய காலமோரையும்நிச்சயித்துச்சுற்றத்தார்க்கும் நட்பாளர்க்கும் மணவோலைபோக்கித் திருக்கலியாண மண்டபம் சிறப்பாகச் செய்து குறித்தநாளிலே அந்தணர்களும் உறவினர்களும் சினேகிதர்களும்குதூகலங்கொண்டு ஆசிகூறத்திருக்கலியாண மஹோற்சவத்தை வேதாகம விதிப்படி நடத்தி முடித்தனர்.

பின்பு, தாயுமானவர் தனது மணாட்டியான நங்கையாரோடு அளவளாவி இல்லறத்திருந்து*"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றொனென்றாங் - கைம்புலத்தா றோம்பறலை" என விதித்திட்ட வண்ணம் இருவர் கருத்து மொத்து ஐம்பெரும் வேள்விகளையும் வழுவாது நடத்திக் குடிமுறை பிறழாது பாதுகாத்து வருகின்ற நாளில், அவர்தம் மனைவியார் திருவயற்றில் கருப்பமுண்டாகிப் பத்துத்திங்களும் நிரம்பப் பெற்று ஓர் ஆண்மகவை ஈன்றுவைத்துச் சிவபத மடைந்தார் தாயுமானவர் பத்தினியாருக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளைச் செவ்வனே செய்வித்து முடித்துக்கொண்டு தன் தநயருக்குக் கனகசபாபதி என்று திருநாமம் வைத்து மிகவும் அருமையாகவே வளர்த்துக்கொண்டு வந்து வித்தியாரம்பமும் செய்வித்துப் பலதுறைகளிலும் வல்லவராகும்படி முயர்ச்சி பல செய்து வந்தனர்.

அக்கால், முன் தாயுமானவரை விட்டுப்பிரிந்த மௌன குருசுவாமிகள் திருமறைக்காட்டை அடைந்து அங்கே

---

* திருக்குறள், இல்வாழ்க்கை. 3-வது செய்யுள்.

வதிந்தவரும் தாயுமானவரின் அதிதீவிரபக்குவத்தையறிந்து அவரை அருகே வரவழைத்துச் சைவசம்ஸ்காரம் பலவுஞ் செய்து துறவுகொள்ளும்படி ஆஞ்ஞாபித்துச்*சிவபூஜைஎழுந்தருளப் பண்ணிக்கொடுத்து ஏமாணவ! நீ திருமஞ்சனம் திருச்சாந்து மங்களாக்ஷதை பத்திரபுஷ்பம் தூபதீபங்கள் சுகந்தவர்க்கம் முதலிய பூஜைத் திரவியங்களை யெல்லாம் குறைவறச் சம்பாதித்துக்கொண்டு நின்மல சித்தத்தோடு கோமயத்தினால் திருமெழுக்கிட்டுத் தூப தீப தோரண முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டுள்ள பூஜாக் கிரகத்துள் வேதிகைக்கு எதிரே சுகாதனத்திருந்து குரு நமஸ்காரஞ்செய்து சங்கற்பித்து விக்கினேசுவரபூஜை கலசபூஜை திக்குபந்தனம் தாளத்திரயம் முதிரைக்காட்டல் சுத்தாசமனம் தொடுமிடந்தொடுதல் கரநியாசம் அங்கநியாசம் திருநீறணிதல் ஆஞ்செழுத்தோதல் ஆகவற்பணிதல் தருப்பைமுதலிய ஞானாங்கங்களோடு கூடிய சிவபூஜையைச் சிவாகமவிதிப்படி கிரமமாகச் செவ்வனே செய்து முடித்து அச்சிவபூஜைக் கரணங்களின் ஞானார்த்த உண்மையை உள்ளதநிலையுறுதியாக அமைத்து வெளிப்புலன்களிலே சிந்தைநாடாவண்ணம் சரீரத்தைச் சிரசு கழுத்து இடைமுதலிய அவயவங்கள் நேராகத் தம்பத்தைப்போல அசையாது நிறுத்தி இடைபிங்கலைகளின் வழித்

---

* சிவபூஜையின் சிறப்பை ருக்வேதம் "𑌤𑌵 𑌶𑍍𑌰𑌿𑌯𑍇 𑌮𑌰𑍁𑌤𑍋 𑌮𑌰𑍍𑌜𑌯𑌨𑍍𑌤 𑌰𑍁𑌦𑍍𑌰 𑌯𑌤𑍍𑌤𑍇 𑌜𑌨𑌿𑌮 𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂" "𑌪𑌦𑌂 𑌯𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍁𑌪𑌮𑌂 𑌨𑌿𑌧𑌾𑌯𑌿" எனக்கூறிற்று. இதன்பொருளை "[illegible] 𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁 [illegible]" "𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 [illegible] 𑌪𑌦𑌂" எனவரும் பராசரபுராணத்தானறிக. அது உருத்திர சம்பந்த மானதும் சுத்தமும் மனதை வியப்பிப்பதும் ஆச்சரியகரமானதும் சிலாமயமுமான இலிங்கத்தை மஹாவிஷ்ணுவானவர் நன்கு பூசித்துச்சிறந்த பதத்தைப் பெற்றார் என்பதாம்.

தாக இயங்காநின்ற பிராணவாயுவை அம்சகாயத்திரியாகிய அஜபாமந்திரத்தினலே தடுத்துச் சுழுமுனை நாடியின்வழியாகச்செலுத்தி இருகண்களும்புருவமத்தியே நாடினவண்ணமாகச்சிதாகாயமாகிய ஆன்ம நிலய அந்தர்முக நாட்டத்தில்மனதைநிறுத்தித் தமேத தியானமாகச் சமாதியிலிருந்து சதாநிஷ்டைபுரிந்து வருதி. இதுவே மெய்ஞ்ஞான நிட்டையாகியசிவயோகமாம். அங்ஙனம் சதாநிட்டையி லிருந்து இடையறாது அநுசந்தானம்பண்ணி வருங்கால் அந்தர் முகத்திலே மணி கடல் மேகம் மத்தளம் பேரிகை வீணை முதலிய நாதவொலிகளும், சூரியன் சந்திரன் நக்ஷத்திரம் மின்னல் முதலியவிந்து ஒலிகளும் தோன்றிடும். அவற்றுள் அழுந்தாது ஆன்மாவின் கண் அழுந்தி உறைத்து நிற்றல் வேண்டும். அப்போது அகண்டபரிபூரணகார சிற்சுகோதய சின்மயானந்த வஸ்துவாகிய சிவோதயப் பிரகாசமுண்டாகி உன்னை விழுங்கி நிற்குமாதலால், ஆண்டு நின்செயலொழிந்து நீ அஃதானவை. யாண்டும் சிவமொன்றையே காண்பாய். இதுவே சாமவேத சாந்தோக்கியோப நிடத * மஹாவாக்கிய உண்மைப் பொருளாம். இந் நிலையிலே சிறிதும் சலியாது நிலைபெறுக என்று கட்டளையிட்டுப்போயினர்.

ஆசிரியர் சென்றதும், தாயுமானவர் அன்றுமுதல்துறவுக்குரிய குணங்களோடு கௌபீனதாரியாய் வெளிப்பட்டு மௌனகுருயோகிகள் திருவாக்கின்படி சதாநிட்டைகொண்ட கோலத்தோடு சிவபூஜாதுரந்தரராய்க் காசி காஞ்சி அருணை சிதம்பரம் திருவாரூர் மதுரை திருப்பரங்குன்றம் முதலிய திவ்விய ஸ்தலங்களைத்தரிசித்துக்கொண்டு திருவிராமேச்சுரம் போய் அங்கே மழையில்லாமல்மிகவும்பசியுடன்வருந்திநின்ற அவ்வூர்ச்சனங்களின் வேண்டுகோட் கிசைந்து மிகுதியும்

* தத்வமஸி. தத் - அது, த்வம் - நீ, அஸி - ஆகின்றாய்.

மழைபெய்யும்படி பரசிவனை மனதில் நினைத்து "சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத் - தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனி - லைவரைவென் - றுணர்ந்த வின்பி லழுந்துவது முத்தியெனில் - வானங்காண் பெய்ம்மின் மழை" என்னும் திருவெண்பாவைப்பாடி வேண்டிய அளவில் மழைபெய்து உலகம்க்ஷேமத்தை நிலைக்களமாகக்கொள்ளும்படிசெய்தார். இச்செய்கையை உற்றுணர்ந்த அவ்விராமேசுரத்துச் சனங்களும் மற்றையோர்களும் தாயுமானவரிடத்தில் அச்சம் பெரிதுடையராய் அன்பு கொண்டு அவர் திருத்தொண்டிலேயே காலத்தைப் பெரிதும் போக்கிவந்தார்கள்.

அந்நாளில், ஸ்ரீ தாயுமானசுவாமிகள் ஓர்ஏகாந்த ஸ்தானத்தில் சதாநிஷ்டைகொண்டு வசித்துவரும் எண்ணமுடையவராய், சேதுமுதலிய புண்ணிய தீர்த்தங்களிலே விதிப்படி ஸ்நானஞ்செய்து இராமநாதனையும் * பர்வதவர்த்தனியையும் பணிந்து விடைபெற்றுக்கொண்டு, இராமநாதபுரம் போய்ச் சேர்ந்து அந்நகரைச் சேர்ந்த இலக்ஷ்மிபுரம் என்னும்அரிய பகுதியிலே ஒரு நந்தவனமத்தியில் பரமானந்த நிட்டையில் வீற்றிருந்தருளி தம்மை விட்டுப்பிரியாத அருளையர் கோடிக்கரை ஞானியார் முதலிய உத்தம மாணுக்கருக்கு உபதேசஞ் செய்து சிவத்திலே இரண்டறக்கலந்தனர். அக்காலத்தில் அவரடியவர்கள் தோத்தரித்த செய்யுட்களிற்சில.

## அருளையசுவாமிகள்.

உலகினுக் கணியா மிராமநா தபுரத்
துயர்நகர வாவியின் குணபால்
மலர்நிறை வனத்திற் சிவத்துறு நிட்டை
மருவிமெய் பொருவிலே தாந்தத்

---

* இந்நூலிலே வரும் மலைவளர்காதலி என்னும் தோத்திரம் இவ்வம்மையாரைக் குறித்ததேயாம்.

இலகிய பொருளாய் வானமாய் நிறையு
மெந்தையே யெனதுயர் தரும்போய்
நிலையுற நினது திருவரு ளளிப்பாய்
நின்மலா னந்தமே போற்றி.

## கோடிக்கரை ஞானிகள்.

துகளறு சாலி வருடமா யிரத்தைஞ்
ஞூற்றெட்டெண் பத்தொன்று தொடரு
மிகுசுப கிருதாம் வருடத்தை மாதம்
வெணமதி வாரநாள் விசாக
மகிமைசேர் பூரணத் திதியினி லருத்த
மண்டல சமையத்திற் கங்கை
திகழ்கரை யதனிற் றாயுமா னவனார்
சிவத்தினிற் கலந்தநற் றினமே.

சுவாமிகள் தம் அநுபவங்களையெல்லாம்திரட்டி அப்போதைக்கப்போது அதிஅற்புதமயமான திருப்பாடல்களாகக் கட்டளையிட்டருளினர். அவ்வருட் பாடல்களை யெல்லாம் அவருடன் நிழல்போன்று பின்றொடர்ந்திருந்த அருளையர் முதலாய மாணவர்கள் எழுதித்தொகுத்துவைத்திட்டார்கள். இத்திருப்பாடற்றிரட்டு பிற்காலத்திலே அருளையரிடத்தே தத்வோபதேசம் பெற்றுக் கொண்ட தாயுமானவருடைய புத்திரராகிய கனகசபாபதிப்பிள்ளை அவர்களால் பலர்க்கும் பிரயோசனப்படலாயிற்றென்பர்.

இப்பெரியார், சமயாசாரியசுவாமிகளிடத்தும், சந்தான குருமூர்த்திகளிடத்தும், மெய்கண்ட சந்தான முதியோர்களிடத்தும்,*கௌமார பரமாசாரிய சுவாமிகளாகிய அருணகிரி

---

* இச்சமயப் பிரபாவம் திருப்புகழார்விஜயம் என்னுநூலிலே பெறக்கிடக்கின்றதாம்.

சிவமயம்.

# அரும்பதவிளக்கவுரை.

எல்லாஞ் செயற்கு மிடமாகு மென்னெஞ்சே
கல்லார வெற்பன் கழல்.

## அ

அகண்டிதாகாரம் - வியாபகவடிவம். பாட்டு - 29, வரி - 11.

அகம் - மனம். 69,6.

அகிலம் - எல்லாம். 1,4.

அகிதம் - இதமின்மை. 89,11.

அகோசரம்-விஷயாதீதம். 47,9.

அங்கணன் - அழகிய கிருபைக் கண்ணன். 262,3.

அங்கம் - உடம்பு. 26,1.

அசங்கம் - தனிமை. 47,3.

அசனி - இடி. 405,2.

அசராசரபேதம் - தாபர சங்கம வேறுபாடு. 29,2.

அசபாநலம்-அஜபா+அநலம் அஜபாமந்திர உச்சாரணத்தினால் விளங்கும் அக்கினி. 116,10.

அஞ்சலி - கைகூப்பிச்செய்யும் நமஸ்காரம். 1,16.

அஞ்சனம் - குற்றம். 71,9.

அஞ்சுருவாணி அச்சாணி. 45,7.

அடவி - காடு. 4,13.

அடிக்குடி-அடிமைக்குடி. 358,7.

அடுசோறு-சமைத்தசோறு. 50,7.

அடைக்காய் - பாக்கு. 110,11.

அடையார் - பகைவர். 455,1.

அணிமா - அஷ்டமாசித்திகளிலொன்று. 142,2.

அணுபக்ஷம் - ஆன்மவர்க்கம். 41,10.

அண்டம் - திருவனுக்குட்பட்ட உலகம். 7,1.

அண்டப்பரப்பு - உலக விஸ்தீரணம். 39,13.

அத்துவா - வழி; அவை-மந்திரம், பதம், அக்கரம்,புவனம், தத்துவம், கலை என்பன. 1245,1.

அத்துவிதம் - இரண்டன்மை. ந + துவிதம் = அத்துவிதம். பாணினீயம் ௬ - வது அத்தியாயம், ௩ - வது பாதம், ௭௩- வது "நலோபோ நஞ:" என்னுஞ் சூத்திர விதியால் நகாரம் அகாரமாயிற்று. 3,1.

அநந்தம் - முடிவற்றது. 2,1.

அநாதி - ஆதியின்மை. 3,4.

அநுசூதம் - சித்தி, தொடர்ச்சி. 47,12.

அநுசாரி - அநுசரிப்பவன். 4,5.

அந்தகன் - யமன். 104,6.

அந்தரம் - ஆகாயம் 39,3.

அந்தம் - முடிவு, 24,1.

அந்தணர் நால்வர் - ஜநகாதிகள். 174,1.

அரோகதிடகாத்திரம் - நோயில்லாத உறுதியாகிய சரீரம். 459,1.

அருள்தையல் - அருட்சத்தி. 252,3.

அருள்வெளி - கருணைவடிவாகிய ஆகாயம். 1,3.

அலகை - பேய். 122,1.
அலரி - சூரியன், 86,2.
அல் - இருள். 119,9.
அவம் - வீண்காரியம். 104,8.
அவசம் - பரவசம். 33,12.
அவசரம் - சமயம். 39,4.
அவலம் - வீண். 104,8.
அவித்தை - அஞ்ஞானம். 152,5.
அவிகாரம்-விகாரமற்றது. 35, 2.
அவிழ்தல் - விரிதல். 110,1.
அவ்வியம் - பொறாமை. 28,1.
அழுக்காறு - பொறாமை. 317,3.
அளம் - நெய்தனிலம். 274,3.
அளவை - பிரமாணம். 133,2.
அளகேசன் - அளகாபுரிக்கரசன், குபேரன். 13,3.
அளவளாவல் - கலத்தல். 46,8.
அளி - வண்டு. 58,1.
அனுமானம்-ஓர் அளவை. 106,4.
அறிதுயில்-ஞானநித்திரை .6,11.
அறிவாம்வெளி-ஞானாகாசம். 23,2
அறிவார்கள்-சிவஞானிகள். 38,3.
அறிவு - ஞானம். 40,7.

## ஆ

ஆகாரம் - ரூபம். 132,1.
ஆக்கை - உடம்பு. 27,1.
ஆதரவு - இச்சை. 35,5.
ஆதாரம் - இடம் 109,9
ஆதி - முதல். 3,4.
ஆதேயம் - இடத்தினிகழ் பொருள். 109,9.
ஆநந்தம் - சுகம். 1,2.
ஆப்தர்-உண்மைகூறுவோர். 89,2.
ஆமலகக்கனி - நெல்லிக்கனி. 233,3.
ஆர்வம் - பேரன்பு. 64,7.
ஆர்த்தல் - ஆரவாரித்தல், சந்தோஷித்தல். 55,8.
ஆலம்பம் - ஆதாரம். 3,7.
ஆலம் - விஷம். 12,2.
ஆவி - உயிர். 76,3.
ஆழாழி-ஆழமுள்ளகடல். 12,1.
ஆறுமை - கெடாமை. 179,5.

## இ

இகபரம் - இம்மை மறுமைகள். 17,1.
இச்சாசுதந்தரம் - அவாவுரிமை. 35,11.
இதசத்ரு-அனுகூலவிரோதி. 8,8.
இதயவெளி - இருதயாகாசம். 45,11.
இந்திரசாலம் - 19,1.
இயமம் - அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், தயை, ஆர்ஜவம், க்ஷமை, திருதி, மிதாகாரம், சௌசம் என்பன. 127,1.
இரவி - சூரியன். 53,12.
இரக்ஷை - காப்பாற்றுதல். 110,14.
இரசவாதவித்தை - செப்புமுதலிய வுலோகங்களைப் பொன்னாக்கும் வித்தை. 13,5.
இராவணாகாரம் - பயங்கரம், அந்தகாரவடிவம். 45,10.
இருப்பன - மரமுதலியன. 5,2.
இலக்கு - லக்ஷியம். 46,14.
இம்பர்-இவ்வுலகத்தார். 204,3.
இழுக்கு - தீச்சொல். 56,3.
இற்றைவரை-இன்றளவும். 87,4.

## ஈ

ஈடு - தகுதி. 35,10.

ஈதல்-கொடுத்தல்,கொடை.40,7
ஈறு - முடிவு. 158,5.

உ

உகிர் - நகம். 65,1.
உபரதி - ஒழிவு, வெறுப்பு. 96,5.
உபசாந்தம் - அமரிக்கை, சித்த சமாதானம். 5,7.
உபலம் - படிகம். 123,10.
உம்பர் - மேலுலகத்தார். 378,2.
உயிர்க்குயிராய் - ஆன்மாவுக்குள் அந்தரியாமியாய். 1,5.
உரகன் - ஆதிசேடன். 58,11.
உலப்பு - கெடுதல். 275,2.
உலகன்னை-லோகமாதா. 31,13.
உலையவிடுதல் - அலையவிடுதல். 82,13.
உலோகாயதன் - ஒருசமயி, நாஸ்திகன். 40,10.
உவகை - மகிழ்ச்சி. 23,6.
உவட்டுதல்-தெவிட்டுதல்.27,11.
உழை - இடம். 361,7.
உறுக்கல்-தண்டித்தல். 31,10.
உன்மத்தம் - பயித்தியம். 46,9.
உன்மனி - ஓர்சத்தி. 231, 1.

ஊ

ஊகமநுபவவசனம்- சுருதி யுக்தி அநுபவம். 91,7.
ஊகம் - யுத்தி. 11,5.
ஊண் - உணவு. 102,6.
ஊர்வன-எறும்பு முதலியன. 5,1.
ஊற்றம் - கெடுதி. 1371,2.

எ

எண் - தருக்கம். 52,13.
எழுத்து - இலக்கணம். 52,13.
எழுநா - அக்கினி. 36,4.

ஏ

ஏகதத்துவ சொரூபம் - ஒன்றேயாகிய உண்மைவடிவம். 8,4.
ஏதம் - குற்றம். 35,9.
ஏழை - அறிவிலி. 76,2.
ஏழையர்கள் - மாதர்கள். 97,13.

ஐ

ஐம்பூதம்-பஞ்சபூதங்கள்; அவை - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன. 16,1.
ஐயன் - யாவராலும் பூஜிக்கப்படுவோன், அழகன். 239,1.

ஒ

ஒக்கல் - உறவினர். 387,3.
ஒருங்குதல் - அடங்குதல். 99,5.

ஓ

ஓலக்கம் - சபை. 1186,2.
ஓதிமம் - அன்னம். 159,5.
ஓர்தல் - ஆராய்தல். 223,3.

ஔ

ஔவியம் - பொறாமை. 28,1.

க

ககனம் - ஆகாயம். 56,14.
கங்குல் - இராத்திரி, வரம்பு. 1,13.
கச்சு - இரவிக்கை. 1133,1.
கடுவெளி-வெட்டவெளி.1208,2.
கணம் - க்ஷணம், இமைப்பொழுது. 7,11.
கட்செவி - பாம்பு. 118,4.
கண்ணி - வலை. 1128,2.
கண் - இடம். 60,5.
கண்டு - கற்கண்டு. 64,2.
கதி - மோக்ஷம். 52,14.
கந்தமூலம் - கிழங்கு. 104,10.
கந்துகம் - கட்டுத்தறி. 118,1.
கரணங்கள் - அந்தக்கரணங்கள்; அவை - மனம், புத்தி, சித்தம், அகங்காரம், என்பன. 7,10.

# அரும்பதவிளக்கவுரை.

கரமுகிழ்த்தல் - கைகுவித்தல். 23,7.
கருணாகரம் - கருணைக்குப்பிறப்பிடம். 43,9.
கருப்பு - கரும்பு. 1281,1.
கருவறை - கருப்பவீடு. 31,1.
கருந்தாது - இரும்பு. 342,1.
கர்த்தவியம் - செய்கை. 89,9.
கலிப்பேய் - வறுமைப்பிசாசம். 557,1.
கலையாதி - காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்பன. 48,3.
கலையுரி - மான்தோல். 65,9.
கவ்வுமலம் - உயிர்களைப்பற்றுகிற மும்மலங்கள். 28,9.
கவ்வை - பொறாமை. 129,5.
களை - அழகு. 1452,53.
கறங்கு - காற்றாடி. 63,3.
கற்பங்கள் - ஊழிகாலங்கள். 36,11
கன்னல் - கரும்பு. 64,1.

கா

காதலித்திடுதல் - ஆசைப்படுதல். 42,4.
காதிகதை - ஞானவாசிட்டத்திலுள்ள ஓர்கதை. 130,11.
காயம் - உடம்பு. 32,1.
காமதேனு - தெய்வலோகப்பசு. 43,5.
காயகற்பம் - தேகசித்தியின்பொருட்டுண்ணும் அவுஷதம். 13,7.
கார் - மேகம். 2,9.
கார் - கருமை. 31,1.
காலூன்றல் - வேரூன்றல். 60,7.
கால் - காற்று. 84,11.
கானகம் - காடு. 43,1.
கானலினீர் - கானலிலே உண்டு போல் தோன்றுகிற ஜலம். 19,1.

கி

கிருமி - புழு. 46,2.
கிள்ளாக்கு - அதிகாரம். 62,4.

கீ

கீண்டெழுதல் - கிழித்தெழுதல். 392, 6.

கு

குடக்கு - மேற்கு. 101,1.
குடிலம் - வஞ்சகம், கொடுமை. 301,5.
குணக்கு - கிழக்கு. 101,1.
குண்டலி - குடிலாசத்தி. 60,11.
குத்திரம் - பொய். 1231,1.
கும்பி - நரகம். 122,7.
குருமணி - ஒளியுள்ள இரத்தினம். 44, 9.
குலாலன் - குயவன். 122,10.
குருமௌனி - மௌனகுரு. 19,7.
குழைதல் - வாடுதல். 55,1.
குளிகை - மாத்திரை. 32,5.

கூ

கூற்று - யமன். 255,1.
கூரிருள் - மிக்கவிருள். 310,5.

கெ

கெசம் - யானை. 62,1.

கே

கேவலம் - மறப்பு. 336,1.
கேவலநீதி - முத்திமார்க்கம். 106,11.

கை

கைப்பரிசு - சிறுதெப்பம். 112,9.
கைம்மாறு - பிரதியுபகாரம். 370,4.
கைதவம் - பொய்யொழுக்கம். 61,5.

கைவல்லியம் - மோக்ஷம். 47,2.

## கொ

கொட்டம் - அகந்தை, கொடுமை. 125,1.
கொந்து - கொத்து. 110,1.

## கோ

கோசரம் - விஷயம். 17,4.
கோடுதல் - பிசகுதல். 114,5.
கோது - குற்றம். 15,5.
கோத்தல் - கலத்தல். 16,5.
கோள் - குற்றம். 148,7.
கோஷ்டி - கூட்டம். 67,9.

## கௌ

கௌவை - பழமொழி. 129,5.

## ச

சகலம் - நினைப்பு. 336,1.
சகளம் - ரூபம், 71,10.
சகோரபக்ஷி - நிலாமுகிப்புள். 44,2.
சக்ரதரன் - சக்கரத்தைத்தரித்தவன் 57,5.
சங்கநிதி - சங்கின் வடிவான பொக்கிஷம். 58,3.
சங்கரன் - சுகத்தைச்செய்பவன். 26,5.
சங்கற்பம் - விருப்பம், நினைப்பு. 25,5.
சங்கித்தல் - ஆக்ஷேபித்தல். 85,10.
சங்கேதம் - கட்டுப்பாடு. 94,8.
சங்கை - ஆக்ஷேபம். 85,10.
சஞ்சலரகிதன் - அசைவில்லாதவன். 47,3.
சஞ்சீவி - உயிர்ப்பிக்குமூலிகை. 28,11.
சடக்கை - தேகம். 101,13.
சடிலம் - சடை. 286,1.
சடர் - மூடர். 816,1.
சதசத்து - ஆன்மா. 133,4.
சதிர் - வல்லமை. 578,5.
சந்ததம் - சதாகாலம். 8,1.
சந்தவாடை - சந்தனமணமுள்ள காற்று. 110,4.
சப்தபூமி - ஏழாகிய அஞ்ஞான பூமி; அவை - சாக்கிரம், மேற்சாக்கிரம், மஹாசாக்கிரம், சாக்கிரசொப்பனம், சொப்பனம், சொப்பனசாக்கிரம், சுழுத்தி என்பன. 92,5.
சப்தமேகங்கள் - ஏழுமேகங்கள்; அவை - சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன, 12,7.
சப்தாதி - சப்தம், ஸ்பரிசம், ரசம், ரூபம், கந்தம் என்பன. 48,3.
சமயகோடி - பலவேறுமதங்கள். 1,7.
சமரசம் - நடுவாந்தன்மை. 8,4.
சம்பிரதாயம் - உபாயம், வழக்கம். 34,4.
சம்பு - பரமானந்தரூபி, சுகத்தையுண்டாக்குபவர். 26,5.
சம்புபக்ஷம் - சிவவர்க்கம். 41,10.
சர்வேசன் - எல்லாவற்றிற்குந்தலைவன். 47,7.
சவி - காந்தி. 661,1.
சவுபானம் - சோபானம், படி. 125,7.
சற்சாரம் - யானைப்பந்தி. 37,13.
சனகன்முதல் முனிவோர்கள் - சனகன், சனந்தனன், சனற்குமாரன், சனற்சுசாதன் என்பவர். 26,9.
சன்மார்க்கம் - நல்லவழி. 26,7.

சா

சாகரம் - கடல். 146,4.
சாசுவதம் - அழிவின்மை. 3,7.
சாட்டை - கயறு.324,1.
சாந்தபதம் - ஒடுக்கநிலை. 3,8.
சார்வாகன்-நாஸ்திகன். 173,2.
சாலம் - கூட்டம். 395,2.
சாலம்பம் - பற்றுக்கோடு. 3,6
சாலேகம் - பலகணிவாயல். 101,3.

சி

சித்தமவுனி-மௌனகுரு. 426,1.
சித்தாந்தம்-முடிந்தமுடிவு. 8,3.
சித்திகள் - அஷ்டமாசித்திகள்; அவை - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்வம், வசித்வம் என்பன. 12,11.
சித்து - ஞானம். 1,11.
சிந்தாகுலம் - மனக்கிலேசம். 56,11.
சிம்புள் - சரபப்பக்ஷி. 56,10.
சிரகிரி - திரிசிராமலை. 26,15.
சில் - ஓடு. 474,1.
சிலை - கல். 12,9.
சிவம் - மங்களகரம். 47,7.
சிற்சத்தி - ஞானசத்தி. 2,8.
சிற்சபை - ஞானசபை. 47,15.
சிற்பரவெளி - மேலாகிய ஞானாகாயம். 3,15.
சிற்பரம் - ஞானரூபமாகிய பரம்பொருள் 19,3.
சின்முத்திராங்குசம் - ஞானமுத்திரையாகிய தோட்டி. 37,9.

சீ

சீகாழித்துறை-திருஞானசம்பந்தமூர்த்திகள். 161,6.

சு

சுகம் - கிளி. 1026,2.
சுகவாரி - இன்பசமுத்திரம். 27,11.
சுக்கிலம் - விந்து. 1116,1.
சுகாரம்பம் - இன்பமயம், சுகோதயம். 14,7.
சுத்தாதி - சுத்தவித்தை, ஈசன், சதாசிவம், சத்தி, சிவம் என்பன. 48,4.
சுயம்பு - தானேயுண்டானவன். 26,5.
சுருங்கில் - சிறுவீடு.101,3.
சுருதி - வேதம். 436,1.
சுரோத்ராதி -சுரோத்திரம்,தொக்கு, சக்ஷு, சிகுவை, ஆக்கிராணம் என்பன. 48,2.
சுவா - நாய். 318,1.
சுளித்தல் - கோபித்தல். 37,5.

சூ

சூது - இரகஸ்யம். 72,13.
சூறை - கொள்ளை. 584,4.
சூன்யம்-பாழ்,ஒன்றுமில்லது.5,7

செ

செந்நீர் - உதிரம். 101,7.
செல்வத்தேவு - திருநாவுக்கரசு நாயனார். 161,8.

சே

சேடம் - மிகுந்து நிற்பது. 5,6.
சேண் - ஆகாயம். 198,2.
சேதா - தாய்ப்பசு. 137,7.
சேதித்தல்-கிழித்தெறிதல்.56,10

சை

சையோகம் - கலவி. 97,13.

சொ

சொச்சம் - நின்மலம். களங்கமற்றது. 24,4.

சொருபாநுபூதி - யோகாநுபவநிலை. 26,12.
சொற்பிரகாசம் - மந்திரரூபமாய வெளி. 3,1.

## சோ

சோங்கு - மரக்கலம். 199,3.
சோபானம் - படிமுறை. 357,2.
சோமவட்டம்-சந்திரமண்டலம். 36,10.
சோற்றுத்துருத்தி - அன்னத்தாலாகிய உடம்பு. 10,7.

## சௌ

சௌபானம் - சோபானம், படி 141,4.

## ஞா

ஞாதுரு - ஆன்மா. 33,8.
ஞானம் - அறிவு. 33,8.
ஞானவனல் - ஞானக்கினி. 32,3.

## ஞே

ஞேயம் - சிவம். 153,5.

## த

தசநாடி - பத்துநாடிகள்; அவை- சுழுமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி என்பன. 36,8.
தடத்தம் - சகளவடிவும். 3,11.
தட்டுதல் - புலப்படுதல். 1,7.
தண் - குளிர்ச்சி. 22,7.
தத்துதல் - தாவுதல். 122,7.
தந்தி - யானை. 65,7.
தரணி - பூமி. 40,10.
தமர் - உறவினர். 109,14.
தரளம் - முத்து. 129,9.
தவளம் - வெண்மை. 44,8.
தற்பரன் - அது என்னும் சுட்டுக்கு அப்பாற்பட்டவன், அது என்னும் மேலான பொருள். 3,15.
தனஞ்சயன் - ஓர்வாயு; இது தேகத்தினின்று உயிர் நீங்கினும் தான் நீங்காதிருந்து உடம்பை வீங்குவித்து தலைகிழித்துச்செல்வதாம். 420,4.
தனு - வில். 12,6.

## தா

தாது - மகரந்தம். 407,1.
தாயகம் - தாய்வீடு. 142,6.
தாரகம் - ஆதாரம். 14,5.
தாரணை - யோகவுறுப்பினுளொன்று. 59,12.
தாழ்தல் - கவிழ்தல். 12,5.

## தி

திகந்தம் - திக்கின் முடிவு. 57,1.
திமிரம் - இருள். 56,11.
திராவிடம் - தமிழ். 66,9.
திரோதம் - மறைவு. 1165,2.
திவ்யம் - தெய்விகம். 3,14.

## தீ

தீபகுண்டமவுனி - தீக்ஷாகுரு. 426,1.
தீம்புனல் - மதுரமாகிய நீர். 110,2.
தீனன் - எளியன். 56,12.

## து

துகள் - குற்றம். 25,5.
துதைதல் - நெருங்குதல். 58,1.
துப்பு - பவளம். 112,5.
துரகம் - குதிரை. 62,1.
துரியம் - நான்காவது பொருள், பரமாத்மஸ்வரூபம். 2,12.
துவிதம் - இரண்டு. 46,4.

பூஜை, சித்தாந்த சிரவணம், லஜ்ஜை, மதி, ஜபம், விரதம் என்பன. 127,1.
நிரஞ்சனம் - தோஷமின்மை. 3,12.
நிராமயம் - நோயின்மை. 3,12.
நிராலம்பம் - பற்றுக்கோடின்மை. 3,7.
நிர்விகாரம் - விகாரமின்மை. 3,11.
நிர்க்குணம் - குணாதீதம். 100,7.
நிர்மலம் - மாசில்லது. 3,9.
நிர்வசனம் - வசனாதீதம். 47,3.
நிர்விஷயம் - விஷயாதீதம் 3,10.
நிர்த்தொந்தம் - தொடர்பின்மை, கட்டுப்பாடின்மை. 33,1.
நிழற்றல்-நிழலைச்செய்தல். 61,9.
நிஷ்பிரபஞ்சம் - உலகப்பற்றில்லாமை. 3,9.

## நீ

நீதம் - நீதி. 79,9.
நீராளம் - நீரின் குணம். 11,9.
நீலன்-பாசாங்குக்காரன். 180,4.

## நு

நுந்தை - உன்தந்தை, விஷ்ணு. 166,1.
நுழைவு - குகை. 36,7.

## நூ

நூழை - அகர்ச்சி. 105,10.

## நெ

நெகிடி - நெருப்புக்குவை. 43,3.
நெட்டுயிர்த்தல் - பெருமூச்சுவிடுதல். 6,7.

## நே

நேர்மை - செம்மை. 85,5.

## ப

பகடு - எருமை. 131,6.
பகவன் - அறுகுணமுடையோன்; அறுகுணங்களாவன - யமம், புகழ், ஞானம், வைராக்கியம் என்பன. 47,6.
பசுபதி - ஆன்மாக்களுக்குத் தலைவன். 25,7.
பசுத்துவம்-சீவத்தன்மை. 234,3.
படிறர் - வஞ்சகர். 131,4.
பணி - பாம்பு. 225,3.
பண்டை - முற்காலம். 167,3.
பண்ணவி - தேவி. 60,12.
பத்மநிதி - தாமரைமகவானபொக்கிஷம். 58,3.
பகிரண்டம் - துருவனுக்கு மேற்பட்ட வுலகம். 7,1.
பரதேவதை- மேலானதெய்வம். 3,15.
பரமகுரு - பரமாசாரியன். 85,4.
பரமார்த்தம்-உண்மைப்பொருள் 10,14.
பரவை - சமுத்திரம். 36,3.
பரிபாகம் - பக்குவம். 5,14.
பரை - பராசத்தி. 443,4.
பரிவு - அன்பு. 5,13.
பவுரி - ஓர்கூத்து. 60,11.
பவ்வம் - கடல். 129,9.
பறப்பன - கருடன் முதலியன. 5,1.
பக்ஷணிகள் -புசிப்பவர்கள். 44,1.

## பா

பாசாடவி - 284,5.
பாதரசம் - சூதம், இரசம். 9,13.
பாராது பார்த்தல் - அகக்கண்ணால் பார்த்தல். 34,9.

பார் - பூமி. 58,2.
பான்மை - நன்மை. 25,4.
பானு - சூரியன். 56,11.

பி

பிரகாசம் - பேரொளி. 1,1.
பிலுற்றுதல் - சிந்துதல். 165,1.

பு

புகலிடம் - அடைக்கலஸ்தானம். 35,4.
புட்கலம் - பூரணம். 3 7.
புண்டரீகபுரம்-சிதம்பரம்.333,7.
புண்ணீர் - நிணநீர். 101,8.
புந்தி - மனம். 30,5.
புருஷார்த்தம் - புருஷனால் வேண்டப்படுவது; அறம், பொருள், இன்பம், வீடு என்பன. 42,8.
புலன் - ஐம்புலன்கள்; பரிசம், ரசம், ரூபம், கந்தம், சத்தம் என்பன. 68,6.
புலால் - மாமிசம். 80,9
புவனம் - உலகம். 89,9.
புன்மை - இழிவு. 305,6.

பூ

பூராயம்-ஆச்சரியம்,புதுமை. 6,9.
பூணா - போதும். 233,2.

பெ

பெண்ணீர்மை - பெண்மைக்குணம். 82,11.
பெத்தம்-ஒடுக்கம், பந்தம். 71,5.
பெரியபொருள்-பிரமப்பொருள். 2,16.
பொலா மணி - தொளைக்காத மணி. 206,3.

பே

பேசாமை - மௌனநிலை. 5,12.
பேய்த்தேர் - கானலினீர். 551,3.
பேரொளி - பரஞ்சுடர். 15,8.

பை

பைந்தொடி - பசிய வளையல். 328,5.

பொ

பொங்கேதம் - மிகுந்தகுற்றம். 1237,1.
பொட்டல்-வெற்றிடம். 1242,1.
பொது - பொன்னம்பலம்.274,7.
பொறை - பொறுமை. 89,12.
பொறி - ஐம்பொறிகள்; மெய் வாய், கண், மூக்கு, செவிஎன்பன. 9,2.
பொற்பொதுநாதன் - கநகசபாபதி. 261,2,

போ

போனகம் - சோறு. 41,1.
போதம் - ஞானம். 11,7.
போந்தநெறி- கைவந்தமார்க்கம். 30,6.
போற்றல் - காப்பாற்றுதல்40,5.

பௌ

பௌதிகம் - பூதசம்பந்தம். 5,3.
பௌவம் - ஆழம். 1151,1.

ம

மகம் - யாகம். 385,3.
மகரம் - முதலை. 112,2.
மடவார் - மாதர். 110,4.
மணிக்குன்றம் - மாணிக்கமலை. 259,4.
மத்தம் - ஊமத்தமலர். 264,1.
மருட்டிவிடுதல் - மயக்கிவிடுதல். 66,13.
மருளர்-மயக்கமுடையவர். 50,1.
மர்க்கடம் - குரங்கு. 449,1.
மலநீர் - மூத்திரம். 101,8.
மலைவு - விரோதம். 87,3.

மணி - குளிகை. 12,11.
மண்ணீர்மை - பிரபஞ்சமாக. 968,1.
மதி - சந்திரன். 53,12.
மத்தகஜம் - மதயானை. 37,14.
மனோரதம் மனவிருப்பம். 242,3.
மந்த்ரமாலிகை - ஓர்யோகநூல், திருமந்திரமாலை. 111,3.
மரபு - பாரம்பரியம். 11,4.
மலைவு - மயக்கம். 35,12.
மறம் - பாவம். 308,1.
மறை - வேதம். 21,1.
மனவெளி - இதயாகாசம். 23,1.
மனமாதி- மனமுதலியன. 16,3.
மன்றம் - உலகம். 213,4.
மனோவாயு - பிராணவாயு. 4,2.
மனு - விண்ணப்பம். 96,12.

மா

மாயை - மா - உற்பத்தி - யா - லயம், - மாதியாதிதி மாயா எதிலே தோன்றி எதிலே ஒடுங்குகிறதோ அது மாயை. 9,1.
மால் - விருப்பம். 69,4.

மி

மிடி - தரித்திரம். 20,3.
மின்னார்கள் - மாதர்கள். 40,3.

மு

முகபடாம் - நெற்றிப்பட்டம். 37,7.
முக்தம்-பாவவிமோசனம். 47,4.
முகில் - மேகம். 2,11.
மும்மண்டலம் - சோமசூரியாக்கினி மண்டலங்கள். 62,3.
முழை - குகை. 70,3.
முரசறைதல்-கொஷித்தல். 3,2.
முளரி - தாமரை. 165,4.
முறி - எழுதுமோலை. 122,5.

மூ

மூதுரை - வேதம். 244,4.
மூரல் - பல். 98,1.
மூலக்கனல்- மூலாக்கினி. 68,7.
மூவர்செய்பனுவல் - தேவாரம். 102,3.

மே

மேக்கி - மேய்ப்பவன். 131,6.
மேதினி - பூமி. 224,3.

மை

மைக்காலிருட்டு - மழைக்காலத்திருள். 76,9.
மை - கருமை. 51,9.
மையல் - காமமயக்கம். 40,2.

மோ

மோனம் - மௌனம். 251,2.
மோன உருவெளி - உருவெளித்தோற்றம். 1,15.

ய

யமபடர் - காலதூதர். 578,3.

யா

யாதனை - துன்பம். 161,2.

வ

வங்கம் - மரக்கலம். 112,9.
வசனநிர்வாகர் - வார்த்தையிலே மிகுந்த சமர்த்தர். 6,7.
வச்ரதரன் - இந்திரன். 12,7.
வடபால்மவுனி - தக்ஷிணாமூர்த்தி 426,1.
வடநிழல் - ஆலமரம். 47,13.
வடமொழி - சம்ஸ்கிருதம். 66,8.
வடவனல் - வடவாமுகாக்கினி. 12,3.
வட்டு - சூதாகருவி. 186,4.

வயங்குதல் - விளங்குதல். 24,6.
வனவன் - வேடன். 160,1.
வரை - மாலை. 61,10.
வட்டம் - மண்டலம். 56,14.
வளி - காற்று. 168,2.
வறிஞன் - தரித்திரன். 49,13.

வா

வாசாமகோசரம் - வாக்கினால் அறியப்படாதது.
வாசாகயிங்கரியம் - வாக்கினாலே செய்யுந்தொண்டு. 4,1.
வாசி-வாயுதாரணை. 116,2.
வாச்சியம் - சொற்பொருள்.
வாஞ்சை - ஆசை, விருப்பம். 67,12.
வாய்மை - சத்தியம் 267,2.
வாய்பாடு - வழக்கம். 107,7.
வாரம் - அன்பு 214,1.
வாரணம் - கோழி. 390,2.
வாலாயம் - வழக்கம். 4,3.
வாழாதுவாழ்தல் -பூதவுடம்பொழிந்தும் புகழுடம்போடு வாழ்தல். 12,9.
வாழ்வு - செல்வம். 393,1.
வான் - ஆகாயம். 227,3.

வி

விகசித்தல் - மலர்தல். 64,14.
விகற்பம் - வேறுபாடு. 59,6.
விகாதம் - விரோதம். 98,13.
விடக்கு - மாமிசம். 101,9.
விடையூர்தி - பரமசிவன். விடை-ரிஷபம். 59,9.
விதண்டை - மாறுபாடு, தருக்க வகையுளொன்று. 95,10.
விஞ்சுதல் - மேலாதல். 789,2.
விண் - ஆகாயம். 22,1.
விண்ணிறைந்தவெளி - பரமாகாசம். 23,1.
விந்து - ஶ்வரம் வர்ணம் நிவர்த்தி கலை முதலிய கலைகள் தோற்றியொடுங்குமிடம். 9,5.
விபுலம் - விசாலம்.
வியாபி-எங்குநிறைந்தவன். 49,3.
வியோமம் - ஆகாயம். 3,8.
விரகசன்னதம் - மோகாவேசம். 98,3.
விலாழி - யானைக்கையுமிழ்நீர். 37,4.
விஸ்வாதீதம் - பிரபஞ்சத்தைக் கடந்தது. 47,5.

வீ

வீடு - முத்தி, மோனம். 11,8.
வீறு - பெருமை. 134,3.

வெ

வெட்டு - அதரம். 579,1.
வெண்ணீர் - கோழை. 101,7.
வெய்யன் - கொடியன். 74,5.
வெதும்பல் - கொதித்தல். 55,2.
வெவ்வியகுணம் - தீக்குணம். 28,5.
வெளி - சிதாகாசம். 72,13.
வெற்பு - மலை. 57,11.

வே

வேசறல் - மனம்சோதல். 83,8.
வேதா - பிரமன். 109,1.
வேதிசெய்தல் - பேதப்படுதல். 32,6.
வேலை - சமுத்திரம். 99,6.
வேதாந்தம் - மறைமுடிவு. 5,8.

வை

வைகுதல் - தங்குதல். 97,11.
வைதிகம்- வேதசம்பந்தம். 141,8.
வையம் - உலகம். 350,2.

# நூலினுட்பிரிவு.

ஸ்ரீமத் - தாயுமானசுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு

காஞ்சி - நாகலிங்கமுதலியார் பதிப்பு.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமத் தாயுமானசுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு

## திருவருள்விலாசப்பரசிவவணக்கம்.

பதினான்குசீர்விருத்தம்.

1. அங்கிங்கெனாதபடியெங்கும்ப்ரகாசமா
யானந்தபூர்த்தியாகி
யருளொடுநிறைந்ததெதுதன்னருள்வெளிக்குளே
யகிலாண்டகோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சைவைத்துயிர்க்குயிராய்த்
தழைத்ததெதுமனவாக்கினிற்
றட்டாமனின்றதெதுசமயகோடிகளெலாந்
தந்தெய்வமெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர்வழக்கிடவுநின்றதெது
வெங்கணும்பெருவழக்கா
யாதினும்வல்லவொருசித்தாகியின்பமா

கங்குல்பகலறநின்றவெல்லையுளதெதுவது
கருத்திற்கிசைந்தததுவே

கண்டனவெலாமோனவுருவெளியதாகவுங்
கருதியஞ்சலிசெய்குவாம். (க)

2. ஊரனந்தம்பெற்றபேரனந்தஞ்சுற்று
முறவனந்தம்வினையினு
லுடலனந்தஞ்செயும்வினையனந்தங்கருத்
தோவனந்தம்பெற்றபேர்
சீரனந்தஞ்சொர்க்கநரகமுமனந்தநற்
றெய்வமுமனந்தபேதந்
திகழ்கின்றசமயமுமனந்தமதனுன்ஞான
சிற்சத்தியாலுணர்ந்து
காரனந்தங்கோடிவருஷித்ததெனவன்பர்
கண்ணும்விண்ணுந்தேக்கவே
கருதரியவானந்தமழைபொழியுமுகிலைநங்
கடவுளைத்துரியவடிவைப்
பேரனந்தம்பேசிமறையனந்தஞ்சொலும்
பெரியமௌனத்தின்வைப்பைப்
பேசருமனந்தபதஞானவானந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம். (உ)

3. அத்துவிதவத்துவைச்சொற்ப்ரகாசத்தனியை
. யருமறைகண்முரசறையவே
யறிவினுக்கறிவாகியானந்தமயமான
வாதியையநாதியேக
தத்துவசொரூபத்தைமதசம்மதம்பெறுச்
சாலம்பரகிதமான
சாசுவதபுட்கலநிராலம்பவாலம்ப
சாந்தபதவ்யோமநிலையை
நித்தநிர்மலசகிதநிஷ்ப்ரபஞ்சப்பொருளை
நிர்விஷயசுத்தமான

நிர்விகாரத்தைத்தடத்தமாய்நின்றொளிர்
நிரஞ்சனநிராமயத்தைச்
சித்தமறியாதபடிசித்தத்தினின்றிலகு
திவ்யதேசோமயத்தைச்
சிற்பரவெளிக்குள்வளர்தற்பரமதானபர
தேவதையையஞ்சலிசெய்வாம். (ங)

---

## பரிபூரணானந்தம்.



பதினான்குசீர்விருத்தம்.

4. வாசாகயிங்கரியமன்றியொருசாதன
மனேவாயுநிற்கும்வண்ணம்
வாலாயமாகவும்பழகியறியேன்றுறவு
மார்க்கத்தினிச்சைபோல
நேசானுசாரியாய்விவகரிப்பேனந்த
நினைவையுமறந்தபோது
நித்திரைகொள்வேன்றேகநீங்குமெனவெண்ணிலோ
நெஞ்சந்துடித்தயருவேன்
பேசாதவானந்தநிட்டைக்குமறிவிலாப்
பேதைக்கும்வெகுதூரமே
பேய்க்குணமறிந்திந்தநாய்க்குமொருவழிபெரிய
பேரின்பநிட்டையருள்வாய்
பாசாடவிக்குளேசெல்லாதவர்க்கருள்
பழுத்தொழுகுதேவதருவே
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (க)

5. தெரிவாகவூர்வனநடப்பனபறப்பன
செயற்கொண்டிருப்பனமுதற்

நேகங்களத்தனையுமோகங்கொள்பௌதிகஞ்
சென்மித்தவாங்கிறக்கும்
விரிவாயபூதங்களொன்றோடொன்றாயழியு
மேற்கொண்டசேடமதுவே
வெறுவெளிநிராலம்பநிறைசூனியமுபசாந்த
வேதவேதாந்தஞானம்
பிரியாதபேரொளிபிறக்கின்றவருளருட்
பெற்றோர்கள்பெற்றபெருமை
பிறவாமையென்றைக்குமிறவாமையாய்வந்து
பேசாமையாகுமெனவே
பரிவாயெனக்குநீயறிவிக்கவந்ததே
பரிபாககாலமலவோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௨)

6. ஆராயும்வேளையிற்பிரமாதியாலு
மையவொருசெயலுமில்லை
யமைதியொடுபேசாதபெருமைபெறுகுணசந்த்ர
ராமெனவிருந்தபேரு
நேராகவொருகோபமொருவேளைவரவந்த
நிறைவொன்றுமில்லாமலே
நெட்டுயிர்த்துத்தட்டழிந்துளருவார்வசன
நிர்வாகரென்றபேரும்
பூராயமாயொன்றுபேசுமிடமொன்றைப்
புலம்புவார்சிவராத்திரிப்
போதுதுயிலோமென்றவிரதியருமறிதுயிற்
போலேயிருந்துதுயில்வார்
பாராதிதனிலுள்ளசெயலெலாமுடிவிலே
பார்க்கினின்செயலல்லவோ

பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௩)

7. அண்டபகிரண்டமும்மாயாவிகாரமே
யம்மாயையில்லாமையே
யாமெனவுமறிவுண்டப்பாலுமறிகின்ற
வறிவினையறிந்துபார்க்கி
னெண்டிசைவிளக்குமொருதெய்வவருளல்லாம
லில்லையெனுநினைவுமுண்டிங்
கியானெனதறத்துரியநிறைவாகிநிற்பதே
யின்பமெனுமன்புமுண்டு
கண்டனவெலாமல்லவென்றுகண்டனைசெய்து
கருவிகரணங்களோயக்
கண்மூடியொருகணமிருக்கவென்றாற்பாழ்த்த
கர்மங்கள்போராடுதே
பண்டையுளகர்மமேகர்த்தாவெனும்பெயர்ப்
பக்ஷநானிச்சிப்பனோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௪)

8. சந்ததமுமெனதுசெயனினதுசெயலியானெனுந்
தன்மைநினையன்றியில்லாத்
தன்மையால்வேறலேன்வேதாந்தசித்தாந்த
சமரசசுபாவமிதுவே
யிந்தநிலைதெளியநானெக்குருகிவாடிய
வியற்கைதிருவுளமறியுமே
யிந்நிலையிலேசற்றிருக்கவென்றாலென்மடமை
யிதசத்ருவாகவந்து
சிந்தைகுடிகொள்ளுதேமலமாயைகன்மந்
திரும்புமோதொடுவழக்காய்ச்

சென்மம்வருமோவெனவும்யோசிக்குதேமனது
சிரத்தையெனும்வாளுமுதவிப்
பந்தமறமெய்ஞ்ஞானதீரமுந்தந்தெனைப்
பாதுகாத்தருள்செய்குவாய்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (ரு)

9. பூதலயமாகின்றமாயைமுதலென்பர்சிலர்
பொறிபுலனடங்குமிடமே
பொருளென்பர்சிலர்கரணமுடிவென்பர்சிலர்குணம்
போனவிடமென்பர்சிலபேர்
நாதவடிவென்பர்சிலர்விந்துமயமென்பர்சிலர்
நட்டநடுவேயிருந்த
நாமென்பர்சிலருருவமாமென்பர்சிலர்கருதி
நாடிலருவென்பர்சிலபேர்
பேதமறவுயிர்கெட்டநிலயமென்றிடுவர்சிலர்
பேசிலருளென்பர்சிலபேர்
பின்னுமுன்னுங்கெட்டசூனியமதென்பர்சிலர்
பிறவுமேமொழிவரிவையாற்
பாதரசமாய்மனதுசஞ்சலப்படுமலாற்
பரமசுகநிஷ்டைபெறுமோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (சு)

10. அந்தகாரத்தையோரகமாக்கிமின்போலென்
னறிவைச்சுருக்கினவரா
ரவ்வறிவுதானுமேபற்றினதுபற்றுற
யழுந்தவுந்தலைமீதிலே
சொந்தமாயெழுதப்படித்ததார்மெய்ஞ்ஞான
சுகநிஷ்டைசேராமலே

சோற்றுத்துருத்தியைச்சதமெனவுமுண்டுண்டு
தூங்கவைத்தவரார்கொலோ
தந்தைதாய்முதலானவகிலப்ரபஞ்சந்

தன்னையேநோவனோபிறரையேநோவனோ
தற்காலமதைநோவனோ
பந்தமானதுதந்தவினையையேநோவனோ
பரமார்த்தமேதுமறியேன்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணுனந்தமே. (எ)

11. வாராதெலாமொழியவருவனவெலாமெய்த
மனதுசாக்ஷியதாகவே
மருவநிலைதந்ததும்வேதாந்தசித்தாந்த
மரபுசமரசமாகவே
பூராயமாயுணரவூகமதுதந்ததும்
பொய்யுடலைநிலையன்றெனப்
போதநெறிதந்ததுஞ்சாசுவதவானந்த
போகமேவீடென்னவே
நீராளமாயுருகவுள்ளன்புதந்தது
நின்னதருளின்னுமின்னு
நின்னையேதுணையென்றவென்னையேகாக்கவொரு
நினைவுசற்றுண்டாகிலோ
பாராதியறியாதமோனமேயிடைவிடாப்
பற்றுகநிற்கவருள்வாய்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணுனந்தமே. (அ)

12. ஆழாழிகரையின்றிநிற்கவிலையோகொடிய
வாலமமுதாகவிலையோ

[illegible]ன்பால்வியந்தருவிபடியற்றமுரமென்ன
வடியிலேவீழ்ந்துவீழ்ந்தெம்
மடிகளேயுமதடிமையாங்களெனுமார்வருக்
கறமாதிபொருளுரைப்பத்
தென்பாலின்முகமாகிவடவாலிருக்கின்ற
செல்வமேசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்டவறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (௧௦)

121. புத்தமிர்தபோகமுங்கற்பகநனீழலிற்
பொலிவுறவிருக்குமியல்பும்
[illegible]யான்னுலகிலயிராவதத்தேறுவரிசையும்
[illegible]பூமண்டலாதிக்கமு
[illegible]த்தம்வீறியினர்வேண்டுமாலென்றுதள்ளவுமெ
மாலுமொருசுட்டுமறவே
வைக்கின்றவைப்பாளன்மௌனதேசிகனென்ன
வந்தவின்னருள்வாழிகாண்
சுத்தபரிபூரணவகண்டமேயேகமே
சுருதிமுடிவானபொருளே
சொல்லரியவுயிரினிடையுங்கங்குநின்றருள்
சுரந்துபொழிகருணைமுகிலே
சித்திரிலேமுத்திநிலைவிளைகின்றபூமியே
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்டவறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (௧௧)

---

## சிற்சுகோதயவிலாசம்.



பதினாறுசீர்விருத்தம்.

122. [illegible]மோகெழுகலை[illegible]
[illegible]

## சிற்சுகோதயவிலாசம்.

காவிரண்டுநவவாசல்பெற்றுவளர்
காமவேணடனசாலையை
மோகவாசைமுறியிட்டபெட்டியைமு
மலமிருந்தொழுகுகேணியை
மொய்த்துவெங்கிருமிதத்துகும்பியை
முடங்கலார்கிடைசரக்கினை
மாகவிந்த்ரதனுமின்னையொத்திலக
வேதமோதியகுலாலனார்
வனையவெய்யதடிகாரனனையமன்
வந்தடிக்குமொருமட்கலத்
தேகமானபொயைமெய்யெனக்கருதி
யையவையமிசைவாடவோ
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

௧௦௨ குறிகளோடுகுணமேதுமின்றியன
லொழுகவின்றிடுமிரும்பனற்
கூடவின்றியதுவாயிருந்தபடி
கொடியவாணவவறைக்குளே
யறிவதேதுமறவறிவிலாமைமய
மாயிருக்குமெனையருளினா
லளவிலாதநுகரணமாதியை
யளித்தபோதுனையறிந்துநான்
பிறிவிலாதவணங்கின்றிடாதபடி
பலவிறங்கவருமுபலமாய்ப்
பெரியமாயையிலழுந்திநின்னது
ப்ரசாதகல்லருண்மறந்திடுஞ்
சிறியனேனுமுனைவந்தனைத்துசுக
மாயிருப்பதினியென்றுகாண்

டெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (உ)

124. ஐந்துபூதமொருகானன்றென
வடங்கவந்தபெருவானமே
யாதியந்தநடுவேதுமின்றியரு
ளாய்நிறைந்திலகுசோதியே
தொந்தரூபமுடனரூபமாதிகுறி
குணமிறந்துவளர்வஸ்துவே
துரியமேதுரியவுயிரினுக்குணர்வு
தோன்றநின்றருள்சுபாவமே
87. எ[illegible]ங்தநாளுநடுவாகிநின்றொளிரு
[illegible] மாதியேகருணைநீதியே
யெந்தையேயெனவிடைந்திடைந்துருகு
மெளியனேன்கவலைதீரவுஞ்
சிந்தையானதையறிந்துநீயுனருள்
செய்யநாளுமினியுப்வனே
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (ந)

125. ஓவரென்றபுலவேடர்கொட்டம
டங்கமர்க்கடவன்முட்டியா
யடவிநின்றுமலையருகினின்றுசரு
காதிதின்றுபனிவெயிலினுன்
மெய்வருந்துதவமில்லைநற்சரியை
கிரியையோகமெனுமூன்றதாய்
மேவுகின்றசவுபானநன்னெறி
விரும்பவில்லையுலகத்திலே
பொய்முடங்குதொழில்யாததற்குநல
சாரதித்தொழினடத்திடும்

புத்தியூகமறிவற்றமூகமிவை
பொருளெனக்கருதுமருளன்யான்
றெய்வநல்லருள்படைத்தவன்பரொடு
சேரவுங்கருணைகூர்வையோ.
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (௪)

126. ஏகமானவுருவானநீயருளி
னலனேகவுருவாகியே
யெந்தநாளகிலகோடிசிர்ஷ்டிசெய
விசையுநாள்வரையநாண்முத
லாகநாளதுவரைக்குமுன்னடிமை
கூடவேசநமானதோ
வனந்தமுண்டுநலசநநமீதிதனு
ளறியவேண்டுவனவறியலா
மோகமாதிதருபாசமானதை
யறிந்துவிட்டுனையுமெனையுமே
முழுதுணர்ந்துபரமானவின்பவெள
மூழ்கவேண்டுமிதுவின்றியே
தேகமேநழுவிநானுமோநழுவில்
பின்னையுய்யும்வகையுள்ளதோ
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (ரு)

127. நியமலக்ஷணமுமியமலக்ஷணமு
மாசனுதிவிதபேதமு
நெடிதுணர்ந்திதயபத்மபீடமிசை
நின்றிலங்குமஜபாநலத்
தியலறிந்துவளர்மூலகுண்டலியை
யினிதிறைஞ்சியவளருளினு

லெல்லையற்றுவிளர்சோதிமூலவன
லெங்கண்மோகமறுமுறையிலே
வயமிருந்துவருமமிர்தமண்டல
மதிக்குளேமதியைவைத்துநான்
வாய்மடுத்தமிர்தவாரியைப்பருகி
மன்னுமாரமிர்தவடிவமாய்ச்
செயமிருந்துவருசித்தயோகநிலை
பெற்றுஞானநெறியடைவனோ
தெரிவதற்கரியபிரமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (௧)

27 எ[illegible]திரைக்கடனிகர்த்தசெல்வமிக
வல்லலென்றொருவர்பின்செலா
தில்லையென்னுமுரைபேசிடாதுலகி
லெவருமாமெனமதிக்கவே
நெறியின்வைகிவளர்செல்வமும்முதவி
நோய்களற்றசுகவாழ்க்கையாய்
நியமமாதிநிலைநின்றுஞானநெறி
நிஷ்டைகூடவுமெந்நாளுமே
யீறிலின்றுகுருவாயுணர்த்தியது
மன்றிமோனகுருவாகியே
யகிலமீதுவரவர்தசீரருளை
யையவைபவினியென்சொல்கேன்
சிறியனேழைமதடிமையென்றுனது
திருவுளத்தினிலிருந்ததோ
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

129. எவ்வுயிர்த்திரளுமுலகிலென்னுயி
ரெனக்குழைந்து[illegible]

யிதழுரைப்புவெணதென்றயாவையு
மெடுத்தெறிந்துமதயானைபோற்
கல்வையற்றநடைபயிலவன்பரடி
கண்டதேவருளின்வடிவமாக்
கண்டயாவையுமகண்டமென்னவிரு
கைகுவித்துமலர்தூவியே
பவ்வவெண்டிரைகொழித்ததண்டரளம்
விழியுதிர்ப்பமொழிகுளறியே
பாடியாடியுளநைந்துடைந்தெழுது
பாவையொத்தசைதலின்றியே
திவ்யவன்புருவமாகியன்பரொடு
மின்பவீட்டினிருப்பனோ
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

130. மத்தர்பேயரொடுபாலர்தன்மையது
மருவியேதுரியவடிவமாய்
மன்னுதேசமொடுகாலமாதியை
மறந்துநின்னடியரடியிலே
பத்தியாய்க்கெடிதுநம்புமென்னையொரு
மையறந்தகிலமாயையைப்
பாருபாரெனநடத்தவந்ததென
பாரதத்தினுமிதுள்ளதோ
சுத்தசித்தவியல்பாகுமோவுனது
விவமாயைநடுவாகவே
சொல்லவேண்டும்வகைநல்லகாதிகதை
சொல்லுமாயையினுமில்லையென்
[illegible]முமையாளுமோவருளை
[illegible]பெறுவதோ

தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (௯)

131. பன்முகச்சமயநெறிபடைத்தவரு
மியாங்களேகடவுளென்றிடும்
பாதகத்தவரும்வாததர்க்கமிடு
படிறருந்தலைவணங்கிடத்
தன்முகத்தினுயிர்வரவழைக்குமெம
தருமனும்பகடுமேக்கியாய்த்
தனியிருப்பவடநீழலூடுவளர்
சனகனாதிமுனிவோர்கடஞ்
87. என்[illegible]ன்னமயக்கமதுதீரவங்கைகொடு
மோனஞானமதுணர்த்திமே
சுத்தசித்தவருளியல்பதாகவுள
சோமசேகரகிர்பானுவாய்த்
தென்முகத்தின்முகமாயிருந்தகொலு
வெம்முகத்தினும்வணங்குவேன்
றெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே (௧0)

---

## ஆகாரபுவனம் சிதம்பரரகசியம்.



எண்சீர்விருத்தம.

132 ஆகாரபுவனமின்பாகாரமாக
வங்ஙனேயொருமொழியாலகண்டாகார
யோகாநுபூதிபெற்றவன்பராவிக்
குறுதுணையேயென்னளவுமுகந்தநட்பே
வாகாரும்படிக்கிசைகிண்கிணிவாயென்ன
மலர்ந்தமலரிடைவாசம்வயங்குமாபோற்

றேகாதியுலகமெங்குங்கலந்துதானே
திகழனந்தானந்தமயத்தெய்வக்குன்றே. (க)

133. அனந்தபதவுயிர்கடொறுமுயிராயென்று
மானந்தநிலையாகியளவைக்கெட்டாத்
தனந்தனிச்சின்மாத்திரமாய்க்கீழ்மேல்காட்டாச்
சதசத்தாயருட்கோயிற்றழைத்ததேவே
யினம்பிரிந்தமான்போனிடையாவண்ண
மின்பமுறவன்பர்பக்கலிருத்திவைத்துக்
கனந்தருமாகனமேதண்ணருளிற்றானே
கனிபலித்தவானந்தக்கட்டிப்பேறே.

134. பேறனைத்துமணுவெனவேயுதறித்தள்ளப்
பேரின்பமாகவந்தபெருக்கேபேசா
வீறனைத்துமிந்நெறிக்கேயென்னவென்னை
மேவென்றவரத்தேபாழ்வெய்யமாயைக்
கூறனைத்துங்கடந்தவெல்லைச்சேடமாகிக்
குறைவறநின்றிடுநிறைவேகுலவாநின்று
வாறனைத்தும்புகுங்கடல்போற்சமயகோடி
யத்தனையுந்தொடர்ந்துபுகுமாதிநட்பே. (௩)

135. ஆதியந்தமெனுமெழுவாயீறற்றோங்கி
யருமறையின்னமுங்காணுதரம்றநாளு
பேதமதங்களுமலையமலைபோல்வாதப்
பெற்றியருமவாய்வாதப்பேயராகச்
சீரதகமோனத்திலென்னவடவானீழற்
றண்ணருட்சந்திரமௌலிதடக்கைக்கேற்க
வேதகநின்மாத்திரமாயெம்மனோர்க்கும்
வெளியாகவந்தவொன்றேவிமலவாழ்வே. (௪)

136. விமலமுதற்குணமாகிநூற்றெட்டாதி
வேதமெடுத்தெடுத்துரைத்தவிருத்திக்கேற்க

தின்னணியகல்லறிவாலிச்சமயத்தன்[illegible]
செப்பரியசித்திமுத்திசேர்ந்தாரென்றும். (அ)

140. செப்பரியசமயநெறியெல்லாந்தந்
தெய்வமேதெய்வமெனுஞ்செயற்கையான
வப்பரிசாளருமஃதேபிடித்தாலிப்பா
லடுத்தவநூல்களும்விரித்தேயநுமானாதி
யொப்பவிரித்துரைப்பரிங்ஙன்பொய்மெய்யென்ன
வொன்றிலையொன்றெனப்பார்ப்பதொவ்வாதார்க்
கிப்பரிசாஞ்சமயமுமாயல்லவாகி
யாதுசமயமும்வணங்குமியல்பதாகி. (கூ)

141. இயல்பென்றுந்திரியாமலியமமாதி
யெண்குணமுங்காட்டியன்பாலின்[illegible]
பயனருளப்பொருள்கள்பரிவாரமாகிப்
பண்புறவுஞ்சௌபானபக்ஷங்காட்டி
மயலறுமந்திரஞ்சிக்ஷைசோதிடாதி
மற்றங்கநூல்வணங்கமௌனமோலி
யயர்வறச்சென்னியில்வைத்துராசாங்கத்தி
லமர்ந்ததுவைதிகசைவமழகிதந்தோ. (கo)

142. அந்தோவீதிசயமிச்சயம்போலின்
றறிஞரெல்லாநடுவறியவணிமாவாதி
வந்தாடித்திரிபவர்க்கும்பேசாமோனம்
வைத்திருந்தமாதவர்க்குமற்றுமற்று
[illegible]போகலம்பெற்றபேர்க்கு
[illegible]த்தாயகம்வேறில்லையில்லை
[illegible]போலருளைக்காட்டத்
[illegible]யேதான்சன்மார்க்கம். ([illegible])
[illegible]பொருளும்வீறு
[illegible]

பன்மார்க்கநெறியினிலுங்கண்டதில்லை
பகர்வரியதில்லைமன்றுட்பார்த்தபோதங்
கென்மார்க்கமிருக்குதெல்லாம்வெளியேயென்ன
வெச்சமயத்தவர்களும்வந்திறைஞ்சாநிற்பர்
கன்மார்க்கநெஞ்சமுளவெனக்குந்தானே
கண்டவுடனானந்தங்காண்டலாகும். (சஉ)

144. காண்டல்பெறப்புறத்திலுள்ளபடியேயுள்ளுங்
காட்சிமெய்ந்நூல்சொலும்பதியாங்கடவுளேநீ
நீண்டநெடுமையுமகலக்குறுக்குங்காட்டா
நிறைபரிபூரணவறிவாய்நித்தமாகி
விருப்பொடுவெறுப்புச்சமீபந்தூரம்
கலனுகுதன்முதலாம்விவகாரங்கள்
ண்டவளவைகண்மனவாக்காதியெல்லாம்
பொருந்தாமலகம்புறமும்புணர்க்கையாகி. (சந)

145. ஆகியசற்காரியவூகத்துக்கேற்ற
வமலமாய்நடுவாகியனந்தசத்தி
யோகமுறுமானந்தமயமதாகி
யுயிர்க்குயிராயெந்நாளுமோங்காநிற்ப
மோகவிருண்மாயைவினையுயிர்கட்கெல்லா
மொய்த்ததென்கொலுபகாரமுயற்சியாகப்
பாகமிகவருளவொருசத்திவந்து
பதிந்ததென்கொலெனுமப்பான்மையென்கொல்.

146. நானென்னுமோரகந்தையெவர்க்கும்வந்து
நலிந்தவுடன்சகமாயைநானுவாகித்
தான்வந்துதொடருமித்தால்வளருந்துன்பச்
சாகரத்தின்பெருமையெவர்சாற்றவல்லா
ரூனென்றுமுடலென்றுங்கரணமென்று
மூன்னென்றும்புறமென்றுமொழியாநின்ற

வானென்றுங்காலென்றுந்தீரென்று
மண்ணென்றுமலையென்றும்வனமதென்றும். (கரு)

147. மலைமலையாங்காட்சிகண்காணுமையாதி
மறப்பென்றுநினைப்பென்றுமாயாவாரி
யலையலையாயடிக்குமின்பத்துன்பமென்று
மதைவிளைக்கும்வினைகளென்றுமதனைத்தீர்க்கத்
தலைபலவாஞ்சமயமென்றுந்தெய்வமென்றுஞ்
சாதகரென்றும்மதற்குச்சாட்சியாகக்
கலைபலவாநெறியென்றுநதர்க்கமென்றுங்
கடலூறுநுண்மணலெண்ணிக்காணும்போதும்.

148. காணரியவல்லலெல்லாந்தானேகட்டுக்
கட்டாகவிளையுமதைக்கட்டோடே
வீணினிறகர்ப்பூரமலைபடுதீப்பட்ட
விந்தையெனக்காணவொருவிவேகங்காட்டிவூ
வூணுறக்கமின்பதுன்பம்பேருராதி
யொவ்விடவுமெனைப்போலவுருவங்காட்டிக்
கோணறவோர்மான்காட்டிமானையீர்க்குங்
கொள்கையெனவருணமௌனகுருவாய்வந்து. ()

149. வந்தெனுடல்பொருளாவிமூன்றுந்தன்கை
வசமெனவேயத்துவாமார்க்கநோக்கி
யைந்துபுலனைம்பூதங்கரணமாதி
யடுத்தகுணமத்தனையுமல்லையல்லை
யிந்தவுடலறிவறியாமையுநீயல்லை
யாதொன்றுபற்றினதனியல்பாய்நின்று
பந்தமறும்பளிங்கனையசித்துநீயுன்
பக்குவங்கண்டறிவிக்கும்பான்மையேயாம். ()

150. அறிவாகியானந்தமயமாயென்று
முழுமையாகநிலையாகியாகின்பாலம்

பிறியாமற்றன்னருளேகோயிலான
பெரியபரம்பதியதனைப்பெறவேவேண்டி
நெறியாகக்கூறுவன்கேளொந்நாளு
நிர்க்குணநிற்குளம்வாய்த்துநீடுவாழ்க
செறிவானவறியாமைமெல்லாநீங்கச்
சிற்சுகம்பெற்றிடுகபந்தந்தீர்கவென்றே (கக)

151. பந்தமறுமெய்ஞ்ஞானமானமோனப்
பண்பொன்றையருளியந்தப்பண்புக்கேதான்
சிந்தையில்லைநானென்னும்பான்மையில்லை
தேசமில்லைகாலமில்லைதிக்குமில்லை
செல்லைநீக்கமில்லைபிறிதுமில்லை
சொல்லுமில்லைபிராப்பகலாந்தோற்றமிலலை
அந்தமில்லைபாதியில்லைநடுவுமில்லை
அகமுமில்லைபுறமுமில்லையனைத்துமில்லை. (உ०)

152. இல்லையில்லையென்னினொன்றுமில்லாதல்ல
வியல்பாகியென்றுமுள்ளவியற்கையாகிச்
சொல்லரியதன்மையதாயன்றுனென்னத்
தோன்றுமெதல்லாம்விழுங்குஞ்சொரூபமாகி
யல்லையுண்டபகல்போலவவித்தையெல்லா
மடையவுண்டுதடையறவுன்றிவைத்தானே
வெல்லவுண்டிங்குன்னையுந்தானுக்கொண்டு
வேதகமாய்ப்பேசாமைவிளங்குந்தானே. (உக)

153. தானானதன்மயமேயல்லாமொன்றைத்
தலையெடுக்கவொட்டாதுதலைப்பட்டாங்கே
போராலுங்கர்ப்பூரதீபம்போலப்
பேரொளிப்பதல்லாதுபலம்வேறின்றும்
[illegible]
[illegible]

மாறுலுமிதன்பெருமையெவர்க்கார்சொல்வா
ரதுவாறலதுவாவரதுவேசொல்லும். (உஉ)

154. அதுவென்றலெதுவெனவொன்றடுக்குஞ்சங்கை
யாதலினலதுவெனலுமறவேவிட்டு
மதுவுண்டவண்டெனவுஞ்சனகனுதி
மன்னவர்கள்சுகர்முதலோர்வாழ்ந்தாரென்றும்
பதியிந்தநிலையெனவுமென்னையாண்ட
படிக்குநிருவிகற்பத்தாற்பரமானந்தக்
கதிகண்டுகொள்ளவுநின்னருள்கூரிந்தக்
கதியன்றியுறங்கேன்மேற்கருமம்பாரேன். (உ௩)

155. பாராதிவிண்ணனைத்துநீயாச்சிந்தை
பரியமடலாவெழுதிப்பார்த்துப்பார்
வாராயோவென்ப்ராணநாதாவென்பேன்
வளைத்துவளைத்தெனைநீயாவைத்துக்கொண்டு
பூராயமாமேலொன்றறியாவண்ணம்
புண்ணுளர்போனெஞ்சம்புலம்பியுள்ளே
நீராளமாயுருகிக்கண்ணீர்சோர
நெட்டுயிர்த்துமெய்ம்மறந்தோர்நிலையாய்நிற்பேன்.

156. ஆயுமறிவாகியுன்னைப்பிரியாவண்ண
மணைந்துசுகம்பெற்றவன்பரையோவென்னத்
தீயகொலைச்சமயத்துஞ்செல்லச்சிந்தை
தெளிந்திடவுஞ்சமாதானஞ்செய்வேன்வாழ்வான்
காயிலைபுன்சருகாதியருந்தக்கானங்
கடன்மலையெங்கேயெனவுங்கவலையாவேன்
வாயில்கும்பம்போற்கிடந்துபுரள்வேன்வானின்
மதிகதிரைமுன்னிலையாவைத்துநேரே. (உ௫)

157. நேரேதானிரவுபகல்கோடாவண்ண
நித்தம்வரவுங்களையிந்நிலைக்கேவைத்தா

ராரேயங்கவர்பெருமையென்னேயென்பே
னடிக்கின்றகாற்றேநீயாராலேதான்
பேராதேசுழல்கின்றாயென்பேன்வந்து
பெய்கின்றமுகில்காளெம்பெருமானும்போற்
றாராளமாக்கருணைபொழியச்செய்யுஞ்
சாதகமென்னேகருதிச்சாற்றுமென்பேன்.. (உகூ)

158. கருதரியவிண்ணேநீயெங்குமாகிக்
கலந்தனையேயுன்முடிவின்காட்சியாக
வருபொருளெப்படியிருக்குஞ்சொல்லாயென்பேன்
மண்ணேயுன்முடிவிலெதுவயங்குமாங்கே
...விவுடைச்சேடனீற்றிலுண்மை
...ல்லாஞ்சொலென்பேன்சுருதியேநீ
யொருவரைப்போலனைவருக்குமுண்மையாமுன்
னுரையன்றேவுன்முடிவையுரைநீயென்பேன். ()

159. உரையிறந்துபெருமைபெற்றுத்திரைக்கைநீட்டி
யொலிக்கின்றகடலேயிவ்வுலகஞ்சூழக்
கரையுமின்றியுன்னைவைத்தாரியாரேயென்பேன்
கானகத்திற்பைங்கிளிகாள்கமலமேவும்
வரிசிறைவண்டினங்காளோதிமங்காடூது
மார்க்கமன்றோநீங்களிதுவரையிலேயும்
பெரியபரிபூரணமாம்பொருளைக்கண்டு
பேசியதுண்டோவொருகாற்பேசுமென்பேன். ()

160. ஒருவனவன்யானைகெடக்குடத்துட்செங்கை
யோட்டுதல்போலுன்பேதையுப்போடப்பை
மருவவிட்டுங்கர்ப்பூரமதனிற்றீபம்
வயங்கவிட்டுமைக்கியமுன்னிவருந்திநிற்பே
னருளுடையபரமென்றேவன்றுதானே
யானுளனென்றும்மெனக்கேயாணவாதி

பெருகுவினைக்கட்டென்றுமென்னூற்கட்டிப்
பேசியதன்றேயருணூல்பேசிற்றன்றே. (உக)

161. அன்றுமுதலின்றைவரைச்சனனகோடி
யடைந்தடைந்திங்கியாதனையாலழிந்ததல்லா
லின்றைவரைமுத்தியின்றேயெடுத்ததேக
மெப்போதோதெரியாதேயிப்போதேதான்
றுன்றுமனக்கவலைகெடப்புலைநாயேனைத்
தொழும்புகொளச்சீகாழித்துரையேதூது
சென்றிடவேபொருளைவைத்தநாவலோய்நஞ்
சிவனப்பாவென்றவருட்செல்வத்தேவே. (௩0)

162. தேவர்தொழும்வாதவூர்த்தேவேயென்பே
றிருமூலத்தேவேயிச்சகத்தோர்முத்
காவலுறச்சிவவென்வாக்குடனேவந்த
வரசேசும்மாவிருந்துன்னருளைச்சாரப்
பூவுலகில்வளரருணகிரியேமற்றைப்
புண்ணியர்காளோவென்பேன்புரையொன்றில்லா
வோவியம்போலசைவறவுநதானேநிற்பே
ஞேதரியதுயர்கெடவேயுரைக்குமுன்னே. (௩௧)

163. ஓதரியசுகர்போலவேனேனென்ன
வொருவரிலையோவெனவுமுரைப்பேன்றூனே
பேதமபேதங்கெடவுமொருபேசாமை
பிறவாதோவாலடியிற்பெரியமோன
நாதனொருதரமுலகம்பார்க்கவிச்சை
நண்ணுஞேவென்றென்றேநானுவாகிக்
காதன்மிகுமணியிழையாரெனவாடுற்றேன்
கருத்தறிந்துபுரப்பதுன்மேற்கடன்முக்காலும். ()

164. காலமொடுதேசவர்த்தமானமாதி
கலந்துநின்றநிலைவாழிகருணைவாழி

மாலறவுஞ்சைவமுதன்மதங்களாகி
மதாதீதமானவருண்மரபுவாழி
சாலமிகுமெளியேனிவ்வழக்குப்பேசத்
தயவுவைத்துவளர்த்தவருட்டன்மைவாழி
யாலடியிற்பரமகுருவாழிவாழி
யகண்டிதாகாரவருளடியார்வாழி. (௫௫)

## தேன்முகம்.



அறுசீர்விருத்தம்.

முகம்பிலிற்றும்பைந்தாட்செய்யபங்கயத்தின்மேவு
...த்தேவேநின்னுளட்டியுவகிலமாயை [கோ
கான்முயற்கொம்பேயென்கோகானலம்புனலேயென்
வான்முகமுளரியென்கோமற்றென்கோவிளம்பல்வேண்டும்.

166. வேண்டுவபடைத்தாய்நுந்தைவிதிப்படிபுரந்தானத்தை
காண்டகவழித்தான்முக்கட்கடவுடானினையவாற்று [க்
லாண்டவனெவனோவென்னவறிகிலாதகிலநீயே
யீண்டியவல்லறீரவெம்மனோர்க்கியம்புகண்டாய். (௨)

167. கண்டனவல்லவென்றேகழித்திடுமிறுதிக்கண்ணே
கொண்டதுபரமானந்தக்கோதிலாமுத்தியத்தாற்
பண்டையிற்படைப்புங்காப்பும்பறந்தனமாயையோடே
வெண்டலைவிழிகைகாலில்விளங்கிடநின்றான்யாவன்.

168. விளங்கவெண்ணீறுபூசிவிரிசடைக்கங்கைதாங்கித் [கக்
துளங்குநன்னுதற்கண்டோன்றச்சுழல்வளிநெடுமூச்சா
களங்கமிலுருவந்தானேககனமாய்ப்பொலியப்பூமி
வளர்ந்ததாளென்னவுள்ளமன்றெனமறையொன்றின்றி.

169. மறைமுழக்கொலிப்பத்தானேவாதமோடபயக்கைகண்
முறைமையினோங்காதமுரசெனக்கறங்கவெங்குந்

குறைவிலாவணங்கிறைந்துகோதிலாநடனஞ்செய்வா
னிறையவனெனலாமியார்க்குமிதயசம்மதமீதல்லால். ()

170. அல்லலாந்தொழில்படைத்தேயடிக்கடியுருவெடுத்தே
மல்லன்மாஞாலங்காக்கவருபவர்கடவுளென்னிற்
றொல்லையாம்பிறவிவேலைதொலைந்திடாதிருணீங்காது
நல்லதுமாயைதானுநானெனவந்துநிற்கும். (சு)

171. நானெனநிற்குஞானஞானமன்றந்தஞான
மோனமாயிருக்கவொட்டாமோனமின்றாகவேதான்
றேனெனருசிக்குமன்பாற்சிந்தைநைந்துருகும்வண்ணம்
வானெனநிறைந்தானந்தமாகடல்வளைவதின்றே

172. இன்றெனவிருப்போமென்னினென்றுஞ்...
நன்றொடுதீதுமன்றிநாமுன்னேபெறுமவி...
நின்றதுபெத்தந்தானேநிரந்தரமுத்தியென்னி
ஞென்றொருவரைநான்கேட்கவுணர்வில்லைகுருவுமில்லை.

173. இல்லையென்றிடினிப்பூமியிருந்தவாறிருப்போமென்னி
னல்லவன்சாருவாகனன்சொலுநெறிக்குவீணிற்
றொல்லையேனுகமாதிதொடுப்பதேன்மயக்கமேதிங்
கொல்லைவந்திருமினென்னவுறவுசெய்திடுவனந்தோ.(கூ)

174. அந்தணர்நால்வர்காணவருட்குருவாகிவந்த [டைத்த
வெந்தையேயெல்லாந்தானென்றியம்பினனெமைப்ப
தந்தைநீயெம்மைக்காக்குந்தலைவனேநுந்தையன்றோ
பந்தமில்சித்திமுத்திபடைக்கநின்னருள்பாலிப்பாய். ()

## பன்மாலை.



எணசீர்விருத்தம்.

175. பன்மாலைத்திரளிருக்கத்தமையுணர்ந்தோர்
பாமாலைக்கேநீதான்பக்ஷமென்று

நன்மாலையாவெடுத்துச்சொன்னார்நல்லோர்
நலமறிந்துகல்லாதநானுஞ்சொன்னேன்
சொன்மாலைமாலையாக்கண்ணீர்சோரத்
தொண்டனேனெந்நாளுந்துதித்துநிற்பே
னென்மாலையறிந்திங்கேவாவாவென்றே
யெனைக்கலப்பாய்திருக்கருணையெம்பிரானே. (க)

176. கருணைமொழிசிறிதில்லேனீதலில்லேன்
கண்ணீர்கம்பலையென்றன்கருத்துக்கேற்க
வொருபொழுதும்பெற்றறியேனென்னையாளு
மொருவாவுன்னடிமைநானொருத்தனுக்கோ
[illegible]னையுமுக்குணமுங்கரணநான்கு
[illegible]ர்செயுமைம்புலனுங்காமாதியாறும்
லைரவரவுமேழைக்கோரெட்டதான
மதத்தொடும்வந்தெதிர்த்தநவவடிவமன்றே. (உ)

177. வடிவனைத்துந்தந்தவடிவில்லாச்சுத்த
வான்பொருளேயெளியனேன்மனமாமாயைக்
குடிகெடுக்கத்துசங்கட்டிக்கொண்டமோன
குருவேயென்றெய்வமேகோதிலாத
படியெனக்கானந்தவெள்ளம்வந்துதேக்கும்
படியெனக்குன்றிருக்கருணைபற்றுமாறே
யடியெடுத்தென்முடியிலின்னம்வைக்கவேண்டு
மடிமுடியொன்றில்லாதவகண்டவாழ்வே. (ங)

178. வாழ்வனைத்துமயக்கமெனத்தேர்ந்தேன்றேர்ந்த
வாறேநானப்பாலோர்வழிபாராமற்
றாழ்வுபெற்றிங்கிருந்தேனீதென்னமாயந்
தடையுற்றான்மேற்கதியுந்தடையதாமே
யூழ்வலியோவல்லதுன்றன்றிருக்கூத்தோவிங்
கொருதமியேன்மேற்குறையோவுணர்த்தாயின்னம்

பாழவதிப்படவெனக்குமுடியாதெல்லாம்
படைத்தளித்துத்துடைக்கவல்லபரிசினனே. (ச)
179. நானுனிங்கெனுமகந்தையெனக்கேன்வைத்தாய்
நல்வினைதீவினையெனவேநடுவேநாட்டி
யூனுருமுடற்சுமையென்மீதேன்வைத்தா
யுயிரெனவுமெனையொன்றவுள்ளேன்வைத்தா
யானுமையாயகிலங்கிலபேத
மனைத்தினுள்ளுந்தானகியறிவானந்தத்
தேனகிப்பாலாகிக்கனியாய்க்கன்னற்
செழும்பாகாய்க்கற்கண்டாய்த்திகழ்ந்த
180. ஒன்றியொன்றின்றின்றுமென்னையென்
யுன்னியுன்னும்பொருளலேநீயுன்பாலன்பா
னின்றதன்மைக்கிரங்கும்வயிராக்கியனல்லே
னிவர்த்தியவைவேண்டுமிந்தநீலனுக்கே
யென்றுமென்றுமிந்நெறியோர்குணமுமில்லை
யிடுக்குவார்கைப்பிள்ளையேதாவேதோ
கன்றுமனத்துடனடுதழைதின்றூற்போற்
கல்வியுங்கேள்வியுமாகிக்கலக்குற்றேனே. (சு)
181. உற்றதுணைநீயல்லாற்பற்றுவேறேன்
றுன்னேன்பன்னுளுலகத்தோடியாடிக்
கற்றதுங்கேட்டதுமிதனுக்கேதுவாகுங்
கற்பதுங்கேட்பதுமமையுங்காணுநீத
நற்றுணையேபருட்டாயேயின்பமான
நாதாந்தபரம்பொருளேநாரணுதி
சுற்றமுமாய்நல்லன்பர்தமைச்சேயாகத்
தொழும்புகொள்ளுங்கனகனமேசோதிக்குன்றே.
182. குன்றுதழுவுருவாயருவாய்ஞானக்
கொழுந்தாகியறுசமயக்கூத்துமாடி

நின்றாயேமாயையெனுந்திரையைநீக்கி
நின்னையாரறியவல்லார்நினைப்போர்நெஞ்ச
மன்றாகவின்பக்கூத்தாடவல்ல
மணியேயென்கண்ணேமாமருந்தேநால்வர்க்
கன்றாலின்கீழிருந்துமோனஞான
மமைத்தசின்முத்திரைக்கடலேயமரரேறே. (அ)

183. திரையில்லாக்கடல்போலச்சலனந்தீர்ந்து
தெளிந்துருகும்பொன்போலச்செகத்தையெல்லாங்
கரையவேகனிந்துருக்குமுகத்திலேநீ
கனிந்தபரமானந்தக்கட்டியிந்நாள்
வலவரக்காணெனொன்றற்கட்டி
வார்த்தைசொன்றற்சுகம்வருமோவஞ்சனேனை
யிரையிலேயிருத்திநிருவிகற்பமான
வின்பநிஷ்டைகொடுப்பதையாவெந்தநாளோ.(கூ)

184. எந்தநாளுனக்கடிமையாகுநாளோ
வெந்நாளோகதிவருநாளெளியனேன்றன்
சிந்தைநாளதுவரைக்குமயங்கிற்றல்லாற்
றெளிந்ததுண்டோமௌனியாயத்தெளியவோர்
றந்தநாண்முதலின்பக்கால்சற்றல்லாற் [சொற்
றடையறவானந்தவெள்ளந்தானேபொங்கி
வந்தநாளில்லைமெத்தவலைந்தேனுன்னை
மறவாவின்பத்தாலேவாழ்கின்றேனே. (க0)

## நினைவொன்று



### ஞானிகளிடம்போருளேவல்.

எணசீர்விருத்தம்.

185. நினைவொன்றுநினையாமனிற்கினகமென்பார்
நிற்குமிடமேயருளாநிஷ்டையருளொட்டுந்

தனையென்றுமறந்திருப்பவருள்வடிவானதுமேற்
றட்டியெழுந்திருக்குமின்பந்தன்மயமேயதுவாம்
பினையொன்றுமிலை பந்தவின்பமெனுநிலயம்
பெற்றாரேபிறவாமைபெற்றார்மற்றுந்தான்
மனையென்றுமகவென்றுஞ்சுற்றமென்றுமசுத்த [டே.
வாதனையாமாசையொழிமன்னொருசொற்கொண்

186. ஒருமொழியேபலமொழிக்குமிடங்கொடுக்குமந்த [த
வொருமொழியேமலமொழிக்குமொழிக்குமெனமொழிந்
குருமொழியேமலையிலக்குமற்றைமொழியெல்லாங்
கோடின்றிவட்டாடல்கொள்வதொக்கு
கருமொழியிங்குனக்கில்லைமொழிக்குமெ
கரும்பனையசொற்கொடுனைக்காட்டவுங்
றருமொழியிங்குனக்கில்லையுன்னைவிட்டுநீங்காத்
தற்பரமாயானந்தப்பொற்பொதுவாய்நில்லே. (உ)

187. நில்லாதவாக்கைநிலையன்றெனவேகண்டாய்
நேயவ நண்மையன்றோநிலையமதாநிற்கக்
கல்லாதேயென்படிந்தாய்கற்றதெல்லாமூடங்
கற்றதெல்லாமூடமென்றேகண்டனையுமன்று
சொல்லாலேபயனில்லைசொன்முடிவைத்தானே [நில்
தொடர்ந்துபிடிமர்க்கடம்போற்றொட்டதுபற்று
லெல்லாருமறிந்திடவேவாய்ப்பறைகொண்டடிநீ
யிராப்பகலில்லாவிடமேயெமக்கிடமென்றறிந்தே.

188. இடம்பொருளேவலைக்குறித்துமடம்புகுநாயெனவே
யெங்கேநீயகப்பட்டாயிங்கேநீவாடா
மடம்பெறுபாழ்நெஞ்சாலேயஞ்சாதேநிராசை
மன்னிடமேயிடமந்தமாநிலத்தேபொருளுந்
திடம்பெறவேநிற்கினெல்லாவுலகமும்வந்தேவல்
செய்யுமிந்தநிலைநின்றோர்சநகன்முதன்முனிவர்

கடம்பெறுமாமதயானையென்னவுநீபாசக்
கட்டானவிகளபந்தக்கட்டவிழப்பாரே. (௪)

189 பாராதியண்டமெலாம்படர்கானற்சலம்போற்
பார்த்தனையேமுடிவின்றுபாரெதுதானின்ற
தாராலுமறியாதசத்தன்றேவதுவா
யங்கிருநீயெங்கிருந்துமதுவாவைகண்டாய்
பூராயமாகவுநீமற்றொன்றைவிரித்துப்
புலம்பாதேசஞ்சலமாப்புத்தியைநாட்டாதே
யோராதேயொன்றையுநீமுன்னிலைவையாதே
யுள்ளபடிமுடியுமெலாமுள்ளபடிகாணே (௫)

[illegible] யென்னவுநீமற்றொன்றைத்தொடர்ந்திட்
[illegible] ங்கருதவேண்டாநிஷ்களங்கமதியாகிக்
கள்ளமனத்துறவைவிட்டெல்லாந்துறந்ததுறவோர்
கற்பித்தமொழிப்படியேகங்குல்பகலற்ற
வெள்ளவெளிக்கடன்மூழ்கியின்பமயப்பொருளாய்[றிக்
விரவியெடுத்தெடுத்தெடுத்துவிள்ளவும்வாயின்
கொள்ளைகொண்டகண்ணீருங்கம்பலையுமாகிக்
கும்பிட்டுச்சகம்பொய்யெனத்தம்பட்டமடியே (௬)

191. அடிமுடியுநடுவுமற்றபரவெளிமேற்கொண்டா
லத்துவிதவானந்தசித்தமுண்டாநமது
குடிமுழுதும்பிழைக்குமொருகுறையுமில்லையெடுத்த
கோலமெல்லாநன்றாகுங்குறைவுநிறைவறவே
விடியுமுதயம்போலவருளுதயம்பெற்ற
வித்தகரோடுங்கூடிவிளையாடலாகும்
படிமுழுதும்விண்முழுதுந்தந்தாலுங்களியாப்
பாலருடனுன்மத்தர்பசாசர்குணம்வருமே. (எ)

192. வரும்போமென்பனவுமின்றியென்றுமொருபடித்தாய்
வானுதிதத்துவத்தைவளைந்தருந்திவெளியா

மிரும்போகல்லோமரமோவென்னுநெஞ்சைக்கனன்மே
விட்டமெழுகாவுருக்குமின்பவெள்ளமாகிக்
கரும்போகண்டோசீனிச்சருக்கரையோதேனோ
கனியமிர்தோவெனருசிக்குங்கருத்தவிழ்ந்தோருணர்வா
ரரும்போநன்மணங்காட்டுங்காமரசங்கன்னி
யறிவாளோவபக்குவர்க்கோவந்நலந்தான்விளங்கும். (அ)

193. தானேயுமிவ்வுலகமொருமுதலுமாகாத்
தன்மையினுற்படைத்தளிக்குந்தலைமையதுவான
கோனுகவொருமுதலிங்குண்டெனவும்யூகங்
கூட்டியதுஞ்சகமுடிவிற்குலவுறுமெய்ஞ்ஞான
வானுகவம்முதலேங்கிற்குங்லோநம்மான்
மதிப்பரிதாமெனமோனம்வைத்ததுங்
யானுலுமனஞ்சடமென்றமுங்காதேயுண்மை
யறிவித்தவிடங்குருவாமருளிலதொன்றிலேயே. ()

போன்னைமாதரை.



கலிவிருத்தம்.

194. பொன்னைமாதரைப்பூமியைநாடிடே
னென்னைநாடியவென்னுயிர்நாதனே
யுன்னைநாடுவனுன்னருட்டுவெளி
தன்னைநாடுவன்றன்னந்தனியனே. (க)

195. தன்னதென்றுரைசாற்றுவனவெலா
மின்னதென்றனேநின்னிடத்தேதந்தே
னின்னமென்னையிடருறக்கூட்டினுற்
பின்னையுய்கிலன்பேதையனுவியே. (உ)

196. ஆவியேயுனையானறிவாய்நின்று
சேவியேன்களச்சிந்தைதிறைகொடேன்

பாவியேனுளபான்மையைக்கண்டுநீ
கூவியாளெனையாட்கொண்டகோலமே. (௩)

197. கோலமின்றிக்குணமின்றிநின்னருட்
சீலமின்றிச்சிறியன்பிழைப்பனோ
வாலமுண்டமிர்தருவாய்வந்த
காலமென்னைநகைந்நிலைகாண்பதே (௪)

198. காணுங்கண்ணிற்கலந்தகண்ணேயுனைச்
சேணும்பாருந்திரிபவர்காண்பரோ
வாணும்பெண்ணுமதுவெனும்பான்மையு
ங்கோலம்பொருந்தியுணிற்கவே. (௫)

[illegible]ன்னிலைநிற்கப்பெற்றாரருள்
வர்க்கமன்றிமனிதரன்றேயையா
துர்க்குணக்கடற்சோங்கன்னபாவியேற்
கெற்குணங்கண்டென்பெயர்சொல்வதே. (௬)

200. சொல்லையுன்னித்துடித்ததலாலரு
ளெல்லையுன்னியெனையங்குவைத்திலேன்
வல்லைநீயென்னைவாவென்றிடாவிடிற்
கல்லையாமிக்கருமிநடக்கையே. (௭)

201. கையுமெய்யுங்கருத்துக்கிசையவே
ஐயதந்ததற்கையமினியுண்டோ
பொய்யனேன்சிந்தைப்பொய்கெடப்பூரண
மெய்யதாமின்பமென்றுவிளைவதே. (௮)

202. என்றுமுன்னையிதயவெளிக்குளே
துன்றவைத்தனனேயருட்சோதிநீ
நின்றதன்மைநிலைக்கென்னைநேர்மையா
நன்றுதீதறவைத்தநடுவதே, (௯)

203. வைத்ததேகம்வருந்தவருந்திடும்
பித்தனருள்பெற்றுந்திடமிலேன்
சித்தமோனசிவசின்மயானந்தம்
வைத்தவையவருட்செம்பொற்சோதியே. (க0)

204. செம்பொன்மேனிச்செழுஞ்சுடரேமுழு
வம்பனேனுனைவாழ்த்துமதியின்றி
யிம்பர்வாழ்வினுக்கிச்சைவைத்தேன்மன
நம்பிவாவெனினென்கொல்செய்வதே. (கக)

205. செய்யுஞ்செய்கையுஞ்சிந்திக்குஞ்சிந்தையு
மையநின்னதென்றெண்ணுமறிவின்றி
வெய்யகாமவெகுளிமயக்கமாம்
பொய்யிலேசுழன்றேனென்னபுன்மையே. (கஉ)

206. புன்புலானரம்பென்புடைப்பொய்யுட
லன்பர்யார்க்குமருவருப்பல்லவோ
வென்பொலாமணியேயிறையேயித்தாற்
துன்பமன்றிச்சுகமொன்றுமில்லையே. (கந)

207. இல்லையுண்டென்றெவர்பக்கமாயினுஞ்
சொல்லவோவறியாதகொழும்பன்யான்
செல்லவேறொருதிக்கறியேனெலாம்
வல்லநீயெனைவாழ்விக்கவேண்டுமே. (கச)

208. வேண்டுஞ்சீருண்மெய்யன்பர்க்கேயன்பு
பூண்டநானென்புலமறியாததோ
வாண்டநீயுன்னடியவனென்று
தூண்டுவேனன்றித்தொண்டனென்சொல்வதே. ()

209. எனக்குளேயுயிரென்னவிருந்தநீ
மனக்கிலேசத்தைமாற்றல்வழக்கன்றோ

கனத்தசிரருட்காட்சியைவொன்றை
நினைக்கவோவறியாதென்றனெஞ்சமே. (கசு)

210. கெஞ்சுகங் குழைநேசிக்கமார்க்கண்டர்க்
[illegible]
தஞ்சமென்றுன்சரணடைந்தேனெங்குஞ்
செஞ்செவேநின்றசிற்சுகவாரியே. (கஎ)

211. வாரியேழுமலையும்பிறவுந்தான்
சீரிதானநின்சின்மயத்தேயன்று
வாரிலேயுளதாவித்திரளதை
[illegible]லெனையாண்டவொருவனே. (கஅ)

[illegible]ரன்னுளத்துள்குங்குறிப்பறிந்
தருள்வரோவெனையாளுடையண்ணலே
மருளனேன்பட்டவாதைவிரிக்கின்றே
பெருகுநாளினிப்பேசவிதியின்றே. (ககூ)

213. இன்றுனக்கன்பிழைத்திலனென்றே
யன்றுதொட்டெனையாளரசேயென்று
நின்றரற்றியகீலனைக்கைவிட்டான்
மன்றமெப்படிநின்னருள்வாழ்த்துமே. (உ0)

214. வாழ்த்துநின்னருள்வாரம்வைத்தாலன்றிப்
பாழ்த்தசிந்தைப்பதகனுமுய்வனோ
சூழ்த்துநின்றதொழும்பரையானந்தத்
தாழ்த்துமுக்கணருட்செம்பொற்சோதியே. (உக)

215. சோதியேசுடரேசுகமேதுணை
நீதியேநிசமேநிறைவேநிலை
யாதியேயுனையானடைந்தேனகம்
வாதியாதருள்வாயருள்வானையே. (உஉ)

216. வானைப்போலவளைந்துகொண்டானந்தத்
தேனைத்தந்தெனைச்சேர்ந்துகலந்தமெய்ஞ்
ஞானத்தெய்வத்தைநாடுவனுனெனு
மீனப்பாழ்கெடவென்றுமிருப்பனே. (௨௩)

217. இரும்பைக்காந்தமிழுக்கின்றவாறெனைத்
திரும்பிப்பார்க்கவொட்டாமற்றிருவடிக்
கரும்பைத்தந்துகண்ணீர்கம்பலையெலா
மரும்பச்செய்யெனதன்னையொப்பாமனே. (௨௪)

218. அன்னையப்பனென்றுவித்துணையெனுந்
தன்னையொப்பற்றசற்குருவென்பதென்
னென்னைப்பூரணவின்பவெளிக்குளே
துன்னவைத்தசுடரெனத்தக்கதே. (௨௫)

219. தக்ககேள்வியிற்சார்ந்தநற்பூமியின்
மிக்கதாகவிளங்குமுதலொன்றே
யெக்கணுந்தொழுயாவையும்பூத்துக்காய்த்
தொக்கநின்றுமொன்றாய்நிறைவானதே. (௨௬)

220. ஆனமானசமயங்களாறுக்குந்
தானமாய்நின்றுதன்மயங்காட்டிய
ஞானபூரணநாதனைநாடியே
தீனனேனின்பந்தேக்கித்திளைப்பனே. (௨௭)

221. தேக்கியின்பந்திளைக்கத்திளைக்கவே
யாக்கமாயெனக்கானந்தமாகியே
போக்கிஞேடுவரவற்றபூரணந்
தாக்கிநின்றவாதன்மயமாமதே. (௨௮)

222. அதுவென்றுன்னுமதுவுமறநின்ற
முதியஞானிகண்மோனப்பொருளது

வெதுவென்றெணணியிறைஞ்சுவனேமையேன்
மதியுணின்றின்பவாரிவழங்குமே. (உகூ)

223. வாரிக்கொண்டெனைவாய்மடுத்தின்பமாய்ப்
பாரிற்கண்டவையாவும்பருகினே
யோரிற்கண்டிடுமுமன்கனவென
யாருக்குஞ்சொலவாயிலையையனே. (௩0)

224. ஐயமற்றவறிவருணர்க்கெலாங்
கையிலாமலகக்கனியாகிய
மெய்யனேயிந்தமேதினிமீதுழல்
பொய்யனேற்குப்புகலிடமெங்ஙனே. (௩க)

...னையுய்யயாளெனவென்பதற்
றங்ஙனேயுன்னருண்மயமாகிலேன்
றிங்கள்பாதிதிகழப்பணியணி
கங்கைவார்சடைக்கண்ணுதலெந்தையே. (௩உ)

226. கண்ணிற்காண்பதுன்காட்சிகையாற்றொழில்
பண்ணல்பூசைபகர்வதுமந்திரம்
மண்ணெடைந்தும்வழங்குயிர்யாவுமே
யண்ணலேயுன்னருள்வடிவாகுமே. (௩௩)

227. வடிவெலாநின்வடிவெனவாழ்த்திடாக்
கடியனேனுமுன்காரணங்காண்பனோ
நெடியவானெனவெங்குநிறைந்தொளி
ரடிகளேயரசேயருளத்தனே. (௩௪)

228. அத்தனேயகண்டானந்தனேயருட்
சுத்தனேயெனவுன்னைத்தொடர்ந்திலேன்
மத்தனேன்பெறுமாமலமாயவான்
கத்தனேகல்வியாததுகற்கவே. (௩௫)

229. கற்றுமென்பலன்கற்றிடு நூன்முறை
சொற்றசொற்கள்சுகாரம்பமோநெறி
நிற்றல்வேண்டுநிருவிகற்பச்சுகம்
பெற்றபேர்பெற்றபேசாப்பெருமையே. (௩௯)

230. பெருமைக்கேயிறுமாந்துபிதற்றிய
கருமிக்கையகதியுமுண்டாங்கொலோ
வருமைச்சீரன்பர்க்கன்னையொப்பாகவே
வருமப்பேரொளியேயுன்மனுந்தமே.

231. உன்மனிக்குளொளிர்பரஞ்சோதியாஞ்
சின்மயப்பொருளேபழஞ்செல்வமே
புன்மலத்துப்புழுவன்னபாவியேன்
கன்மனத்தைக்கரைக்கக்கடவதே.

232. கரையிலின்பக்கடலமுதேயிது
வரையினுனுனைவந்துகலந்திலே
னுரையிலாவின்பமுள்ளவர்போலவித்
தரையிலேநடித்தேனென்னதன்மையே. (௩௯)

233. மையுலாம்விழிமாதர்கடோதகப்
பொய்யிலாழும்புலையினிப்பூரை காண்
கையிலாமலகக்கனிபோன்றவென்
னையனேயெனையாளுடையண்ணலே. (௪0)

234. அண்ணலேயுன்னடியவர்போலருட்
கண்ணினுனுனைக்காணவும்வாவெனப்
பண்ணினுலென்பசுத்துவம்போயுயும்
வண்ணமாகமனோலயம்வாய்க்குமே. (௪௧)

235. வாய்க்குங்கைக்குமௌனமௌனமென்
றேய்க்குஞ்சொற்கொண்டிராப்பகல்ற்றிடா

நாய்க்குமின்பமுண்டோநல்லடியாரைத்
தோய்க்குமானந்தத்தூவெளிவெள்ளமே. (சஉ)

236. தூயதானதுரியவறிவெனுந்
தாயுநீயின்பத்தந்தையுநீயென்றாற்
சேயதாமிந்தச்சீவத்திரளன்றோ
வாயும்பேரொளியானவகண்டமே. (சங)

237. அகண்டமென்னவருமறையாகமம்
புகன்றநின்றன்மைபோதத்தடங்குமோ
செகங்களெங்குந்திரிந்துநன்மோனத்தை
...குபேருணையொன்றுவரையனே. (சச)

...ாயுனையன்றியொருதெய்வம்
கையினாற்றொழுவுங்கருதேன்கண்டாய்
பொய்யனுகிலும்பொய்யுரையேன்சுத்த
மெய்யனுமுனக்கேவெளியாகுமே. (சரு)

239. வெளியினின்றவெளியாய்விளங்கிய
வொளியினின்றவொளியாமுன்றன்னைநான்
றெளிவுதந்தகல்லாலடித்தேவென்று
களிபொருந்தவன்றோகற்றகல்வியே. (சசு)

240. கல்லையுற்றகருத்தினர்கார்நிறத்
தல்லையொத்தகுழலினராசையா
லெல்லையற்றமயல்கொளவோவெழிற்
றில்லையிற்றிகழுந்திருப்பாதனே. (சஎ)

241. திருவருட்டெய்வச்செல்விமலைமக
ளுருவிருக்கின்றமேனியொருபாங்
குருவைமுக்கணெங்கோவைப்பணிநெஞ்சே
கருவிருக்கின்றகன்மமிங்கில்லையே.

242. கன்மமேதுகடுநர்கேதுமேற்
சென்மமேதெனைத்திண்டடக்கடவதோ
வென்மனோரதமெய்தும்படிக்கரு
ணன்மைகூர்முக்கணுதணிருக்கவே. (சக)

243 நாதகீதனென்றுதன்முக்கட்பிரான்
வேதவேதியன்வெள்விடையூர்திமெய்ப்
போதமாய்நின்றபுண்ணியன்பூந்திருப்
பாதமேகதிமற்றிலைபாழ்நெஞ்சே. (நo)

244. மற்றுனக்குமயக்கமென்வன்னெஞ்சே
கற்றைவார்சடைக்கண்ணுதலோனருள்
பெற்றபேரவரேபெரியோரெலா
முற்றுமோர்ந்தவர்மூதுரையர்த்தமே. (நக)

245. உரையிறந்துளத்துள்ளவிகாரமாந்
திரைகடந்தவர்தேடுமுக்கட்பிரான்
பரைநிறைந்தபரப்பெங்ஙனங்ஙனே
கரைகடந்தின்பமாகக்கலப்பனே. (நஉ)

246. கலந்த்முத்திகருதினுங்கேட்பினு

யலந்துபோயினமென்னுமருமறை
மலர்ந்தவாய்முக்கண்மாணிக்கச்சோதியே. (நங)

247. சோதியாதெனைத்தொண்டருட்கூட்டியே
போதியாதவெல்லாமௌப்போதிக்க
வாதிகாலத்தினுன்னடிக்காந்தவ
மேதுநான்முயன்றேன்முக்கணெந்தையே. (நச)

248. எந்தநாளைக்குமின்றருடாயென
நந்தீரருள்வாழ்கவென்றுன்னுவேன்

சிந்தைநோக்கந்தெரிந்துகுறிப்பெலாந்
தந்துகாக்குந்தயாமுக்கணுதியே. (ருரு)

249. கண்ணகன்றவிக்காசினியூடெங்கும்
பெண்ணொடாண்முதலாமென்பிறவியை
யெண்ணவோவரிதேதைழகதிபெறும்
வண்ணமுக்கண்மணிவந்துகாக்குமே. (ருசு)

250. காக்குநின்னருட்காட்சியல்லாலொரு
போக்குமில்லையென்புந்திக்கிலேசத்தை
நீக்கியாளுகைநின்பரமன்பின
[illegible]மேமுக்கணுமாநந்தமூர்த்தியே. (ருஎ)

251. [illegible]மாநந்தங்கதியென்னவென்னுனந்த
மோனஞ்சொன்னமுறைபெறமுக்கணீ
கோனிங்கிந்தகுறிப்பதனால்வெறுந்
தீனன்செய்கைதிருவருட்செய்கையே. (ருஅ)

252. கையினுற்றுருழுகேத்திக்கசிந்துள
மெய்யினாலுனைக்காணவிரும்பினே
னையனேயரசேயருளேயருட்
டையலோர்புறம்வாழ்சகநாதனே. (ருகூ)

253. சகத்தின்வாழ்வைச்சதமெனவெண்ணியே
மிகுத்ததீமைவிளையவிளைக்கின்றே
னகத்துளாரமுதாமையநின்முத்திச்
சுகத்தினுன்வந்துதோய்வதெக்காலமே. (சுO)

254. காலமூன்றுங்கடந்தொளிராநின்ற
சீலமேநின்றிருவருளாவிநத்ர
சாலமாமிச்சகமெனவெண்ணிநின்
கோலமார்தெலென்றுகொடியனே. (சுக)

255. கொடியவெவ்வினைக்கூற்றைத்துரந்திடு
மடிகளாம்பொருளேநினக்கன்றிப்
படியிலேழைமைபற்றுகின்றேன்வெறு
மிடியினேன்கதிமேவும்விதியின்றே. (௬௨)

256. விதியையும்விதித்தென்னைவிதித்திட்ட
மதியையும்விதித்தம்மதிமாயையிற்
பதியவைத்தபசுபதிநின்னருட்
கதியையெப்படிக்கண்டுகளிப்பதே. (௬௩)

257. கண்டகண்ணுக்குக்காட்டுங்கதிரெனப்
பண்டுமின்றுமென்பானின்றுணர்த்திடு
மண்டனேயுனக்கோர்பதினாயிரந்
தெண்டனென்பொய்ம்மைதீர்த்திடல்வேண்டுமே. ( )

258. வேண்டும்யாவுமிறந்துவெளியிடைத்
தூண்டுவாரற்றசோதிப்பிரானின்பாற்
பூண்டவன்பர்தம்பொற்பணிவாய்க்குமே
வீண்டுசன்மமெடுப்பனனந்தமே. (௬௫)

259. எடுத்ததேகமிறக்குமுனேயெனைக்
கொடுத்துநின்னையுங்கூடவுங்காண்பனோ
வடுத்தபேரறிவாயறியாமையைக்
கெடுத்தவின்பக்கிளர்மணிக்குன்றமே. (௬௬)

260. குன்றிடாதகொழுஞ்சுடரேமணி
மன்றுளாடியமாணிக்கமேயுனை
யன்றியார்துணையாருறவார்கதி
யென்றுநீயெனக்கின்னருள்செய்வதே. (௬௭)

261. அருளெலாந்திரண்டோர்வடிவாகிய
பொருளெலாம்வல்லபொற்பொதுநாதவென்

[illegible]ளெலாங்கெடுத்தேயுளமன்னலா
விருளெலாமிரிந்தெங்கொளித்திட்டதே. (சூஅ)

262. எங்குமென்னையிகலுறவாட்டியே
பங்கஞ்செய்தபழவினைபற்றற்று
லங்கணுவுன்னடியிணையன்றியே
தங்கவேறிடமுண்டோசகத்திலே. (சூகூ)

263. உண்டவர்க்கன்றியுட்பசியோயுமோ
கண்டவர்க்கன்றிக்காதலடங்குமோ
தொண்டருக்கெளியானென்றுதோன்றுவான்
[illegible]டமிழ்க்கிசைவாகமதிக்கவே. (எ0)

[illegible]ங்கங்கையுங்கொன்றையுமத்தமும்
பொதியுஞ்சென்னிப்புனிதநின்பொன்னடிக்
கதியைவிட்டிந்தக்காமத்திலாழ்ந்தவென்
விதியையெண்ணிவிழிதுயிலாதன்றே. (எக)

265. அன்றெனச்சொலவாமெனவற்புத
நன்றெனச்சொலநண்ணியநன்மையை
யொன்றெனச்சொனவொண்பொருளேயொளி
யின்றெனக்கருள்வாயிருளேகவே. (எஉ)

266. இருவரேபுகழ்ந்தேத்தற்கினியரா
மொருவரேதுணையென்றுணராய்நெஞ்சே
வருவரேகொடுங்காலர்கள்வந்தெதிர்
பொருவரேயவர்க்கென்கொல்புகல்வதே. (எ௩)

267. புகழுங்கல்வியும்போதமும்பொய்யிலா
வகமும்வாய்மையுமன்புமளித்தவே
சுகவிலாசத்துணைப்பொருடோற்றமாந்
தகனமேனியைக்கண்டனகண்களே. (எ௪)

268. கண்ணுணின்றவொளியைக்கருத்தினை
விண்ணுணின்றுவிளங்கியமெய்யினை
யெண்ணியெண்ணியிரவும்பகலுமே
நண்ணுகின்றவர்நான்றொழுந்தெய்வமே. (எ௫)

269. தெய்வம்வேறுளதென்பவர்சிந்தனை
நைவரென்பதுநற்பரதற்பர
சைவசிற்சிவனேயுனைச்சார்ந்தவ
ருய்வரென்பதும்யானுணர்ந்தேனுற்றே. (எசு)

270. உற்றவேளைக்குறுதுணையாயிந்தச்
சுற்றமோநமைக்காக்குஞ்சொலாய்நெஞ்சே
கற்றைவார்சடைக்கண்ணுதல்பாதமே
பற்றதாயிற்பரசுகம்பற்றுமே. (எஎ)

271. பற்றலாம்பொருளேபரம்பற்றினு
லுற்றமாதவர்க்குண்மையைநல்குமே
மற்றும்வேறுளமார்க்கமெலாமெடுத்
தெற்றுவாய்மனமேகதியெய்தவே. (எஅ)

---

## ஆரணம்.



### எழுசீர்விருத்தம்.

272. ஆரணமார்க்கத்தாகமவாசி
யற்புதமாய்நடந்தருளுங்
காரணமுணர்த்துங்கையுநின்மெய்யுங்
கண்கண்மூன்றுடையவென்கண்ணே
பூரணவறிவிற்கண்டிலமதனாற்
போற்றியிப்புந்தியோடிருந்து
தாரணியுள்ளமட்டுமேவணங்கத்
தமியனேன்வேண்டிடத்தருமே. (க)

273. இடமொருமடவாளுலகனைத்தீன்றிட்
டெவ்வுலகத்தையுமீன்றுந்
தடமுறுமகிலமடங்குநாளம்மை
தன்னையுமொழித்துவின்னெனவே
படமுறுசோதிக்கருணையங்கடலே
பாயிருட்படுகிற்கிடக்கக்
கடனதோர்வினைப்புமறப்பெனுந்திரையைநீ
கவர்ந்தெனைவளர்பதுன்கடனே. (உ)

274. வளம்பெறுஞானவாரிவாய்மடுத்து
மண்ணையும்விண்ணையுந்தெரியா
துறுந்துரும்பொத்தாவியோடாக்கை
யானந்தமாகவேயலந்தேன்
களம்பெறுவஞ்சநெஞ்சினர்காணக்
காட்சியேசாட்சியேயறிஞ
ருளம்பெறுந்துணையேபொதுவினினடிக்கு
முண்மையேயுள்ளவாறிதுவே. (ங)

275. உள்ளமேநீங்காவென்னைவாவாவென்
றுலப்பிலாவானந்தமான
வெள்ளமேபொழியுங்கருணைவான்முகிலே
வெப்பிலாத்தண்ணருள்விளக்கே
கள்ளமேதுரக்குந்தூவெளிப்பரப்பே
கருவெனக்கிடந்தபாழ்மாயப்
பள்ளமேவீழாதெனக்கரையேற்றிப்
பாலிப்பதுன்னருட்பரமே. (ச)

276. பரம்பரமாகிப்பக்குவம்பழுத்த
பழவடியார்க்கருள்பழுத்துச்
சுரந்தினிதிரங்குந்தானகற்பகமே
சோதியேதொண்டனேனின்னை

யிரந்துநெஞ்சுடைந்துகண்டுயில்பொறும
விருந்ததுமென்கணிவிருட்டைக்
காந்துநின்கண்ணுற்றுயில்பெறல்வேண்டிக்
கருதினேன்கருத்திதுதானே. (௬)

277. கருத்தினுட்கருத்தாயிருந்துநீயுணர்த்துங்
காரணங்கண்டுசும்மாதான்
வருத்தமற்றிருந்துசுகம்பெறுவண்ணம்
வருந்தினேன்மதியின்மைதீர்ப்பா
ரொருத்தராருளப்பாடுணர்பவர்யாவ
ருலகவர்பன்னெறியெனக்குப்
பொருத்தமோசொல்லாய்மௌனசற்குருவே
போற்றிநின்பொன்னடிப்போதே.

278. அடியெனுமதுவுமருளெனுமதுவு
மறிந்திடிநிற்குணநிறைவு
முடியெனுமதுவும்பொருளெனுமதுவு
மொழிந்திடிற்சுகமனமாயைக்
குடிகெடவேண்டிற்பணியறநிற்றல்
குணமெனப்புன்னகைகாட்டிப்
படிமிசைமௌனியாகிநீயாளப்
பாக்கியமென்செய்தேன்பரனே (எ)

279. என்செயனின்றியாவுநின்செயலென்
றெண்ணுவேனெவ்வொருகாலம்
புன்செயன்மாயைமயக்கினென்செயலாப்
பொருந்துவேனஃதொருகாலம்
பின்செயல்யாதுநினைவின்றிக்கிடப்பேன்
பித்தனேனன்னிலைபெறநின்
றன்செயலாகமுடித்திடல்வேண்டுஞ்
சச்சிதானந்தசற்குருவே. (அ)

280. குருவுருவாகிமெளனியாய்மெளனக்
கொள்கையையுணர்த்தினையதனாற்
கருவுருவாவதெனக்கிலையிந்தக்
காயமோபொய்யெனக்கண்ட
திருவுருவாளரனுபவநிலையுஞ்
சேருமோவாவலோமெத்த
வருவுருவாகியல்லவாய்ச்சமய
மளவிடாவானந்தவடிவே. (௯)

281. வடிவிலாவடிவாய்மனநினைவனுகா
மார்க்கமாய்நீக்கருஞ்சுகமாய்
ரவீட்டின்வாழ்க்கைவேண்டினர்க்குன்
ஞ்ஞானமல்லால்வழியுண்டோ
படியிருளகலச்சின்மயம்பூத்த
பசுங்கொம்பையடக்கியோர்கல்லா
லடியிலேயிருந்தவானந்தவரசே
யன்பரைப்பருகுமாரமுதே. (௧௦)



## சொல்லற்கரிய.

அறுசீர்விருத்தம்.

282. சொல்லற்கரியபரம்பொருளே
சுகவாரிதியேசுடர்க்கொழுந்தே
வெல்லற்கரியமயலிலெனை
விட்டெங்கொளித்தாயாகெட்டேன்
கல்விற்பசியநாருரித்துக்
கடுகிற்பெரியகடலடைக்கு
மல்லிற்கரியவந்தகனார்க்
களாக்கினையோவறியேனே. (௧

283. அறிவிற்கறிவுதாரகமென்
றறிந்தேயறிவோடறியாமை
நெறியிற்புகுதாதோர்படித்தாய்
நின்றநிலையுந்தெரியாது
குறியற்றகண்டாதீதமயக்
கோதிலமுதேயெனைக்குறுகிப்
பிறிவற்றிருக்கவேண்டாவோ
பேயேற்கினிநீபேசாயே. (உ)

284. பேசாவனுபூதியையடியேன்
பெற்றுப்பிழைக்கப்பேரருளாற்
றேசோமயந்தந்தினியொருகாற்
சித்தத்திருளுந்தீர்ப்பாயோ
பாசாடவியைக்கடந்தவன்பர்
பற்றுமகண்டப்பரப்பான
வீசாபொதுவினடமாடு
மிறைவாகுறையாவின்னமுதே. (௩)

285. இன்பக்கடலிற்புகுந்திடுவா
னிரவும்பகலுந்தோற்றும
லன்பிற்கரைந்துகரைந்துருகி
யண்ணுவரசேயெனக்கூவிப்
பின்புற்றழுஞ்சேயெனவிழிநீர்
பெருக்கிப்பெருக்கிப்பித்தாகித்

சொரூபானந்தச்சுடர்க்கொழுந்தே. (௪)

286. கொழுந்துதிகழ்வெண்பிறைச்சடிலக்
கோவேமன்றிற்கூத்தாடற்
கெழுந்தசுடரேயிமையவரை
யென்றாய்கண்ணுக்கினியானே

தொழுந்தெய்வமுநீகுருவுநீ
தாணைநீதந்தைதாயுநீ
யழுந்தும்பவநீநன்மையுநீ
யாவியாக்கைநீதானே. (௫)

287. தானேயகண்டாகாரமயந்
தன்னிலெழுந்துபொதுநடஞ்செய்
வானேமாயப்பிறப்பறுப்பான்
வந்துன்னடிக்கேகரங்கூப்பித்
தேனேயென்னைப்பருகவல்ல
தெள்ளாரமுதேசிவலோகக்
கோனேயெனுஞ்சொன்னினதுசெவி
புகுந்துகொள்ளாதென்னோகூறாயே. (௬)

288. கூறுகின்றவிடர்க்கவலை
குடும்பக்கூத்துட்டுளைந்துதடு
மாறுகின்றபாவியைநீ
வாவென்றழைத்தாலாகாதோ
நீறார்மேனிமுக்கணுடை
நிமலாவடியார்நினைவினிடை
யாறாய்ப்பெருகும்பெருங்கருணை
யரசேயென்னையாள்வானே. (௭)

289. வானேமுதலாம்பெரும்பூதம்
வகுத்துப்புரந்துமாற்றவல்ல
கோனேயென்னைப்புரக்குநெறி
குறித்தாயிலையேகொடியேனைத்
தானேபடைத்திங்கென்னபலன்
றன்னைப்படைத்தாயுன்கருத்தைத்
தானேதென்றிங்கறியேனே
நம்பேனென்கண்டாருள்வாயே (௮)

290. கண்டார்கண்டகாட்சியுநீ
காணூர்காணுக்கள்வனுநீ
பண்டாருயிர்நீயாக்கையுநீ
பலவாஞ்சமயப்பகுதியுநீ
யெண்டோண்முக்கட்செம்மேனி
யெந்தாய்நினக்கேயெவ்வாறு
தொண்டாய்ப்பணிவரவர்பணிநீ
சூட்டிக்கொள்வதெவ்வாறே. (௯)

291. சூட்டியெனதென்றிடுஞ்சுமையைச்
சுமத்தியெனையுஞ்சுமையாளாக்
கூட்டிப்பிடித்துவினைவழியே
கூத்தாட்டினையேநினதருளால்
வீட்டைக்கருதுமப்போது
வெளியாமுலகவியப்பனைத்து
மேட்டுக்கடங்காச்சொப்பனம்போ
லெந்தாயிருந்ததென்சொல்வேன். (௧0)

## வம்பனேன்.



அறுசீர்விருத்தம்.

292. வம்பனேனைகள்ளங்கண்டு
மன்னருள்வெள்ளராய
வும்பர்பாலேவல்செய்யென்
றுணர்த்தினையோகோவானோர்
தம்பிரானேநீசெய்த
தயவுக்குங்கைம்மாறுண்டோ
வெம்பிரானுய்ந்தேனுய்ந்தே
னினியொன்றுங்குறைவிலேனே. (௧)

293. குறைவிலாநிறைவாய்ஞானக்
கோதிலானந்தவெள்ளத்
துறையிலேபடிந்துமூழ்கித்
துளைந்துநான்றேன்றுவாறுள்
ளுறையிலேயுணர்த்திமோன
வொண்சுடர்வைவாடிங்க
விறைவனேயுனைப்பிரிந்திங்
கிருக்கிலேனிருக்கிலேனே. (உ)

294. இருநிலமாதிநாத
மீறதாமிவைகடந்த
பெருநிலமாயதூய
பேரொளிப்பிழம்பாய்நின்றுங்
கருதருமகண்டானந்தக்
கடவுணின்காட்சிகாண
வருகமவனறழைததாலனறு
வாழ்வுண்டோவஞ்சனேற்கே. (ந)

295. வஞ்சனையழுக்காறுதி
வைத்திடும்பாண்டமான
நெஞ்சனைவன்றின்மென்மே
னெக்குநெக்குருகப்பண்ணி
யஞ்சலிசெய்யுங்கையு
மருவிநீர்விழியுமாகத்
தஞ்சமன்றிரங்கிக்காக்கத்
தம்பராபரமனக்கே. (ச

296. உனக்குநானடித்தொண்டாகி
யுன்னடிக்கன்புசெய்ய
வெனக்குநீதோற்றியஞ்சே
லென்னுநாளெந்தநாளோ

மனக்கிலேசங்கடந்த
மாதவர்க்கிரண்டற்றோங்குந்
தனக்குநேரில்லாவொன்றே
சசிதானந்தவாழ்வே.

297. வாழ்வெனவயங்கியென்னை
வசஞ்செயதுமருட்டும்பாழ்த்த
வூழ்வினைப்பகுதிகெட்டிங்
குன்னையுங்கிட்டுவேனே
தாழ்வெனுஞ்சமயநீங்கித்
தமையுணர்ந்தோர்கட்கெல்லாஞ்
சூழ்வெளிப்பொருளேமுக்க
சோதியேயமரரேறே.

298. ஏறுவாம்பரியாவாடை

நாறுநறசாந்தநீரா
நஞ்சமேயமுதாக்கொண்ட
கூறருங்குணத்தோயுன்றன்
குரைகழல்குருகினல்லா
லாறுமோதாபசோப
மகலுமோவல்லறுனே (எ)

299. தானமுநதவமும்யோகத்
தன்மையுமுணராவென்பான்
ஞானமுந்தெவிட்டாவின்ப
நன்மையுநல்குவாயோ
பானலங்கவர்ந்தநீஞ்சொற்
பசுங்கிளிளைகாண
வானவரிறைஞ்சமன்றுள்
வயங்கியாட்டத்திறைனே. (அ)

300. நடத்தியிவ்வுலகையெல்லா
நாதனிறைந்ததன்மை
திடத்துடனறிந்தானந்தத்
தெள்ளமுதருந்திடாதே
விடத்திரளனையகாம
வேட்கையிலழுந்திமாயைச்
சடத்தினைமெய்யென்றெண்ணித்
தளரவோதனியனேனே. (க)

301. தனிவளர்பொருளேமாறாத்
தண்ணருங்கருணைபூத்த
வினியகற்பகமேமுக்க
ணெந்தையேநினக்கன்பின்றி
நனிபெருங்குடிலங்காட்டு
நயனவேற்கரியகூந்தல்
வனிதையர்மயக்கிலாழ்ந்து
வருந்தவோவம்பனேனே. (கo)



## சிவன்செயல்.

அறுசீர்விருத்தம்.

302. சிவன்செயலாலேயாதும்
வருமெனத்தேறேனானு
மவந்தருநினைவையெல்லா
மகற்றிலேனுசைவெள்ளங்
கவர்ந்துகொண்டிழுப்பவந்தக்
கட்டிலேயகப்பட்டையோ
பவந்தனையீட்டியீட்டிப்
பதைக்கின்றேன்பாவியேனே. (க)

303 பாவியேனினியென்செய்கேன்
பரமனைபணிந்துஞ்பாதஞ்
சேவியேன்விழிநீர்மல்கச்
சிவசிவவென்றுமேதம்பி
பாவியேனிறையவந்த
வமுதமேயென்னோனந்தோ
சாவிபோஞ்சமயத்தாழ்ந்து
சகத்திடைதவிக்கின்றேனே. (உ)

எழுசீர்விருத்தம்.

304 இடைந்திடைந்தேங்கிமெய்புளகிப்ப
வெழுந்தெழுந்தையநின்சரண
மடைந்தனனினிநீகைவிடேலுனக்கே
யபயமென்றஞ்சலிசெய்துள்
ளுடைந்துடைந்தெழுதுசித்திரப்பாவை
யொத்துநானசைவறநிற்பத்
தொடர்ந்துநீயெனையாட்கொள்ளுநாளென்றோ
சோதியேயாதிநாயகனே. (ங)

305. ஆதியாய்நடுவாயந்தமாய்ப்பந்தம்
யாவுமற்றகம்புறநிறைந்த
சோதியாய்ச்சுகமாயிருந்தவெம்பெருமான்
றொண்டனேன்சுகத்திலேயிருக்கப்
போதியாவண்ணங்கைவிடன்முறையோ
புன்மையேனென்செய்கேன்மனமோ
வாதியாநின்றதன்றியும்புலன்சேர்
வாயிலோர்தீயினுங்கொடிதே. (௪)

306. வாயிலோரைந்திற்புலனெனும்வேடர்
வஞ்தெனையீர்த்துவெங்காமத்

தீயிலேவெதுப்பியுயிரொடுந்தின்னச்
சிந்தைநைந்துருகிமெய்ம்மறந்து
தாயிலாச்சேய்போலலைந்தலைப்பட்டேன்
றாயினுங்கருணையாமன்று
ளுயகமாகியொளிவிடுமணியே
நாதனேஞானவாரிதியே. (௫)

307. ஞானமேவடிவாய்த்தேடுவார்தேடு
நாட்டமோநாட்டத்துணிறைந்த
வானமேயெனக்குவந்துவந்தோங்கு
மார்க்கமேமருளர்தாமறியா
மோனமேமுதலேமுத்திநல்வித்தே
முடிவிலாவின்பமேசெய்யுந்
தானமேதவமேநின்னைநானினைந்தேன்
றமியனேன்றனைமறப்பதற்கே. (௬)

308 மறமலியுலகவாழ்க்கையேவேண்டும்
வந்துநின்னன்பர்தம்பணியா
மறமதுகிடைக்கினன்றியானந்த
வற்புதநிட்டையினிமித்தந்
துறவதுவேண்டுமெளனியாயெனக்குத்
தூயநல்லருடரினின்னம்
பிறவியும்வேண்டும்யானெனதிறக்கப்
பெற்றவர்பெற்றிடும்பேறே. (௭)

309. பெற்றவர்பெற்றபெருந்தவக்குன்றே
பெருகியகருணைவாரிதியே
நற்றவத்துணையேயானந்தக்கடலே
ஞாதுருஞானஞேயங்க
ளற்றவர்க்கறுதநட்புடைக்கலப்பே
யனேகமாய்நின்னடிக்கன்பு

கற்றதுங்கேள்விகேட்டதுநின்னைக்
கண்டிடும்பொருட்டன்றோகாணே.

310. அன்றுநால்வருக்குமொளிநெறிகாட்டு
மன்புடைச்சோதியேசெம்பொன்
மன்றுண்முக்கண்ணுங்காளகண்டமுமாய்
வயங்கியவானமேயென்னுட்
டுன்றுகூரிருளைத்துரந்திடுமதியே
துன்பமுமின்பமுமாகி
நின்றவாதனையைக்கடந்தவர்நினைவே
நேசமேநின்பரம்பரனே. (௯)

311. யானெனல்காணேன்பூரணநிறைவில்
யாதினுமிருந்தபேரொளிநீ
தானெனநிற்குஞ்சமத்துறவென்னைத்
தன்னவனுக்கவுந்தகுங்காண்
வானெனவயங்கியொன்றிரண்டென்னு
மார்க்கமாநெறிதந்துமாறாத்
தேனெனருசித்துளன்பரைக்கலந்த
செல்வமேசிற்பரசிவமே. (௧௦)

---

## தன்னையொருவர்.

### அறுசீர்விருத்தம்.

312. தன்னையொருவர்க்கறிவரிதாய்த்
தானேதானாயெங்குநிறைந்
துன்னற்கரியபரவெளியா
யுலவாவமுதாயொளிவிளக்கா
யென்னுட்கலந்தாயானறியா
திருந்தாயிறைவாவினியேனு

நின்னைப்பெறுமாறெனக்கருளா
னிலையு... யா. (க)

313. நினையுநினைவுக்கெட்டாத
நெறிபெற்றுணர்ந்தநெறியுநின
வினையைக்கரைக்கும்பரமவின்ப
வெள்ளப்பெருக்கேநினதருளால்
மனைவிபுதல்வரன்னைபிதா
மாடுவீடென் றிடுமயக்கந்
தனையுமறந்திங்குனைமறவாத்
தன்மைவருமோதமியேற்கே (உ)

314. வரும்போமென்னுமிருநிலைமை
மன்னுதொருதன்மைத்தாகிக்
கரும்போதேனேமுக்கனியோ
வெள்ளவென்னுட்கலந்துநலந்
ம்பேரின்பப்பொருளேநின்
றன்னைநினைந்துநெக்குருகே
...போகல்லோமரமோவென்
னிதயம்யாதென்றறியேனே (ங)

315. அறியுந்தரமோநானுன்னை
யறிவுக்கறிவாய்நிற்கையினாற்
பிரியுந்தரமோநீயென்னைப்
பெம்மானேபேரின்பமதாய்ச்
செறியும்பொருணீநின்னையன்றிச்
செறியாப்பொருணான்பெறும்பேற்றை
நெறிநின்றொழுகவிசாரித்தா
னினக்கோவில்லையெனக்காமே. (ச)

316. எனதென்பதும்பொய்யானெனல்பொய்
யெல்லாமிறந்தவிடங்காட்டி

னைதென்பதும்பொய்யெனல்பெ
நிற்குநிலைக்கேநேசித்தேன்
மனதென்பதுமோவென்வசமாய்
வாராதையநின்னருளோ
தனதென்பதுக்குமிடங்காணேன்
றமியேனெவ்வாறுய்வேனே. (௬)

317. உய்யும்படிக்குன் றிருக்கருணை
யொன்றைக்கொடுத்தாலுடையாய்பாழ்ம்
பொய்யுமவாவுமழுக்காறும்
புடைபட்டோடுநன்னெறியா
மெய்யுமறிவுபெறும்பேறும்
விளங்குமெனக்குன்னடியார்பாற்
செய்யும்பணியுங்கைகூடுஞ்
சிந்தைத்துயருந்தீர்ந்திடுமே. (௬)

318. சிந்தைத்துயரென்றொருபாவிசினந்து
சினந்துபோர்முயங்க
நிந்தைக்கிடமாய்ச்சகவாழ்வை
நிலையென்றுணர்ந்தேநிற்கின்றே
னெந்தப்படியுன்னருள்வாய்க்கு
மெனக்கெப்படிநீயருள்செய்வாய்
பந்தத்துயரற்றவர்க்கெளிய
பரமானந்தப்பழம்பொருளே. (எ)

319. பொருளைப்பூவைப்பூவையரைப்
பொருளென்றெண்ணுமொருபாவி
யிருளைத்துரந்திட்டொளிநெறியை
யென்னுட்பதிப்பதென்றுகொலோ
தெருளத்தெருளவன்பர்நெஞ்சந்
தித்தித்துருகத்தெவிட்டாத

வருளைப்பொழியுங்குணமுகிலே
யறிவானந்தத்தாரமுதே. (அ)

320. ஆராவமிர்தம்விரும்பினர்க
ளறியவிடத்தையமிர்தாக்கும்
பேரானந்தசித்தனெனும்
பெரியோயாவிக்குரியோய்கேள்
காரார்கிரகவலையினிடைக்
கட்டுண்டிருந்தகளைகளெல்லா
மூராலொருநாட்கையுணவேற
றுண்டாலெனக்கிங்கொழிந்திடுமே. (௯)

321. எனக்கென்றிருந்தவுடலபொருளும்
யானுமினவென்றீந்தவண்ண
மனைத்துமிருந்துமிலதாக
வருளாய்நில்லாதழிவழக்காய்
மனத்துட்புகுந்துமயங்கவுமென்
மதிக்குட்களங்கம்வந்ததென்னோ
தனக்கொன்றுவமையறநிறைந்த
தனியேதன்னந்தனிமுதலே. (௧௦)

## ஆசையெனும்.



அறுசீர்விருத்தம்.

322. ஆசையெனும்பெருங்காற்றூடிலவம்பஞ்
செனவுமனதலையுங்கால
மோசம்வருமிதனாலேகற்றதுங்கேட்ட
துந்தூர்ந்துமுத்திக்கான
நேசமுநல்வாசமும்போய்ப்புலனாயிற்
கொடுமைபற்றிநிற்பரந்தோ

தேசுபழுத்தருள்பழுத்தபராபரமே
நிராசையின்றேற்றெய்வமுண்டோ. (க)

323. இரப்பானங்கொருவனவன்வேண்டுவகேட்
டருள்செயெனவேசற்றேதான்
புரப்பான்றனருணாடியிருப்பதுபோ
லெங்குநிறைபொருளேகேளாய்
மரப்பான்மைநெஞ்சினன்யான்
வேண்டுவகேட்டிரங்கெனவேமௌனத்தோடந்
தரப்பான்மையருணிறைவிலிருப்பதுவோ
பராபரமேசகசநிட்டை. (உ)

கலிவிருத்தம்.

324. சாட்டையிற்பம்பரசாலம்போலெலா
மாட்டுவானிறையெனவறிந்துநெஞ்சமே
தேட்டமொன்றறவருட்செயலினிற்றியேல்
வீட்டறந்துறவறமிரண்டுமேன்மையே. (ங)

அறுசீர்விருத்தம்.

325. தன்னெஞ்சநினைப்பொழியாதறிவிலிநான்
ஞானமெனுந்தன்மைபேச
வுன்னெஞ்சமகிழ்ந்தொருசொல்லுரைத்தனையே
யதனையுன்னியுருகேனையா
வன்னெஞ்சோவிரங்காதமரநெஞ்சோ
விருப்புநெஞ்சோவைரமான
கன்னெஞ்சோவலதுமண்ணாங்கட்டிநெஞ்சோ
வெனதுநெஞ்சங்கருதிற்றனே. (ச)

கலிவிருத்தம்.

326. வாழிசோபனம்வாழிநல்லன்பர்கள்
சூழவந்தருடோற்றமுஞ்சோபனம்

மாழிபோலருளையன்மௌனத்தா
லேழையேன்பெற்றவின்பமுஞ்சோபனம். (௫)

கலிநிலைத்துறை.

327. கொடுக்கின்றோர்கள்பாற்குறைவையாதியானெனுங்குத
விடுக்கின்றோர்கள்பாற்பிரிகிலாதுள்ளன்புவிடாதே [ர்க்கம்
யடுக்கின்றோர்களுக்கிரங்கிடுந்தண்டமிழலங்க
ரொடுக்கின்றோர்களைச்சோதியாததுபரஞ்சோதி. (௬)

எண்சீர்விருத்தம்.

328. உலகமாயையிலேயெளியேன்றனை
யுழலவிட்டனையேயுடையாயரு
ளிலகுபேரின்பவீட்டினிலென்னையு
மிருத்திவைப்பதெக்காலஞ்சொலாயெழிற்
றிலகவாணுதற்பைந்தொடிகண்ணினை
தேக்கநாடகஞ்செய்தடியார்க்கெலா
மலகிலாவினைதீர்க்கத்துசங்கட்டு
மப்பனேயருளானந்தசோதியே. (எ)

அறுசீர்விருத்தம்.

329. மன்னிலைச்சுட்டொழிதியெனப்பலகாலு
நெஞ்சேநான்மொழிந்தேனேநின்
றன்னிலையைக்காட்டாதேயென்னையொன்றாய்ச்
சூட்டாதேசரணன்போந்த
வந்நிலையேநிலையந்தநிலையிலே
சித்திமுத்தியனைத்துந்தோன்று
நன்னிலையீதன்றியிலைசுகமென்றே
சுகர்முதலோர்நாடினாரே. (அ)

330. அத்துவிதம்பெறும்பேறென்றறியாமவி
யானெனும்பேயகந்தையோடு

மத்தமதியினர்போலமனங்கிடப்ப

யகண்டிதமாய்ச்சொரூபானந்தச்
சத்திகணீங்காதவணந்தன்மயமா
யருள்பழுத்துத்தழைத்தவொன்றே.          (கூ)

331. தந்தைதாயுநீயென்னுயிர்த்துணையுநீசஞ்சலமதுதீர்க்க
வந்ததேசிகவடிவுநீயுனையலான்மற்றொருதுணைகாணே
னந்தமாதியுமளப்பருஞ்சோதியேயாதியேயடியார்தஞ்
சிந்தைமேவியதாயுமானவனெனுஞ்சிரகிரிப்பெருமானே.   ()

332. காதிலோலையைவரைந்துமேற்குமிழையுங்
கறுவிவேள்கருநீலப்
போதுபோன்றிடுங்கண்ணியர்மயக்கிலெப்
போதுமேதளராமன்
மாதுகாதலிபங்கனையபங்கனை
மாடமாளிகைசூழுஞ்
சேதுமேவியராமநாயகன்றனைச்
சிந்தைசெய்மடநெஞ்சே.          (கக)

எண்சீர்விருத்தம்.

333. அண்டமுமாய்ப்பிண்டமுமாயளவிலாத
வாருயிருக்கோருயிராயமர்ந்தாயாறற்
கண்டவரார்கேட்டவராருன்றனுன்னைக்
காண்பதல்லாலென்னறிவாற்காணப்போமோ
வண்டுளபமணிமார்பன்புதல்வனோடு
மனைவியொடுங்குடியிருந்துவணங்கிப்போற்றும்
புண்டரிகபுரத்தினிறைதாந்தமௌன
போதாந்தநடம்புரியும்புனிதவாழ்வே.          (கஉ)

அறுசீர்விருத்தம்.

334. பொறியிற்செறியைம்புலக்கனியைப்
புந்திக்கவராற்புகுந்திழுத்து
மறுகிச்சுழலுமனக்குரங்கு
மாளவாளாவிருப்பபேனோ
வறிவுக்கறிவாய்ப்பூரணமா
யகண்டானந்தமயமாகிப்
பிறிவற்றிருக்கும்பெருங்கருணைப்
பெம்மானேயெம்பெருமானே. (௧௩)

335. உரையுணர்விறந்துதம்மையுணர்பவருணர்வினூடே
கரையிலாவின்பவெள்ளங்காட்டிடுமுகிலேமாறாப்
பரையெனுங்கிரணஞ்சூழ்ந்தபானுவேநின்னைப்பற்றித்
திரையிலாநீர்போற்சித்தந்தெளிவனோசிறியனேனே. ()

336 கேவலசகலமின்றிக்கிழொடுமேலாயெங்கு
மேவியவருளின்கண்ணாய்மேவிடமேலாயின்பந்
தாவிடவின்பாதீதத்தனியிடையிருத்திவைத்த
தேவெனுமௌனிசெம்பொற்சேவடிசிந்தைசெய்வாம்.()

337. நேற்றுளாரின்றுமாளாநின்றனரதனைக்கண்டும்
போற்றிலேனின்னையந்தோபோக்கினேன்வீணேகால
மாற்றிலேன்கண்டானந்தவண்ணலேயளவின்மாயைச்
சேற்றிலேயின்னம்வீழ்ந்துதிளைக்கவோசிறியனேனே.()

கலித்துறை.

338. போதமென்பதேவிளக்கொல்வுமவித்தைபொய்யிருளாந்
தீதிலாவிளக்கெடுத்திருட்டவுஞ்சிக்கா
தாதலாலறிவாய்நின்றவிடத்தறியாமை
யேதுமில்லையென்றெம்பிரான்கருதியேயியம்பும். (௧௭)

339. சுருதியேசிவாகமங்களேயுங்களாற்சொல்லு
மொருதனிப்பொருளளவையீதென்னவாயுண்டோ
பொருதிரைக்கடனுண்மணலெண்ணினும்புகலக்
கருதவெட்டிடாநிறைபொருளளவையார்காண்பார். ()

340. மின்னைப்போன்றனவகிலமென்றறிந்துமெய்ப்பொருளா
முன்னைப்போன்றநற்பரம்பொருளில்லையென்றோர்ந்து
பொன்னைப்போன்றநின்போதங்கொண்டுன்பணிபொருந்தா
வென்னைப்போன்றுளவேழையரையவிங்கெவரே.(கக)

341. தாயுந்தந்தையுமெனக்குறவாவதுஞ்சாற்றி
ஞயுநீயுநின்னருளுநின்னடியருமன்றே
பேயனேன்றிருவடியிணைத்தாமரைபிடித்தே
ஞயனேயெனையாளுடைமுக்கணுயகனே (உ0)

அறுசீர்விருத்தம்.

342. காந்தமதையெதிற்காணிற்கருந்தாது
செல்லுமந்தக்காந்தத்தொன்று
தேய்ந்தவிடமெங்கேதானங்கேதான்
சலிப்பறவுமிருக்குமாபோற்
சாந்தபதப்பரம்பொருளேபற்றுபொரு
ளிருக்குமத்தாற்சலிக்குஞ்சித்தம்
வாய்ந்தபொருளில்லையெனிற்பேசாமை
நின்றநிலைவாய்க்குமன்றே. (உக)

கலிநிலைத்துறை.

343. பொற்புறுங்கருத்தேயகமாயதிற்பொருந்தக்
கற்பின்மங்கையரெனவிழிகதவுபோற்கவினச்
சொற்பனத்திலுஞ்சோர்வின்றியிருந்தநான்சோர்ந்து
நிற்பதற்கிந்தவினைவந்தவாறென்கொனிமலா. (உஉ)

344. வந்தவாறிந்தவினைவழியி துவெனமதிக்கத்
தந்தவாறுண்டோவுள்ளுணர்வில்லையன்றித்தமியே
னெந்தவாறுகண்டிரங்கவுமிலைகற்றநூலா
லெந்தவாறினித்தற்பராவுய்குவேனேழை. (உ௩)

எண்சீர்விருத்தம்.

345. சொல்லாலும்பொருளாலுமளவையாலுந்
தொடரவொண்ணாவருணெறியைத்தொடர்ந்துநாடி
நல்லார்களவையகத்தேயிருக்கவைத்தாய்
நன்னர்நெஞ்சந்தன்னலமுநாணுகுவேனோ
வில்லாளியாயுலகோடுயிரையீன்றிட்
டெண்ணரியயோகினுக்குமிவனேயென்னக்
கல்லாலின்கீழிருந்தசெக்கர்மே
கற்பகமேபராபரமேகைலைவாழ்வே. (உ௪)

346. சாக்கிரமாநுதலினிலிந்திரியம்பத்துஞ்
சத்தாதிவசனாதிவாயுபத்து
நீக்கமிலந்தக்கரணம்புருடனோடு
நின்றதுமுப்பானைந்துநிலவுங்கண்டத்
தாக்கியசொற்பனமதனில்வாயுபத்து
மடுத்தனசத்தாதிவசனாதியாக
நோக்குகரணம்புருடனுடனேகூட
நுவல்வரிருபத்தைந்தாநுண்ணியோரே. (உ௫)

347. சுழுத்தியிதயந்தனிற்பிராணஞ்சித்தஞ்
சொல்லரியபுருடனுடன்மூன்றதாகும்
வழுத்தியநாபியிற்றுரியம்பிராணனோடு
மன்னுபுருடனுங்கூடவயங்காநிற்கு
மழுத்திடுமூலந்தன்னிற்றுரியாதீத
மதனிடையேபுருடனொன்றியமருஞானம்

பழுத்திடும்பக்குவரீறிவரவத்தையைந்திற
பாங்குபெறக்கருவிநிற்கும்பரிசுதானே. (உசு)

கலித்துறை.

348. இடத்தைக்காத்திட்டசுவானம்போற்புன்புலாலிறைச்சிச்
சடத்தைக்காத்திட்டநாயினேனுன்னன்பர்தயங்கு
மடத்தைக்காத்திட்டசேடத்தால்விசேடமாய்வாழ
விடத்தைக்காத்திட்டகண்டத்தோய்நின்னருள்வேண்டும். ()

349. வாதனைப்பழக்கத்தினுன்மனமந்தமனத்தா
லோதவந்திடுமுரையுரைப்படிதொழிலுளவா
மேதமம்மனமாயையென்றிடிற்கண்டவெல்லா
மாதரஞ்செயாப்பொய்யதற்கையமுண்டாமோ. (உஅ)

350. ஐயவாதனைப்பழக்கமேமனநினைவதுதான்
வையமிதினிற்பரம்பரையாதினுமருவு
மெய்யினின்றொளிர்பெரியவர்சார்வுற்றுவிளங்கிப்
பொய்யதென்பதையொருவிமெய்யுணருதல்போதம். ()

351. குலமிலான்குணங்குறியிலான்குறைவிலான்கொடிதாம்
புலமிலான்றனக்கென்னவோர்பற்றிலான்பொருந்து
மிலமிலான்மைந்தர்மனைவியில்லானெவனவன்சஞ்
சலமிலான்முத்திதரும்பரமசிவனெனத்தகுமே. (௩0)

352. கடத்தைமண்ணெனவுடைந்தபோதோவிந்தக்கருமச்
சடத்தைப்பொய்யெனவிறந்தபோதோசொலத்தருமம்
விடத்தைநல்லமிர்தாவுணடுபொற்பொதுவெளிக்கே
நடத்தைக்காட்டியெவ்வுயிரையுநடப்பிக்குநலத்தோய்.

அறுசீர்விருத்தம்.

353. நானெனவுநீயெனவுமிருதன்மை
நாடாமனடுவேசும்மா

தானமருங்கிலேயிதுவேசத்தியஞ்சத்
தியமெனநீதமியனேற்கு
மோனகுருவாகியுங்கைகாட்டினையே
திரும்பவுநான்முளைத்துத்தோன்றி
மானதமார்க்கம்புரிந்திங்கலைந்தேனே
பரந்தேனேவஞ்சனேனே. (ருஉ)

354. தன்மயஞ்சுபாவஞ்சுத்தந்தண்ணருள்வடிவஞ்சாந்த
மின்மயமானவண்டவெளியுருவானமூர்த்தி
யென்மயமெனக்குக்காட்டாதெனையபகரிக்கவந்த
சின்மயமகண்டாகாரந்தகூடிநுறைதிக்கமூர்த்தம். (ருங)

கலித்துறை.

355. சிற்றறும்பனசிற்றறிவாளனேதெளிந்தாலம்
மற்றறும்பெனமலரெனப்பேரறிவாகிக்
கற்றறும்பியகேள்வியான்மதித்திடக்கதிச்சீர்
முற்றரும்பியமௌனியாய்ப்பரத்திடைமுளைப்பான்.

356. மயக்குசிந்தனைதெளிவெனவிருநெறிவகுப்பா
னயக்குமொன்றன்பாலொன்றிலையென்னலவழக்கே
யியக்கமுற்றிடுமயக்கத்திற்றெளிவுறவினிதாம்
பயக்கவல்லதோர்தெளிவுடையவர்க்கெய்தல்பண்போ.

அறுசீர்விருத்தம்.

357. அருள்வடிவேமூர்த்த
மவைகள்சோபானமென்றே
சுருதிசொல்லியவாற்றாலே
தொழுந்தெய்வமெல்லாமொன்றே
மருளெனக்கில்லைமுன்பின்
வருநெறிக்கிவ்வழக்குத்

தெருளின்மூன்னிலையாமுன்னைச்
சேர்ந்தியான்றெளிகின்றேனே. 36

358. எத்தனைபிறப்போவெத்தனையிறப்போ
வெளியனேற்கிதுவரையமைத்த
தத்தனையெல்லாமறிந்தநீயறிவை
யறிவிலியறிகிலேனந்தோ
சித்தமும்வாக்குந்தேகமுமினமேவ
செம்மமுமினியெனலாற்று
வைத்திடுங்கென்னைநின்னடிக்குடியா
மறைமுடியிருந்தவான்பொருளே. 37

எழுசீர்விருத்தம்.

359. வான்பொருளாகியெங்குநீயிருப்ப
வந்தெனைக்கொடுத்துநீயாக
தேன்பொருள்போலக்கிடக்கின்றேன்முன்னை
யிருவினைவாதனையன்று
தீன்பொருளானவமிர்தமேநின்னைச்

நான்பொருளானேனல்லநல்லரசே
நானிறந்திருப்பதுநாட்டம். 38

360. காட்டமூன்றுடையசெந்திறமணியே
நடுவுறுநாயகவிளக்கே
கோட்டமில்குணத்தோர்க்கெளியவிர்க்குணமே
கோதிலாவமிர்தமேநின்னை
வாட்டமினெஞ்சங்கிண்ணமாச்சேர்
வாய்மடுத்தருந்தினளுங்கே
பாட்டளிநறவுண்டயர்ந்ததுபோற்
பற்றயர்ந்திருப்பதென்நாளோ. 39

௩௬௧ என்னுடையுயிரேயென்னுளத்தறிவே
யென்னுடையன்பெனுநெறியாய்
கன்னன்முக்கனிதேன்கண்டமிர்தென்னக்
கலந்தெனைமேவிடக்கருணை
மன்னியவுறவேயுனைநான்பிரியா
வண்ணமென்மனமெனுங்கருவி
தன்னதுவழியற்றென்னுழைக்கிடப்பத்
தண்ணருள்வரமதுவேண்டும். 40

---

## எனக்கெனச்செயல்.



கலிநிலைத்துறை.

362 எனக்கெனச்செயல்வேறிலையாவுமிங்கொருநின்
றனக்கெனத்தகுமுடல்பொருளாவியுந்தந்தேன்
மனத்தகத்துளவழுக்கெலாமாற்றியெம்பிரானீ
நினைத்ததெப்படியப்படியருளுதனீதம். (௧)

363 உளவறிந்தெலாநின்செயலாமெனவுணர்ந்தோர்க்
களவிலானந்தமளித்தனையறிவிலாப்புன்மைக்
களவுநாயினேற்கிவ்வணமமைத்தனைகருத்துத்
தளருந்தன்மையிங்காரொடும்புகலுவேன்றக்கோய். (2)

364 என்னைத்தானின்னவண்ணமென்றறிகிலாவேழை
தன்னைத்தானறிந்திடவருள்புரிதியேற்றக்கோய்
பின்னைத்தானின்னருள்பெற்றமாதவப்பெரியோர்
நின்னைத்தானிகராரெனவாழ்த்துவர்நெறியால். (3)

365 ஏதுமின்றித்தன்னடியிணைக்கன்புதானீட்டுங்
காதலன்பர்க்குத்தந்நிலையீதெனக்காட்டும்
போதநித்தியபுண்ணியவெண்ணரும்புவனா
நாதத்தற்பராசெவ்வியாயுயர்ந்தவன்னிலாய். (4)

366 வேதமெத்தனையத்தனைசிரத்திலும்விளங்கும்
பாதநித்தியபரம்பரநிரந்தரபரம
நாததற்பரசிற்பரவடிவமாய்நடிக்கு
நீதநிர்க்குணநின்னையன்றியொன்றுநானினைவேன். (5)

367 நெறிகடாம்பலபலவுமாயந்தந்தநெறிக்காஞ்
செறியுந்தெய்வமும்பலபலவாகவுஞ்செறிந்தா
லறியுந்தன்மையிங்காருனையறிவினாலறிந்தோர்
பிறியுந்தன்மையில்லாவகைகலக்கின்றபெரியோய். (6)

368 பெரியவண்டங்களெத்தனையமைத்ததிற்பிறங்கு
முரியபல்லுயிரெத்தனையமைத்ததற்குறுதி
வருவதெத்தனையமைத்தனையமைத்தருள்வளர்க்கு
மரியதத்துவமெனக்கிந்தவண்ணமேனமைந்தாய். (7)

369 கணமதேனுநின்காரணந்தன்னையேகருத்தி
லுணருமாதவர்க்கானந்தமுதவிவினையொன்றுங்
குணமிலாதபொய்வஞ்சனுக்கெந்தைநிர்க்குணமா
மணமுலாமலர்ப்பதந்தரின்யாருனைமறப்பார். (8)

370 கன்னன்முக்கனிகண்டுதேன்சருக்கரைகலந்த
தென்னமுத்தியிற்கலந்தவர்க்கின்பமாயிருக்கு
நன்னலத்தநின்னற்பதந்துணையெனநம்பச்
சொன்னவர்க்கெலாங்கைம்மாறில்லையென்சொல்வேன்.()

371 தந்தைதாய்தமர்மகவெனுமவையெலாஞ்சகத்திற்
பந்தமாமென்றேயருமறைவாயினுற்பகர்ந்த
வெந்தைநீயெனையின்னமவ்வல்லலினிருத்திற்
சிந்தைதான்றெளிந்தெவ்வணமுய்வணஞ்செப்பாய். (10)

372 ஐயன்றன்னருள்வடிவின்பொறுமையாற்றுலங்கு
மெய்யனென்றனைப்பயனேயடைந்தனன்மெத்த

கொய்யறுண்ணியவறிவிலனொன்றைநாருக்கும்
பொய்யனென்றெனைப்புறம்விடினென்செய்வேன்புகலாய்.()

373 ஒன்றதாய்ப்பலவாயுயிர்த்திரட்கெலாமுறுதி
யென்றதாயென்றுமுள்ளதாயெவற்றினுமிசைய
நின்றதாய்நிலைநின்றிடுமறிஞரெவனெஞ்ச
மன்றதாயின்பவுருக்கொடுகடித்திடின்வாழ்வேன். (12)

374 தனியிருந்தருட்சகசமேபொருந்திடத்தமியேற்
கினியிரங்குதல்கடனிதுசமயமென்னிதயக்
கனிவுமப்படியாயினதாதலாற்கருணைப்
புனிதநீயறியாதவொன்றுள்ளதோபுகலாய். (13)

375 திருந்துசீரடித்தாமரைக்கன்புதான்செய்யப்
பொருந்துநாணல்லபுண்ணியஞ்செய்யுநாள்பொருந்தா
திருந்தநாள்வெகுதீவினையிழைத்தநாளொன்று
லருந்தவாவுனைப்பொருந்துநாளெந்தநாளடிமை, (14)

376 பின்னுமுன்னுமாய்நடுவுமாயாவினும்பெரிய
தென்னுந்தன்மையாயெவ்வுயிர்த்திரளையுமியக்கி
மன்னுந்தண்ணருள்வடிவமேயுனக்கன்புவைத்துந்
துன்னுமின்னலேன்யானெனுமகந்தையேன்சொல்லாய். ()

377 மின்னையன்னபொய்வாழ்க்கையேநிலையெனமெய்யா
முன்னைநான்மறந்தெவ்வணமுய்வணமுரையாய்
முன்னைவல்வினைவேரறமுடித்தென்றுமுடியாத்
தன்னைத்தன்னடியார்க்கருள்புரிந்திடுந்தக்கோய் (16)

378 எம்பராபரவெம்முயிர்த்துணைவவென்றிறைஞ்சு
மும்பரிம்பர்க்குமுளக்கணைநடிக்கின்றவுன்ற
னம்பொன்மாமலர்ப்பதத்தையேதுணையெனவடிமை
நம்பினேனினிப்புரப்பதெக்காலமோநவிலாய். (17)

379 பாடியாடிநின்றிரங்கிநின்பதமலர்முடிமேற்
சூடிவாழ்ந்தனரமலநின்னடியர்யான்றொழும்ப
னாடியேயிந்தவுலகத்தைமெய்யெனநம்பித்
தேடினேன்வெறுந்தீமையேயென்னினிச்செய்வேன். (18)

380 களவுவஞ்சனைகாமமென்றிவையெலாங்காட்டு
மளவுமாயையிங்காரெனக்கமைத்தனரையா
வுளவிலேயெனக்குள்ளவாறுணர்த்திநின்னடிமை
வளருமாமதிபோன்மதிதளர்வின்றிவாழ்வேன். (19)

381 வானநாயகவானவர்நாயகவளங்கூர்
ஞானநாயகநான்மறைநாயகநலஞ்சேர்
மோனநாயகநின்னடிக்கன்பின்றிமுற்றுந்
தீனனாயகம்வாடவோவென்செய்வேன்செப்பாய். (20)

382 ஏதமற்றவர்க்கின்பமேபொழிகின்றவிறையே
பாதகக்கருங்கன்மனங்கோயிலாப்பரிந்து
சூதகத்தனாயாதினும்மிச்சைமேற்றோன்றும்
வாதனைக்கிடமாயினேனெவ்வணம்வாழ்வேன். (2i)

383 தெளிவோடுணைகையோவறிகிலானறிவிலான்சிறிது
மளியிலானிவன்றிருவருட்கயலெனவறிந்தோ
வெளியனாக்கினையென்செய்வேனென்செய்வேனெல்லா
வெளியுமாய்நிறைவெளியுமாயாவுமாமுரவோய். (22)

384 கண்ணினுண்மணியென்னவேதொழுமன்பர்கருத்து
ணண்ணுகின்றநின்னருமளனகமகநதநாணனுந
டண்ணுவிண்ணுமற்றுள்ளனபூதமுமாருப்
பெண்ணுமாணுமாயல்லவாய்நிற்கின்றபெரியோய். (23)

385 சகமெலாந்தனிபுரந்தனைதகவுடைத்தக்கோ
ரகமெலாநிறைந்தானந்தமாயினையளவின்

மகமெலாம்புரிந்தோரைவாழ்வித்தனையாரு
விகமெலாமெனைப்பிறந்திடச்செய்ததேனெந்தாய். (24)

386 ஏய்ந்தநல்லருள்பெற்றவர்க்கேவலாயெளியேன்
வாய்ந்தபேரன்புவளர்க்கவுங்கருணைநீவளர்ப்பா
யாய்ந்தமாமறையெத்தனையத்தனையறிவாற்
றேய்ந்தபேர்கட்குத்தோன்றிலாத்தோன்றலானாயோய்

387 தக்கநின்னருட்கேள்வியோசிறிதின்றித்தமியேன்
மிக்கதெய்வமேநின்னின்பவெள்ளத்தில்வீழ
ஞெக்கருய்த்தந்தைமகவெனும்பாசக்கட்டுடனே
துக்கவெள்ளத்திலாழ்கின்றேனென்செய்வான்றுணிந்தேன்.

388 பலம்புரிந்திடுப்பாவியேற்கருணிலைபதியந்
தவஞ்செயும்படித்தயவுசெய்தருள்வதேதரும
மலம்புரிகதிடார்க்கானந்தவமிர்தத்தையளிக்க
நலங்கொடுத்துவத்திரையெறிகடலெனுநலத்தோய் ()

389 உற்றுணர்ந்தெலாநீயலதில்லையென்றுனையே
பற்றுகின்றனரெந்தைநின்னடியர்யான்பாவி
முற்றுமாயமாஞ்சகத்தையேமெய்யெனமுதறு
னற்றிருந்திடத்தொழில்செய்வான்றனைநிகராணேன். ()

---

## மண்டலத்தின்.



அறுசீர்விருத்தம்,

390 மண்டலத்தின்மிசையொருவன்செய்தவித்தை
யகோவெனவும்வராநி
ரண்டமவையடுக்கடுக்காயந்தரத்தி
னிறுத்துமவதானம்போல

வெண்டருநல்லகிலாண்டகோடியைத்தன்
னருள்வெளியிலிலகவைத்துக்
கொண்டுநின்றவற்புதத்தைவெவராலு
நிச்சயிக்கக்கூடாவொன்றை. (1)

391 ஒன்றிரண்டாய்விவகாரிக்கும்விவகாரங்
கடந்தேதமாமெயாகபூமி
நின்றுதெளிந்தவர்பேசாமௌனநியா
யத்தைநிறைநிறைவைததனை
யன்றியொருபொருளிலதாவெப்பொருட்குந்
தான்முதலாயசலமாகி
யென்றுமுள்ளவின்பத்தைததண்ணொன்ற
சாந்தபதவியற்கைதன்னை (2)

392 பதமூன்றுங்கடந்தவர்க்குமேலான
ஞானபதப்பரிசுகாட்டிச்
சதமவிகிராலம்பசாக்ஷிபதா
யுபாயபத்தன்மையாகி
விதமியாவுங்கடந்தவித்தைதெனுமிருளைக்
கிண்டெழுந்துவிமலமாகி
மதமாறுங்காணுதவானந்த
சாகரத்தைமௌனவாழ்வை. (3)

393 வாழ்வனைத்துந்தந்தவின்பமாகடலை
நல்லுயிர்வுதமணியைப்பொன்னைத்
தாழ்வறுவென்னுளத்திருந்ததத்துவத்தை
யத்துவிதசாரந்தன்னைச்
சூழும்பெரும்பேரொளியையொளிப்ரந்தபர
வெளியையின்பச்சுகத்தைமாறு
மேலதுங்கலந்தின்றாய்காணாயா
வென்றமாயியற்கைதன்னை.

394. தன்னையறிந்தவர் தம்மைத்தானாகச்
செய்தருளுஞ்சமத்தைமேலாக
மின்னைநிகர்த்திடவழியாய்ச்சொரூபானந்
தச்சுடரைவேதமாதி
யென்னையறிவரிதென்னச்சமயகோ
டிகளிடையறிவையுறாத
பொன்னைவிரித்திடுமுலகத்தும்பரும்பரும்
பரம்பரவும்புனிதமெய்யை. (5)

395. பரவரியபரசிவமாயதுவெனலாய்
நாவெனலாய்ப்பாசசாலம்
விரவிநின்றவிசித்திரத்தைமையக்யபதத்
தினிதிருந்தவிவேகந்தன்னை
யிரவுபகலினைப்புமறப்பெனுந்தொந்த
மறியார்களிதயம்வேதச்
சிரமெனவாழ்பராபரத்தையானந்த
நீங்காதசிதாகாசத்தை. (6)

396. அத்துவிதவனுபவத்தையனந்தமறை
யின்னமின்னமறியேமென்னு
நித்தியத்தைநிராமயத்தைநிர்க்குணத்தைத்
தன்னருளாநினைவுக்குள்ளே
வைத்துவைத்துப்பார்ப்பவரைத்தானாக
வெந்நாளும்வளர்த்துக்காக்குஞ்
சித்தினைமாத்தூவெளியைத்தன்மயமா
மானந்தத்தெய்வந்தன்னை. (7)

397. தன்னிலேதானாகநினைந்துகனிந்
தமிழ்ந்துசுகசமாதியாகப்
பொன்னிலேபணிபோலுமாயைதரு
மனமேயுன்புரைகடிந்தா

யென்னினையான்பிழைப்பேனெனக்கினியா
　　ருன்போல்வாரில்லையில்லை
யுன்னிலோ திருவருளுக்கொப்பாவா
　　யென்னுயிர்க்கோருறவுமாவாய். (8)

398 உறவுடலையெடுத்தவரிற்பிரமாதி
　　யேனுமுனையொழிந்துதள்ளார்
கறவுமரிதரிதற்றோவிகபரமு
　　முன்னையன்றியாவதன்றோ
வறிதினுன்னையசத்தென்னலவழக்கன்று
　　சத்தெனவும்வாழ்த்துவேனென்
சிறுமைகெடப்பெருமையினின்சென்மதே
　　யத்தினினிச்செல்லல்வேண்டும். (9)

399 வேண்டியகாளென்றேம்பழகிபநீ
　　யெனைப்பிரிந்தவிசாரந்தாலே
மாண்டிகிடக்கினுமந்தவெல்லையையும்
　　பூரணமாவணக்கஞ்செய்வே
ஞண்டகுருமௌனிதன்னாவியானெனதற்
　　றவனருணுறுவேன்பூவிற்
காண்டகவெண்சித்திமுத்தியெனக்குண்டா
　　மூன்றுமெலன்கவலைதீர்வேன். (10)

400 தீராதவென்சனனவழக்கெல்லாந்
　　தீருமிந்தச்சனனத்தோடே
யாரேனுமறிவரியசீவன்முத்தி
　　யுண்டாகுமையவையோ
காரேனுங்கற்பகப்பூங்காவேனு
　　மு[illegible]க்குவமைகாட்டப்போமோ
பாராதியாகவெழுமண்டலத்தி
　　னின்மகிமைபகரலாமோ. (11)

# பாயப்புலி.

401 பாயப்புலிமுனமான்கன்றைக்காட்டும்படியயலே
மாயைப்பெரும்படைக்கேயிலக்காவெனைவைத்தனையோ
நீயெப்படிவருத்தாலுமன்றேநின்பெருங்கருணை
தாயொத்தடியர்க்கருள்சச்சிதானந்தத்தற்பரமே. (1)

402 தற்பரமாஞ்சிற்பரமாகிமன்றந்தனினடித்து
நிற்பரம்போருகன்மால்பணிநீதரென்னெஞ்சகமாங்
கற்பாந்தாங்குகரைந்திடவாறெத்தகாட்சிநல்கும்
பொற்பரமாவென்வினைக்கருந்தாதைப்பொடிசெய்ததே

403 செய்யுந்தவஞ்சற்றுமில்லாதனாலுன்றிருவடிக்கே
கொய்யும்புதுமலரிட்டுமெய்யன்பர்குழாத்துடனே
கையுஞ்சிரமிசைக்கூப்பிநின்றாடிக்கசிந்துருகி
யுய்யும்படிக்கருள்செய்வதென்றோபுலியூரத்தனே. (3)

404 அத்தனைச்சிற்றம்பலவனையென்னுயிராகிநின்ற
சுத்தனைச்சுத்தவெளியானவனைச்சுகவடிவா
நித்தனைநித்தநிராதாரமாகியநின்மலனை
யெத்தனைநாள்செல்லுமோமனமேகண்டிறைஞ்சுதற்கே

405 கண்டாளருத்திநிற்காலூன்றிப்பெய்யுங் கருணைமுகி,
லண்டார்புரத்துக்குமன்பர்வினைக்குமசனிதன்னைக்,கொ
ண்டாடினோர்முனங்கூத்தாடுமெந்தன்றன்கோலமெல்லாம்,
விண்டால்மமாவொன்றுங்காணாதுவெட்டவெறுவெளியே.()

406 வெளியானநீயென்மனவெளி யூடுவிராவினையா, லொளி
யாருங்கண்ணுமிரவியும்போனின்றுலாவுங்கா; னளி
யாருங்கொன்றைச் சடையாடவம்புலி யாடக்கங்கைத்,
துளியாடமன்றனடமாடுமுக்கட்சுடர்க்கொழுந்தே. ()

407 கொழுந்தாதுறுமலர்க்கோதையர்மோகக்குரைகடலி
லழுந்தாதவண்ணமின்பாதப்புணை தந்தருள்வதென்றோ,
வெழுந்தாதரவுசெ யெம்பெருமானென்றிறைஞ்சி விண்
ணோர், தொழுந்தாளையேவெண்பொடி பூத்தமேனிச்சு
கப்பொருளே. (7)

408 சுகமாகுஞானந்திருமேனியாநல்லதொண்டர்தங்க
ளகமேபொற்கோயிலெனமகிழ்ந்தேமன்றுளாடியகற்
பகமேயுன்பொன்னடிநீழல்கண்டாலன்றிப்பாவிக்கிந்தச்
செகமாயையானவருங்கோடைநீங்குந்திறமிலையே. (8)

409 நீங்காதுயிருக்குயிராகிநின்றநினையறிந்தே, தூங்காமற்
றூங்கினல்லாதேயெனக்குச்சுகமுமுண்டோ, வோங்கா
ரமாமைந்தெழுத்தாற்புவனத்தையுண்டுபண்ணிப், பாங்
காநடத்தும்பொருளேயகண்டபரசிவமே (9)

410 சிவமாதிநான்முகக்கோவந்தமாமறைசெப்புகின்ற
நவமாயிலங்கியவொன்றேபிரண்டற்றநன்மைபெறு
தவமேதருமைம்புலப்பொறிக்கேயென்னறிவுபொல்லாப்
பவமேவிளைக்கவென்றேவெளிமானெனப்பாய்ந்ததுவே.

411 ஆறொத்திலங்குசமயங்களாறுக்குமாழ்கடலாய்
வீறிப்பரந்தபரமானவானந்தவெள்ளமொன்று
தேறித்தெளிந்துநிலைபெற்றமாதவர்சித்தத்திலே
யூறிப்பரந்தண்டகோடியெல்லாநின்றுலாவியதே. (11)

412 நடக்கினுமோடினுநிற்கினும்வேறொருநாட்டமின்றிக்
கிடக்கினுஞ்செவ்விதிருக்கினுநல்லநுட்கேள்வியிலே
தொடக்குமென்னெஞ்சமனமற்றபூரணத் தொட்டிக்குள்ளே
முடக்குவன்யான்பரமானந்தநித்திரைமுடிபே. (12)

413. எண்ணாதெண்ணிய நெஞ்சேதுயமொழியென்னிரண்டு
கண்ணேயுறங்குறங்கென்னுமுக்கட்கருணைப்பிரான்

றண்ணார் கருணைமவுனத் திறனுமுத்திசாதிக்கலர
கண்ணுதலெதான்றில்லையெல்லாநலமுநமக்குளவே. (13)

414. நானென்றொருமுதலுண்டென்றநன்றலைநாணவெவ
னுட், டானென்றொருமுதல்பூரணமாகத்தலைப்பட்டொப்
பி, லானந்தந்தந்தென்னறிவையெல்லாமுண்டவசநல்கி,
மோனந்தனைவிளைந்தாலினியாதுமொழிகுவதே. (14)

415. தானந்தவஞ்சற்றுமில்லாதநானுண்மைதானறிந்து [த்
மோனப்பொருளெனக்கண்டிடச்சற்குருமோனனுமாய்
தீனன்றனக்கிங்கிரங்கினையேயினிச்சிந்தைக்கென்று
மானந்தந்தானல்லவோபரமேசச்சிதானந்தமே. (15)

416. எனக்கோர்சுதந்தரமில்லையப்பாவெனக்கெப்பில்லைப்
பாய், மனக்கோதகற்றும்பரம்பொருளேயென்னைவாழ்வி
த்திட, நினக்கேபாநின்னைநீங்காதபூரணநீள் கருணை, தன
க்கேபரமினிச்சும்மாவிருக்கத்தகுமென்றுமே. (16)

417. இடம்பெறுவீடுமின்னார்செய்சகமுமிருநிதியு
முடம்பைவிட்டாருயிர்போம்போதுகூடியுடன்வருமோ
மடம்பெறுமாமைமனமேயினியிங்குவாமவுனி
திடம்பெறவைத்தமவுனஞ்சதாயந்தெரிந்துகொள்ளே.

418. நாற்றச்சடலத்தையொன்பதுவாசனடைமனையைச்
சோற்றுப்பசையினைமும்மலபாடைத்தொடக்கறையை
யாற்றுப்பெருக்கன்னகன்மப்பெருக்கையடர்கிருமிச்
சேற்றைத்துணையென்றநாய்க்குமுண்டோகதிசேர்வதுவே. ()

419. பொய்யாருலகநிலையல்லகானற்புனலெனவே
மெய்யாவறிந்தென்னவென்னுவிதனைவிடப்படுமோ
கையான்மவுனந்தெரித்தேகல்லாநிழற்கண்ணிருந்த
வையாவப்பாவென்னரசேமுக்கண்ணுடையாரமுதே. ()

420 ஆராவமுதெனமோனம்வகிழ்ந்துக்கல்லாளிழற்கீழ்ப்
போதுநால்வருடன்வாழ்முக்கண்ணுடைப்பேராசே
சீராயுருகவுள்ளன்புதந்தேசுகநிட்டையைநீ
தாராவிடினென்பெருமூச்சுத்தானத்தனஞ்சயனே. ()

421 வாயுண்டுவாழ்த்தமவுனஞ்செய்போதுமவுனவருட்
டாயுண்டுசேயென்னவென்னைப்புரக்கச்சதானந்தமா
நீயுண்டுநின்னைச்சரண்புகநானுண்டென்னெஞ்சமையா
தீயுண்டிருந்தமெழுகலவோகதிசேர்வதற்கே. (21)

422 கல்லாலெறிந்துங்கைவில்லாலடித்துங்கனிமதுரச்
சொல்லாற்றுதித்துநற்பச்சிலைதூவியுந்தொண்டரின
மெல்லாம்பிழைத்தனவன்பற்றநானினியேதுசெய்வேன்
கொல்லாவிரதியர்நேர்நின்றமுக்கட்குருமணியே. (22)

423 முன்னிலைச்சுட்டொழிநெஞ்சே நின்போதமுளைக்கிலை
யோ, பின்னிலைச்சன்மம்பிறக்குங்கண்டாயிந்தப் பேய்த்
தனமேன், றன்னிலையேநில்லுதானே தனிச்சச்சிதானந்
தமா, நின்னிலைவாய்க்குமெண் சித்தியுங்காணு நமத
ல்லவே. (23)

424. சொல்லான்மவுனமவுனமென்றே சொல்லிச்சொல்லிக்
கொண்ட, தல்லான்மனமறப்பூரணநிட்டையிலாழ்ந்தது
ண்டோ, கல்லாதமூடனினியென்செய்வேன்சகற்காரண
மாம், வல்லாளனைமவுனைசதானந்தமாகடலே. (24)

425 ஆரணமாகமமெல்லாமுரைத்தவருண்மவுன
காரணமூலங்கல்லாலடிக்கேயுண்டுகாணப்பெற்றுற்
பாரணங்கோடுசுழனெஞ்சமாகியபாதாச
மாரணமாய்விடுமெண்சித்திமுத்தியும்வாய்த்திடுமே. ()

426 சித்தமவுனிவடபான்மவுனிநந்திபகுண்ட
சுத்தமவுனியெனுமூவருக்குந்தொழும்புசெய்து

சத்தமவுனமுதன்மூன் றுமௌனமூன்றா ன்படைத்தே
னித்தமவுனமல்லாலறியேன்மற்றைநிட்டைகளே. (26)

427 கண்டேனினதருளவ்வருளாய்நின் றுகாண்பதெல்லா
முண்டேயது வுநினதாக்கினேனுவட்டாதவின்ப
மொண்டேயருந்தியினைப்பாறினேனல்லமுத்திபெற்றுக்
கொண்டேன்பராபரமேயெனக்கேதுங்குறைவில்லையே.

428 மேற்கொண்டவாயுவுங்கீழ்ப்படமூலத்துவெந்தழலைச்

றுற்கண்டதன்றுமவுனோபதேசியளிக்கையினிப்
பாற்கண்டுகொண்டனன்மேலையமிர்தம்பருகுவனே. ()

429 சொல்லாற்றொடர்பொருளாற் றொடராப் பரஞ்சோதி
நின்னை, வல்லாளர்கண்டவழிகண்டிலேனுகமார்க்கத்
திலுஞ், செல்லாதென்சிந்தைநடுவேகிடந்து திகைத்து
விம்மி,யல்லான தும்பகலான தும் வாய்விட்டாற்றுவனே.

430 அறியாதவென்னையறிவாயுநீயென்றகம்புறமும்
பிறியாதறிவித்தபேரறிவாஞ்சுத்தபேரொளியோ
குறியாதவானந்தக்கோவோவமுதருள்குண்டலியோ
சிறியேன்படுந்துயர்கண்டுகெல்லாளிழற்சேர்ந்ததுவே. ()

431 எல்லாமுதவுமுனையொன்றிற்பாவனையேனுஞ்செய்து
புல்லாயினுமொருபச்சிலையாயினும்போட்டிறைஞ்சி
நில்லேனல்யோகநெறியுஞ்செயேனருணீதியொன்றுங்
கல்லேனெவ்வாறுபராமேபாகதிகாண்பதுவே. 31

432 ஒன்றுந்தெரிந்திடவில்லையென்னுள்ளத்தொருவனைக்
கென்றுந்தெரிந்தவிவையவைகேளிரவுய்ப்பகலுங்
குன்றுங்குழியும்வனமுமலையுங்குரைகடலு
மன்றுமனையுமனமாதித்துவமாயையுமே. (32

433 பழுதுண்டபோவையப் போகவிகாரப்பாவையிடை
விழுகின்றபாவிக்குந் தன்றாட்புணையளித்தான்
றொழுகின்றவன்பருளங்களிகூரத் துலங்குமன்று [னே.
ளெழுகின்றவானந்தக்கூத்தனென் கண்மணியென்னப்ப

434 அழுக்கார்ந்தநெஞ்சுடையேனுக்கையா நின்னருள்வழ
ங்கி, னிழுக்காகுமென்றெண்ணியோவிரங்காதவியல்புக
ண்டாய், முழுக்காதலாகிவிழிநீர்பெருக்கியழுத்தொனு
ங், குழுக்காணநின்றுநடமாடுந்தில்லைக்கொழுஞ்சுடரே.

435 ஆலப்படைத்தவிழிபார்கண்மால்கொண்டவர் செயிர்
த்ர, சாலம்படைத்துத் தளர்ந்தனையேயென்றுந்தண்ண
ருள்கூர், கோலம்படைத்துக் கல்லாலடிக்கீழ்வைகுங்
கோவுங்கண்பாங், காலப்படைக்கத்தவப்படையாதென்
கொல்கன்னெஞ்சமே. (35)

436 சும்மாவிருக்கச்சுகஞ்சுகமென்றுசுருதியெல்லா
மம்மாநிரந்தாஞ்சொல்லவுங்கேட்டுமறிவின்றியே
பெம்மான்மவுனிமொழியையுந்தப்பியென்பேதமையால்
வெம்மாயக்காட்டினலைந்தேனந்தோவென்விதிவசமே.()

437 இனமேசெலச்செலவாழ்நாளுநீங்கச்செகத்திருள்சேரப்
பனமேயெனவெளிகண்டேயிருக்கவும்பாசபந்த
வினமேதுணையென்றிருந்தோநமன்வரினென்செய்குவோ
மனமேநம்போல்வுண்டோசுத்தமூடரிவ்வையகத்தே. ()

438 கட்டெல்த்தனைமலையெத்தனையத்தனைகன்மமதற்
குடலெத்தனையத்தனைகடலுண்மணலொக்குமிந்தச்
சடலத்தைநான்விடுமுன்னேயுனைவந்துசாரவிருட்
படலத்தைமாற்றப்படாதோநிறைந்தபராபரமே. (38)

439 நினைவுநினைவுநினையன்றிசில்லைநினைத்திடுங்கால், வினை
வெண்ணெற்றுருமுத னின்னையல்லாது வினைவதுண்டோ.

தனையுந்தெளிந்துன்னைச்சார்ந்தோர்களுள்ளச்செந்தாம
ரையா, பனையும்பொன்மன்றமுநின்றாடுஞ்சோதிமணிவி
ளக்கே. (39)

440 உள்ளத்தையுமிங்கெனையு நின்கையினிலொப்புவித்துங்
கள்ளத்தைச்செய்யும்வினையால்வருந்தக்கணக்குமுண்டோ
பள்ளத்தில்வீழும்புனல்போற்படிந்துன்பரமவின்ப
வெள்ளத்தின்மூழ்கினர்க்கேயெளிதாந்தில்லைவித்தகனே

441. கள்ளம்பொருந்துமடநெஞ்சமேகொடுங்காலர்வந்தா
லுள்ளன்பவர்கட்குண்டோவில்லையேயுலகின்றவனை
வள்ளம்பொருந்துமலரடிகாணமன்றாடுமின்ப
வெள்ளச்செய்பாதப்புணையேயல்லாற்கதிவேறில்லையே.

442 தன்மயமானசுபாவத்தின்மெள்ளந்தலைப்படுங்கான்
மின்மயமானசகம்யாதுரைத்தென்வெயிலுய்த்த
சின்மயமுத்திரைக்கையே மெய்யாகத்தெளிந்தநெஞ்சே
நின்மயமென்மயமெல்லாநிறைந்தநிராமயமே. (42)

443 ஆயுங்கலையுஞ்சுருதியுங்காண்டற்கரியவுனை
தோயும்படிக்குக்கருணைசெய்வாய்சுகவான்பொருளே
தாயும்பிதாவுந்தமருங்குருவுந்தனிமுதலு
நீயும்பரையுமென்றேயுணர்ந்தேனிதுநிச்சயமே. (43)

444 அல்லும்பகலுமுனக்கேயபயமடையமென்று [ண்மனக்
சொல்லுஞ்சொ லின்னந் தெரிந்தன்றோ துதிப்பார்க
கல்லுங்கரைக்குமவுனவுனது கருணையென்பாற்
செல்லும்பொழுதல்லவோசெல்லுவேனந்தச்சிற்சுகத்தே. ()

445. எல்லாஞ்சிவன்செயலென்றிருந்தாலவனின்னருளே
யல்லாற்புகலிடம்வேறுமுண்டோவதுவேநிலையா
நில்லாயுண்ணுற்றமியேற்குக்கதியுண்டிந்நீணிலத்திற்
பொல்லாமயக்கத்திலாழ்ந்தாலதென்னபுகனெஞ்சமே.

446 ஒளியேயொளியினுணர்வேயுணர்வினுவகைபொங்குங்
களியேகளிக்குங்கருத்தேகருத்தைக்கவளங்கொண்ட
வெளியேவெளியின்விளாசுகமேசுகர்வீறுகண்டேன் [னே.
தெளியேன்றெளிந்தவரைப் போற்றிடேனென்ன செய்குவ

447 மறக்கின்தன்மையிறத்தலொப்பாகுமனமொன்றிற்
பிறக்கின்றதன்மைபிறத்தலொப்பாகுமிப்பேய்ப்பிறவி
யிறக்கின்றவெல்லைக்களவில்லையேயிந்தச்சன்மவல்ல
றிறக்கின்றநாளெந்தநாள்பராமேநின்றொழும்பனுக்கே. ()

448 காட்டியவந்தக்கரணமுமாயைபிக்காயமென்று
சூட்டியகோலமுநானுவியங்கத்துறையிதனு
ணாட்டியநான்றனக்கென்றோறிலற்றநாளிவற்றைக்
கூட்டிநின்றாட்டினையேபராமேநல்லகூத்திதுவே. (48)

449 பொல்லாதமாமர்க்கடமனமேயெனைப்போலடுத்த
வெல்லாற்றையும்பற்றிக் கொண்டனையே யென்னைநின்மய
மில்லாயருள்வெளிநோனிற்பேனருணிட்டையொரு [மா
சொல்லாற்பதிந்துபரிபூரணானந்தத்தோய்குவனே. (49)

450 வாராய்நெஞ்சேயுன்றன் றுன்மார்க்கம்யாவையுமவைத்
துக்கட்டிங், காராயடிக்கடிசுற்றுகின்றாயுன் னவலமதிக்,
கோராயிரம்புத்திசொன்னாலு மோர்கிலேயாகெடுவாய்,
பாராயுனைக்கொல்லுவேன் வெல்லுவேனருட் பாங்கு
கொண்டே. (50)

451 மாதத்திலேயொருதிங்களுண்டாகிமடிவதைநீ
போதத்திலேசற்றும்வைத்திலேயேவெறும்புன்மைநெஞ்சே
வேதத்திலேதர்க்கவாதத்திலேவிளங்காதவிந்து
நாதத்திலேயடங்காதந்தவான்பொருணாடிக்கொள்ளே. (51)

452 எங்கும்வியாபித்துணர்வாமுனக்கென்னிதயத்துளே
தங்குந்தபோக்கெரியாதவண்ணந்தடைசெய்ததா

ரங்கநுகுழைந்துளளுருகுமல்பாளாககணைகடந்து •
பொங்குங்கருணைக்கடலேசப்பூரணபோதத்தனே (52)

453 வையகமாதர்சுகத்தையும்பொன்னையுமாயைமல
மெய்யையுமெய்யென்றுநின்னடியார்தம்மிலேசுகத்தையு
மையமில்வீட்டையுமெய்ந்நூலையும்பொய்யதாகவெண்ணும்
பொய்யர்தந்நட்டைவிடுவதென்றோபரிபூரணமே. (53)

454 அளியுங்கனியொத்தருளினையானேர்ந்தயர்வுறுவேன்
றெளியும்படிக்கிப்பரிபாககாலமுஞ்சித்திக்குமோ
வொளியுங்கருணையுமாறுதலின்பமுமோருருவாய்
வெளிவந்தடியர்களிக்கநின்றும்விழுப்பொருளே. (54)

455 அடையார்புரஞ்செற்ற தேவே நின் பொன்னடிக்கன்பு
சற்றும், படையாதவென்னைப்படைத்திந்தப்பாரிற் படர்
ந்தவினைத், தடையாற்றலையிட்டு நெஞ்சம்புண்ணாகத்த
ளரவைத்தா, யுடையாயுடையபடியன்றி யான்செய்த
தொன்றிலையே. (55)

456 ஆடுங்கறங்குந்திரிகையும்போலவலைந்தலைந்து
காடுங்கரையுந்திரிவதல்லானின்கருணைவந்து
கூடும்படிக்குத்தவமுயலாதகொடியரேமன்
றேடும்பொழுதென்னசெய்வார்பரானந்தசிற்சுடரே. ()

457 கற்றும்பலபலகேள்விகள்கேட்டுங்கறங்கெனவே
சுற்றுந்தொழில்கற்றுச்சிற்றின்பத்தூடுசுழலினென்னுங்
குற்றங்குறைந்துகுணமேலிடுமன்பர்கூட்டத்தையே
முற்றுந்துணையெனநம்புகண்டாய்சுத்தமூடநெஞ்சே. ()

458 நீயெனநானெனவேறில்லையென்னுநினைவருளத்
தாயெனமோனகுருவாகிவந்துதடுத்தடிமைச்
சேயெனக்காத்தனையேபரமேநின்றிருவருளுக்
கேயென்னசெய்யுங்கைம்மாறுளதேசுத்தவேழையனே

459 ஆத்திரம்வந்தவர்பேரலைபாமலரோகதிட
காத்திரந்தென்னையேயன்னைபோலுங்கருணைவைத்தியம்
மாத்திரமுன்னின்றுணர்த்தினையேமவுனவினிநான்
சாத்திரஞ்சொன்னபடியியமாதியுஞ்சாதிப்பனே. (59)

# உடல்பொய்யுறவு.



நேரிசைவெண்பா.

460 உடல்பொய்யுறவாயினுண்மையுறவாகக்
கடவாரார்தண்ணருளைக்கண்டாய்—திடமுடனே
யுற்றுப்பார்மோனமொருசொல்லேயுண்மைநன்றுப்
பற்றிப்பார்மற்றவெல்லாம்பாழ். (1)

461 பாராதிபூதமெல்லாம்பார்க்குங்காலப்பரத்தின்
சீராகநிற்குந்திறங்கண்டாய்—நேராக
நிற்குந்திருவருளினெஞ்சேயானிற்பதல்லாற்
கற்குநெறியாதினிமேற்காண். (2)

462 மெய்யானதன்மைவிளங்கினால்பார்க்கேனும்
பொய்யானதன்மைபொருந்துமோ—வையாவே
மன்னுநிராசையின்வந்ததல்லவுன்னடிமை
யென்னுநிலையெய்துமாறென். (3)

463 அறியாமைமேலிட்டறிவின்றிநிற்குங்
குறியேற்கறிவென்றகோலம்—வறிதேயா
னீயுணர்த்தநானுணருகேசத்தாலோவறிவென்
றேயெனக்கோர்நாமமிட்டதே. (4)

464. ஏதுக்குச்சும்மாவிருமனமேயென்றுனக்குப்
போதித்தவுண்மையெங்கேபோகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்தமல்லரைப்போல்வாதாடினாயேயுன்
புந்தியென்னபோதமென்னபோ. (5)

465 சகமனைத்தும்பொய்யெனவேதானுணர்ந்தாற்றக்க
சகமனைத்தும்பொய்யன்றோசாரா—இகபரத்தும்
விட்டுப்பிரியாதமேலானவத்துவிதக்
கட்டுக்குளாவதென்றோகாண். (6)

466 கற்கண்டோதேனோகனிரசமோபாலோவென்
சொற்கண்டாதேதெனநான்சொல்லுவேன்—விற்கண்ட
வானமதிகாணமவுனிமவுனததளித்த
தானமதிலூறுமமிர்தம். (7)

467 கேட்டலுடன்சிந்தித்தல்கேடிலாமெய்த்தெளிவால்
வாட்டமறுவுற்பவநோய்மாறுமோ—நாட்டமுற்று
மெய்யானநிட்டையினைமேவினர்கட்கன்றோதான்
பொய்யாம்பிறப்பிறப்புப்போம். (8)

468 மாயாசகத்தைமதியாதார்மண்முதலா
யேயானதத்துவத்திலெய்துவரோ—நேயானு
பூதிநிலைநிற்கப்பொருந்துவர்களன்னவர்த
நீதியையேயோர்மனமே. (9)

469 இகமுழுதும்பொய்யெனவேயேய்ந்துணர்ந்தாலங்கே
மிகவளரவந்தவருண்மெய்யே—பகநெகிழப்
பாரீரொருசொற்படியேயனுபவத்தைச்
சேரீரதுவேதிறம். (10)

470 ஆரணங்களாகமங்கள்யாவுமேயானந்த
பூரணமேயுண்மைப்பொருளென்னுங்—காரணத்தை
யோராயோவுள்ளுள்ளேயுற்றுணர்ந்தவ்வுண்மையினைப்
பாராயோநெஞ்சேபகர். (11)

471 நேராயம்மௌனநிலைநில்லாமல்வாய்பேசி
யாராயலைக்கீர்நீராகெடுவீர்—நேரீர்

திரையுந்திரையுநதிச்சென்னிபனைநாவாற்
கரையுங்கரையுமனக்கல். (12)

472 அற்பமனமேயகிலவாழ்வத்தனையுஞ் [பொன்
சொற்பனங்கண்டாயுண்மைசொன்னேனான்—நற்பனை
றில்லாவிடத்தேயெனைச்சும்மாவைத்திருக்கக்
கல்லாய்நீதானோர்கவி. (13)

473 ஏதுந்திருவருளினிச்சையாமென்றென்றெப்
போதும்பொருந்தும்புனிதர்பாற்—றீதுநெறி
செல்லுமோசெல்லாதேசெல்லுமிடமின்பமலாற்
சொல்லுமோவேதத்தொனி. (14)

474 கல்லேறுஞ்சில்லேறுங்கட்டிபேறும்போலச்
சொல்லேறப்பாழ்த்ததொளைச்செவிகொண்—டல்லேறு
நெஞ்சமனைநிற்கவைத்தாய்நீதிபோதற்பரமே
வஞ்சனல்லேனீயேமதி. (15)

475 அப்பொருளுமான்மாவுமாரணநூல்சொன்னபடி
தப்பிலாச்சித்தொன்றாஞ்சாதியினா—லெப்படியுந்
தேரிற்றுவிதஞ்சிவாகமமேசொல்லுநிட்டை
யாருமிடத்தத்துவிதமாம். (16)

476 வேதமுதலாய்விளங்குஞ்சிவவடிவாய்ப்
போதநிலையிற்பொருந்தாம—லேதமிகு
மோகாதியல்லலிலேமூழ்கினையேநெஞ்சேயித்
தேகாதிமெய்யோதெளி. (17)

477 நோக்கற்கரிதானநுண்ணியவான்மோனநிலை
தாக்கற்குபாயஞ்சமைத்தபிரான்—காக்குமுயி
ரத்தனைக்குநானடிமையாகவினால்யானெனதென்
றித்தனைக்கும்பேசவிடமில். (13)

478 ஒன்றுமறநில்லென்றுணர்த்தியநம்மோனகுரு
தன்றனைக்காணீரேழிதாம்வாழ்க—வென்றென்றே
திக்கனைத்துங்கைகுவிக்குஞ்சின்மயராந்தன்மையர்க்கே
கைக்குவருமின்பக்கனி. (19)

479 மனத்தாலும்வாக்காலுமன்னவொண்ணாமோன
வினத்தாரேநல்லவினத்தார்—கனத்தபுகழ்
கொண்டவருமன்னவரேகூறரியமுத்திநெறி
கண்டவருமன்னவரேகாண். (20)

480 கண்டொளியேமோனக்கரும்பேகவலையறப் [ணிடவுன்
பண்டொளிக்குமுள்ளொளியாம்பான்மையினை—நண்
சித்தமிரங்கிலதென்சித்தந்தெளியாவே
றித்தனைக்குமாதாவுமில். (21)

481 அறியாமைசாரினதுவாயறிவா
நெறியானபோததுவாய்நிற்கும்—குறியாற்
சதசத்தருளுணர்ந்தத்தானுணராநின்ற
விதமுற்றறிவெனும்பேர்மெய். (22)

482 குருலிங்கசங்கமமாக்கொண்டதிருமேனி
கருவொன்றுமேவிநம்பாற்காட்டா—தருளென்று
கண்டவர்க்கேயானந்தங்கண்டுகொளலாமலது
கொண்டவர்க்கிங்கென்னகிடைக்கும். (23)

483 புலியினதளுடையான்பூதப்படையான்
பலியிரந்துமெல்லாம்புரிப்பான்—மலிபுனல்சேர்
பொன்முடியான்முக்கட்புனிதன்சரண்புகுந்தோர்க்
கென்முடியாதேதுமுளதே. (24)

484 சொல்லுக்கடங்காச்சுகப்பொருளைநாமெனவே
யல்லும்பகலுமாற்றுவதென்—னல்லசிவ

ஞானமயம்பெற்றோர்கணுமில்லையென்பரந்தோ
மோனமயமான முறை. (25)

485 ஐயாவருணகிரியப்பாவுன்னைப்போல
மெய்யாகவோர்சொல்விளம்பினர்யார்—வையகத்தோர்
சாற்றரிதென்றேசற்றார்தன்னனையாய்முக்கணெந்தை
நாற்றிசைக்குங்கைகாட்டினான். (26)

486 காதற்றுப்போனமுறிகட்டிவைத்தாலாவதுண்டோ
தீதற்றகாயமுமச்செய்கையே—போதமாய்
நிற்பரல்லாலிச்சகத்தினோரார்கணேரிடினுந்
தற்பரமாக்கண்டிருப்பார்தாம். (27)

487 வெள்ளங்குலாவுசடைவெள்ளக்கருணையினான்
கள்ளங்குலாவுவஞ்சக்கள்ளனே—னுள்ளத்தி
லில்லனென்றாலன்னவன்றானெங்கும்வியாபகத்தா
னல்லனென்றுஞ்சொல்லவழக்காம். (28)

488 தத்துவப்பேயோடேதலையடித்துக்கொள்ளாமல்
வைததவருண்மோனவள்ளலையே—நித்தமன்பு
பூணக்கருதுநெஞ்சுபோற்றக்கரமெழும்புங்
காணத்துடிக்குமிருகண். (29)

489 தொல்லைவினைக்கீடாய்ச்சுழல்கின்றநானொருவ
னெல்லையிலாநின்கருணையெய்துவனோ—வல்லவனா
மோனகுருவேமுழுதினையுந்தானுணர்ந்த
ஞானகுருவேநவில். (30)

490 மூன்றுகண்ணுமுத்தொழிலாமும்முதலாமுவுலகுந்
தோன்றக்கருணைபொழிதோன்றலே—யீன்றவன்னை
தன்னைப்போலன்புதழைத்தோயொருதெய்வ
முன்னைப்போலுண்டோவுரை. (31)

491 நேசிக்குஞ்சிந்தைநினைவுக்குமுன்னைவைத்துப்
பூசிக்குந்தானிறைந்தபூரணமா—யோசித்து
நின்றதல்லான்மோனநிருவிகற்பநிட்டையிலே
யென்றுவருமோவறியேனே. (32)

492 அறிவினறியாமையற்றறிவாய்நின்று
பிறிவறவானந்தமயப்பெற்றுக்—குறியவிழ்ந்தா
னென்றைக்குடல்வேண்டேனையாளிவ்வாக்கையையே
யென்றைக்கும்வேண்டுவேனையான். (33)

493 உடலைப்பழித்திக்குணவுங்கொடாமல்
விடவிடவேநாடுவரோமெய்யைப்—படபடென
வேண்டுவேனிந்தவுடன்மெய்புணராப்பொய்யனு
னுண்டநீதானேயறி. (34)

494 அறியாயோவென்னையுநீயாண்டநீசுத்த
வெறியாய்மயங்கவுமேன்விட்டாய்—நெறிமயங்கிக்
குன்றுஞ்செடியுங்குறுகுமோவையாவே
கன்றுகெட்டாற்றாயருகேகாண். (35)

495 ஏதுக்குடற்சுமைகொண்டேனிருந்தேனையனே
யாதிக்கமோனவருட்டாயே—சோதியா.
மன்னநிருவிகற்பவானந்தநிட்டையிலே
பின்னமறநில்லாதபின். (36)

496 பின்னுமுடற்சுமையாப்பேசும்வழக்கதனு
லென்னபலனுமுற்றிருந்தோமே—யன்னதனு
லானந்தந்தானேதானாகுமெம்மையனே
யேனிந்தத்துன்பமினி (37)

497 துன்பக்கடலிற்றுளைந்ததெல்லாந்தீர்ந்ததே
யின்பக்கடலிலிருமென்ன—வன்பிற்

கரைந்துகரைந் துருகிக்கண்ணருவிகாட்ட
விரைந்துவருமானந்தமே. (38)

498 கரைந்துகரைந் துருகிக்கண்ணீராருக
விரைந்தேநிருவிகற்பமெய்த — நிரந்தரமு
நின்னையேசிந்திக்கநீகொடுத்தாய்மோனநா
னென்னைமுழுதுங்கொடுத்தேனே. (39)

499 அல்லும்பகலும்பேரன்புடனேதானிருந்தாற்
கல்லுமுருகாதோகன்னெஞ்சே — பொல்லாத
தப்புவழியேநினைந்தாய்சந்ததமுநீயிறந்த
வெப்பிலேயானந்தமே. (40)

500 கொடுத்தேனேயென்னைக்கொடுத்தவுடனின்ப
மடுத்தேனேநீடுழிவாழ்ந்தே — யடுத்தேனே
பெற்றேனேபெற்றுப்பிழைத்தேனேசன்மவல்ல
லிற்றேனேயேழையடியேன். (41)

501 பெற்றோரும்பிறவாமைபேசாமையாயிருக்கக்
கற்றோமனவுரைக்கக்காரியமென் — சற்றேனு
நீக்கற்றவின்பநிலைபொருந்திபேசற்று
வாக்கற்றுப்பேசுமோவாய். (42)

502 காலன்றனையுதைத்தான்காமன்றனையெரித்தான்
பாலன்பசிக்கிரங்கிப்பாற்கடலை — ஞாலமெச்சப்
பின்னேநடக்கவிட்டான்போருளைநாடாதார்க்
கென்னேநடக்கையினி. (43)

503 விண்ணருவிமேன்மேல்விளங்குவபோலேயிரண்டு
கண்ணருவிவெள்ளமொடுகைகூப்பித் — தண்ணமிர்த
வெள்ளமேயூறுந்தவெற்பேயெனத்தொழுவோ
ருள்ளமேஞானவொளி. (44)

504 பிள்ளைமதிச்செஞ்சடையான்பேசாப்பெருமையினான்
கள்ளவிழும்பூங்கொன்றைக்கண்ணியா—னுள்ளபடி
கல்லாலின்கீழிருந்துகற்பித்தானோர்வசன
மெல்லாருமீடேறவே. (45)

505 புலனைந்துந்தாக்கானேபொரமயங்கிச்சிந்தை
யலமந்துழலுமடிமை—நலமிகுந்த

பித்தானுண்டோபிறப்பு. (46)

506 நிறைகுடந்தானீர்கொளுமோ நிச்சயமாமோன
முறையுணர்ந்தார்யாதைமுயல்வார்—பிறையணிந்த
மிக்ககயிலாயமலைவித்தகனை வேதியனை
செக்கரணிமேனியனைச்செப்பு. (47)

507 துங்கமழுமானுடையாய்சூலப்படையுடையாய் [ரு
திங்களணிசெஞ்சடையாய்சேவுடையாய்—மங்கையொ
பாலுடையாய்செங்கட்பணியாயென்சென்னியின்மேற்
காலுடையாய்நீயேகதி. (48)

508 இனியகருணைமுகிலெம்பிரான்முக்கட்
கனியமிர்தவாரியின்பக்கட்டி—தனிமுதல்வ
னித்தன்பரமனிமலனிறைவாய்நிறைந்த
அத்தனமக்கென்றுந்துணை. (49)

509 நீதியாய்க்கல்லாலினீழலின்கீழேயிருந்து
போதியாவுண்மையெலாம்போதித்தா—னைதில்
சனகாதியாயதவத்தோர்க்குஞான
தினகரனுமௌனசிவன். (50)

510 தேகச்செயலறுனுஞ்சிந்தையுடனேகுழையில்
யோகநிலைஞானிகளுக்கொப்புவதோ—மோகநிலை

யல்லவிலேவாழ்வாரோவப்பனேநீயற்ற
வெல்லையிலேசும்மாவிரு. (51)

511 சும்மாவிருக்கச்சுகமுதயமாகுமே
யிம்மாயாயோகமினியேனடா—தம்மறிவின்
சுட்டாலேயாகுமோசொல்லவேண்டாங்கன்ம
நிட்டாசிறுபிள்ளாய்நீ. (52)

512 நீயற்றவந்நிலைபேநிட்டையதினீயிலையோ
வாயற்றவனேமயங்காதே—போயற
றிருந்தாலுநீபோகாவென்றுமுள்ளாய்சும்மா
வருந்தாதேயின்பமுண்டுவா. (53)

513 வரவாவென்றின்பம்வரவழைக்குங்கண்ணீரோ
டாவாவென்றேயழுதவப்பனே—நீவாடா
வெல்லாநமக்கெனவேயிந்தனையேயிந்தபடி
நில்லாயதுவேநிலை. (54)

514 நில்லாப்பொருளைநினையாதேநின்னையுள்ளோர்
சொல்லாப்பொருட்டிறனைச்சொல்லாதே—கல்லாத
சிந்தைகுழைந்துசுகஞ்சேரக்குருவருளால்
வந்தவழிநல்லவழி. (55)

515 வழியிதென்றுமல்லாவழியிதென்றுஞ்சொல்லிற்
பழிபழியாநல்லருளாற்பார்த்தோர்—மொழியுனக்கே
யேற்றிருக்கச்சொன்னவன்றேயெங்கும்பெருவெளியாம்
பார்த்தவிடமெல்லாநீபார். (56)

516 பாரனைத்தும்பொய்யெனவேபட்டினத்துப்பிள்ளையைப்
லாருந்துறக்கையரிதரிது—நேரே [போ
மனத்துறவுமப்படியேமாணவிவற்றி
ஞானக்கிசைந்தவாறென்றேயோர். (57)

517 ஓராமலேயொருகாலுன்னுமனுள்ளொளியைப்
பாராமலுள்ளபடிபார்த்திருந்தால்—வாராதோ
பத்துத்திசையும்பரந்தெழுந்தானந்தவெள்ளந்
(58)

518 தானானதன்மைவந்துதாக்கினலவ்விடத்தே
வானாதிமாயைவழங்காவோ—ஞானமே
ன்மேனீதான்றுவுறவாக்கின்றதென
வென்னுள்ளேயென்றமிரு. (59)

519 என்னையுன்னையின்னதெனவென்னுமதிற்குநிலை
தன்னையருளென்றகருணைத்தி—லன்னைபெற்ற
பிள்ளைக்குஞ்சொல்லாகபெற்றிகண்டாயையனே
யுள்ளத்தினுள்ளேயுணர். (60)

520 சொன்னவர்தாநிட்டைதொகுத்திராநிட்டையிலே
மன்னினவர்போதியார்மாமௌனன்—றன்னுள்
விருப்பாகக்கைகாட்டிமிக்கவடநீழ
லிருப்பானிருவிகற்பத்தே. (61)

521 இந்தநிருவிகற்பத்தெந்தையிருக்குநிட்டை
சிந்தைநீதேறுய்செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெடவன்றேவோர்யாத்திரைத்துக்காடலல்லா
லாடுவதேனுட்டுமவன். (62)

522 அவனைப்பாழுமவனேகுருவு
மவனேயகிலமனைத்து—மவனேதா
மானவனேசொன்னலவனேகுருவெனக்கு
நானவனுய்நிற்பதெந்தநாள். (63)

523 நாளவங்கள்போகாமனுடேரறுகந்தமையே
யாளவந்தார்தாளின்கீழாட்புகுந்தாய்—மீளவுன்னைத்

காட்டாமனீற்குங்கருத்தறிந்தானெஞ்சேயுன்
னூட்டாளுனையமில்லையால். (64)

524 யான்றுனெனலறலேபின்பநிட்டையென்றருணைக்
கோன்றானுரைத்தமொழிகொள்ளாயோ—தோன்றி
யிழுக்கடித்தாய்நெஞ்சேநீயென்கலைகள்சோர
வழுக்கடிக்கும்வண்ணார்போலாய். (65)

525 எங்குஞ்சிவமேயிரண்டற்றுநிற்கினெஞ்சே
தங்குஞ்சுகநீசலியாதே—பங்கிங்கென்
றெண்ணாதேபாழிலிறந்துபிறந்துழலப்
பண்ணாதேயானுன்பரம். (66)

526 மெய்யைப்பொய்யென்றிடவு மெய்யணையாப் பொய்ந்நெ
ஞ்சே, பொய்யைத்தான்மெய்யெனவும்போகுமோ—வை
யமறத், தன்மயத்தைமெய்யெனவேசார்ந்தனையேலான
ந்த, மென்மயமுநின்மயமுமே. (67)

527 பூங்காவனநிழலும்புகதமுதுஞ்சாந்தபதம்
வாங்காதவானந்தமாமழைபு—நீங்காவாஞ்
சொல்லிறந்தமாண்டவர்போற்றாமவுனபூமியினு
னில்லையெனநின்றவிடம். (68)

528 இடங்காணநல்லபொருளின்பமெனக்கேவ
லடங்காக்கருவியனைத்து—முடனுதவ
மந்தாரதாருவெனவந்துமவுனகுரு
தந்தானோர்சொற்கொண்டுதான் (69)

529 தானந்தவஞானஞ்சாற்றரியசித்திமுத்தி
யானவையெல்லாந்தாமேயாகுமே—மோனகுரு
சொன்னவொருசொல்லாற்சுகமாயிருமனமே
பின்னமயக்கமுனக்கேன். (70)

530 உன்னையுடலையுறுபொருளைத்தாவெனவே
யென்னையடிமைக்கிருத்தினான்—சொன்னவொரு
சொல்லைமறவாமற்றோய்ந்தானெஞ்சேயுன்னா
லில்லைபிறப்பதெனக்கே. (71)

531 எனக்குமுனக்குமுறவில்லையெனத்தேர்ந்து
நினைக்கவரிதானவின்பநிட்டை—தனைக்கொடுத்தே
யாசான்மவுனியளித்தானெஞ்சேயுனையோர்
காசாமதியேனான்காண். (72)

532 ஆனந்தமோனகுருவாமெனமேயென்னறிவின்
மோனந்தனக்கிசையமுற்றியதாற்—றேனுந்து
சொல்லெல்லாமோனந்தொழிலாதியுமோனா
மெல்லாநன்மோனவடிவே. (73)

533 எல்லாமேமோனநிறைவெய்துதலாலெவ்விடத்து
நல்லார்கண்மோனநிலைநாடினார்—பொல்லாத
நானெனவிங்கொன்றைநடுவேபுளைக்கவிட்டிங்
கேனலைந்தேன்மோனகுருவே. (74)

534 மோனகுருவளித்தமோனமேபானந்த
ஞானவருளுமதுநானுமது—வானாதி
நின்றநிலையுமதுநெஞ்சப்பிறப்புமது
வென்றறிந்தேனானந்தமே. (75)

535 அறிந்தவறிவெல்லாமறிவன்றியில்லை
மறிந்தமனமற்றமவுனஞ்—செறிந்திடவே
காட்டினானானந்தநாட்டிற்குடிவாழ்க்கை
கூட்டினான்மோனகுரு. (76)

536 குருவாகித்தண்ணருளைக்கூறுமுன்னேமோனா
வுருவேயுயிர்பொருளுமொக்கத்—தருதியென

வாங்கினைமேலவருமுண்மைவைத்திடவுங்கேட்டிடவு
மீங்கொருவருண்டோவினி. (77)

537 இனியகருப்புவட்டையென்ஞவிலிட்டா
னணியிரதமாறுதுநானுந்—தனியிருக்கப்
பெற்றிலேன்மோனம்பிறந்தவன்றேமோனமல்லாற்
கற்றிலேனேதுங்கதி. (78)

538 எதுக்குஞ்சும்மாவிருநீயெனவுரைத்த
சூதுக்கோதோன்றுந்துணையாகிப்—போதித்து
நின்றதற்கோவென்னையாநீக்கிப்பிரியாமற்
கொன்றதற்கோபேசாக்குறி. (79)

539 குறியுங்குணமுமறக்கூடாதகூட்டத்
தறிவறிவாய்நின்றுவிடவாங்கே—பிறிவறவுஞ்
சும்மாவிருத்திச்சுகங்கொடுத்தமோனநின்பாற்
கைம்மாறுநானொழிதல்காண. (80)

540 நான்றானெனுமயக்கநண்ணுங்காகெண்ணே
வான்றானெனநிறையமாட்டாய்நீ—யூன்றாமல்
வைத்தமவுனத்தாலேமாயைமனமிறந்து
துய்த்துவிடுஞானசுகம். (81)

541 ஞானநெறிக்கேகற்றகுருநண்ணரியசித்திமுத்தி
தானந்தருமந்தழைத்தகுரு—மானமொடு
தாயெனவும்வந்தென்னைத்தந்தகுருவென்சிந்தை
கோயிலெனவாழுங்குரு. (82)

542 சித்துஞ்சடமுஞ்சிவத்தைவிடவில்லையென்ற
நித்தன்பரமகுருநேசத்தாற்—சுத்தநிலை
பெற்றோமேநெஞ்சேபெரும்பிறவிசாராமற்
கற்றோமேமோனக்கரு. (83)

## ஏசற்றவந்நிலை.



கொச்சகக்கலிப்பா.

543 ஏசற்றவந்நிலையேயெந்தைபரிபூரணமாய்
மாசற்றவானந்தவாரிவழங்கிடுமே
யூசற்சுழல்போ லுலகநெறிவாதனையாற்
பாசத்துட்செல்லாதேபலகாலும்பாழ்நெஞ்சே. (1)

544 பாழாகியண்டப்பரப்பையெலலாம்வாய்மடுத்து
மாழாழியின்பத்தழுந்தப்படியாபோ [ல்
தாழாயோவெந்தையருட்டாட்கீழ்நெஞ்சேயெனைப்போ
வாழாதுவாழ்ந்தழியாவண்ணமிருப்பாயே. (2)

545 இருப்பாயிருந்திடப்பேரின்பவெளிக்கேநமக்குக்
குருப்பார்வையல்லாமற்கூடக்கிடைத்திடுமோ
வருட்பாய்நமக்காகவாளவந்தார்பொன்னடிக்கீழ்
மருட்பேயர்போலிருக்கவாகண்டாய்வஞ்சநெஞ்சே. (3)

546 வஞ்சமோபணடையுளவாதனையானீயலைந்து
கொஞ்சமுற்றுயுனைக்குறைசெல்லவாயுமுண்டோ
வஞ்சலஞ்சலென்றிரங்குமானந்தமாகயற்கீழ்
நெஞ்சமேயென்போலநீயழுந்தவாராயோ (4)

547 வாராவரவாய்வடநிழற்கீழ்வீற்றிருந்த
பூராயநம்மைப்புலப்படுத்தவேண்டியன்றோ
வோராயோநெஞ்சேயுருகாயோவுற்றிருந்து
பாராயோவவ்வுருவைப்பார்க்கநிறைவாய்விடுமே. (5)

548 வாயாதோவின்பவெள்ளம்வந்துன்வழியாகப்
பாயாதோகாணும்பயிராய்ப்பிழையேனோ
வோயாமலுன்னியுருகுநெஞ்சேயந்நிலைக்கே
தாயானமோனனருள்சந்திக்கவுந்திடுமே. (6)

549 வந்தவாவைமறந்துலகாய்வாழ்ந்துகன்ம
பந்தமுறவுன்னைப்படிப்பிக்கக்கற்றவர்யா
ரிந்தமதியேனுனக்கிங்கென்மதிகேளென்றாலே
சந்ததநெஞ்சேபாதத்திற்சாரினின்பமுண்டாமே. (7)

550 இன்பமயமாயுலகமெல்லாம்பிழைப்பதற்குன்
னன்புநிலையென்பாரதுவுநினையன்றியுண்டோ
வுன்புலத்தையோரினருட்கோபபாவாய்நெஞ்சே
தென்புலத்தாரோடிருந்துசெய்பூசைகொண்டருளே. (8)

551 அருளேயோராலயமாவானந்தமாயிருந்த
பொருளோடியானிருக்கப்போயொளித்தநெஞ்சே
மருடேர்முயற்கோடோவான்மலரோபேய்த்தேரோ
விருடேரநீயுரைந்ததெவ்விடமோகாணேனே (9)

552 எவ்விடத்தும்பூரணமாமெந்தைபிரான்றண்ணருளே
யவ்விடத்தேயுன்னைநெஞ்சேயாராயிற்கண்டிலனே
யவ்விடத்துமாயையிலேமாண்டனையோவவ்விடமுஞ்
செவ்விடமேநீயுஞ்செனனமற்றுவாழியவே. (10)

---

## காடுங்கரையும்.



அறுசீர்விருத்தம்.

553 காடுங்கரையுமனக்குரங்கு
கால்விட்டோடவதன்பிறகே
யோடுந்தொழிலாற்பயனுளதோ
வொன்றாய்ப்பலவாயுயிர்க்குயிரா
யாடுங்கருணைப்பரஞ்சோதி
யருளைப்பெறுதற்கன்புநிலை
தேடும்பருவமிதுகண்டீர்
சேரவாருஞ்செகத்தீரே.

554 சைவசமயமேசமயஞ்
சமயாதீதப்பழம்பொருளைக்
கைவந்திடவேமன்றுள்வெளிகாட்டு
மிந்தக்கருத்தைவிட்டுப்

புகுதவேண்டாமுத்திதருந்
தெய்வசபையைக்காண்பதற்குச்
சேரவாருஞ்செகத்தீரே. (?)

555 காகமுறவுகலந்துண்ணக்
கண்டீரகண்டாகாரசிவ
போகமெனும்பேரின்பவெள்ளம்
பொங்கித்ததும்பிப்பூரணமா
யேகவுருவாய்க்கிடக்குதையோ
வின்புற்றிடநாமினியெடுத்த
தேகம்விழுமுன்புசிப்பதற்குச்
சேரவாருஞ்செகத்தீரே. (3)

## எடுத்ததேகம்.

கட்டளைக்கலிப்பா,

556 எடுத்ததேகப்பொருளாவிமூன்றுமே
யெனக்கொன்றில்லையெனமோனநன்னெறி
கொடுத்தபோதுகொடுத்ததன்றோபின்னுங்
குறைநானென்றுகூத்தாடமாயையை
விடுத்தவாறுங்கண்ணீரொடுகம்பலை
விலகுமாறுமென்வேட்கைப்ரவாகத்தைத்
தடுத்தவாறும்புகலாய்சிராகிரித்
தாயுமானதயாபரமூர்த்தியே. (1)

557 நோயும்வெங்கலிப்பேயுந்தொடாநின்
னூலிற்சொன்னமுறையியமாதிநான்
றேயும்வண்ணமெனைக்காக்குங்காவலுந்
தொழும்புகொள்ளுஞ்சுவாமியுநீகண்டா
யோயுஞ்சன்மமினியஞ்சலஞ்சலென்
றுலகங்கண்டுதொழவோருருவிலே
தாயுந்தந்தையுமாவனேப்பிரகிரித்
தாயுமானதயாபரமூர்த்தியே. (2)

## முகமெலாம்.



கலிநிலைத்துறை.

558 முகமெலாங்கண்ணீர்முததருமபிடச்செங்கைமுகிழ்ப்ப
வகமெலாங்குழைந்தானந்தமாகநல்லறிஞ
ரிகமெலாந்தவமிழைக்கின்றாரென்செய்கோவேழை
சகமெலாம்பெறநல்லருளுதாரமாச்சமைந்தோய். (1)

## திடமுறவே.

கொச்சகக்கலிப்பா.

559 திடமுறவேநின்னருளைச்சேர்ந்தென்னைக்காத்தாளக்
கடனுனக்கென்றெண்ணிநின்னைக்கைகுவித்தோனலனோ
வடைவுகெட்டபாழ்மாயையாழிமேலபின்னமல்லற்
படமுடியாதென்னவிப்பற்றேபராபரமே. (1)

560 ஆராமைகண்டிங்கருட்சுருவாய்நீயொருகால்
வாராயோவந்தவருததமெல்லாந்தீராயோ
பூராயமாகவருட்பூரணத்திலண்டமுதற்
பாராதிவைத்தபதியேபராபரமே. (2)

561 வாழாதுவாழவினைவந்தடைந்தோரெல்லாரு
மாழாழியென்னவருளானழுக்காற்றோ
டேழாயெனவுலகமேசுமினிநானொருவன்
பாழாகவாறுமுகம்பார்ப்பேபராபரமே. (3)

562 உள்ளத்தினுள்ளேயொளித்தென்னையாட்டுகின்ற
கள்ளக்கருணையையான்காணுந்தரமாமோ
வெள்ளத்தைமாற்றிவிடக்குண்பார்நஞ்சூட்டும்
பள்ளத்தின்மீன்போற்பதைத்தேன்பராபரமே. (4)

563 வாவிக்கமலமலர்வண்டாய்த்துவண்டுதுவண்
டாவிக்குணின்றவுனக்கன்புவைத்தார்க்கஞ்சலென்பாய்
பூவிற்கும்வான்கடையிற்புல்விற்போர்போலவொன்றைப்
பாவிக்கமாட்டேன்பதியேபராபரமே. (5)

564 விண்ணாறுவெற்பின்விழுந்தாங்கெனமார்பிற்
கண்ணாறுபாய்ச்சிடுமென்காதல்வெள்ளங்கண்டிலையோ
தண்ணாறுசாந்தபதத்தற்பரமேநால்வேதப்
பண்ணாறுமின்பப்பதியேபராபரமே. (6)

565 கூடியநின்சீரடியார்கூட்டமென்றேவாய்க்குமென
வாடியவென்னெஞ்சுமுகவாட்டமுநீகண்டிலையோ
தேடியநின்சீருளைத்திக்கனைத்துங்கைகுவித்துப்
பாடியநான்கண்டாய்பதியேபராபரமே. (7)

566 நெஞ்சத்தினூடேநினைவாய்நினைவூடு
மஞ்சலெனவாழுமெனதாவித்துணைநீயே
சஞ்சலமாற்றினையினிமேற்றாய்க்குபசாரம்புகன்று
பஞ்சரிக்கநானோர்பதியேபராபரமே. (8)

567 புத்திநெறியாகவுனைப்போற்றிப்பலகாலு
முத்திநெறிவேண்டாதமூடனேற்கேவேள்

சித்திநெறிக்கென்கடவேன்சிரடியார்க்கேவல்செயும்
பத்திநெறிக்கேனுமுகம்பார்ப்பராபரமே. (9)

568 கண்டறியேன்கேட்டறியேன்காட்டுநின்னையேயிதயங்,
கொண்டறியேன்முத்திகுறிக்குந்தரமுமுண்டோ, தொ
ண்டறியாப்பேதைமையேன்சொல்லெனின்றன்மை யெ
ல்லாம், பண்டறிவாய்நீயேபராபரமே. (10)

## தன்னை.



கொச்சகக்கலிப்பா.

569 தன்னையறியத்தனதருளாற்றானுணர்த்தும்
மன்னைப்பொருளெனவேவாழாமற்பாழ்நெஞ்சே
பொன்னைப்புவியைமடப்பூவையரைமெய்யெனவே
யென்னைக்கவர்ந்திழுத்திட்டென்னபலன்கண்டாயே.

## ஆக்குவை.



570 ஆக்குவையமாயையாவுநொடிதனிலதனைமாள
நீக்குவைநீக்கமில்லாநினைப்பொடுமறப்புமாற்றிப்
போக்கொடுவரவுமின்றிப்புனிதநல்லருளானந்தந்
தாக்கவுஞ்செய்வாயன்றேசச்சிதானந்தவாழ்வே. (1)

## கற்புறுசிந்தை.



571 கற்புறுசிந்தைமாதர்கணவரையன்றிவேறு
பிற்புறக்கவரைநாடார்யாங்களுமின்பவாழ்வுக்
கற்பொறியாகநல்குந்தலைவநின்னலதோர்தெய்வம்
பொற்புறக்கருதோங்கண்டாய்பூரணானந்தவாழ்வே

572 முருந்திளநகையார் பாரமுலைமுகந் தழுவிச்செவ்வாய்
விருந்தமிர் தெனவருந்தி வெறியாட்டுக்காளாய்நாளு
மிருந்தலோகாயதப்பேரினத்தனா யிருந்துமேழை
பொருந்தவுங்கதிமேலுண்டோ பூரணானந்தவாழ்வே.

573 தீதெலாமொன்றும் வன்மைசெறிந் திருட்படலம்போர்த்த
பாதகச்சிந்தைபெற்ற பாதகனுன்பாதநீழ
லாதரவடையவுள்ள மன்பருள்கிலையாயின் மற்றியார்
போதனைசெய்யவல்லார் பூரணானந்தவாழ்வே. (3)

574 நாதனைநாதாதீதநண்பனை நடுவாய்நின்ற
நீதனைக்கலந்துநிற்க நெஞ்சமே நீவாவென்றால்
வாதனைபெருக்கியென்னை வசஞ்செய்து மனந்துன்மார்க்க
போதனைசெய்தனன்றோ பூரணானந்தவாழ்வே. (4)

575 எண்ணியவெண்ணமெல்லா மிறப்புமேற்பிறப்புக்காசை
பண்ணியென்னறிவையெல்லாம் பாழாக்கியெனைப்பாழாக்குந்
திண்ணியவினையைக்கொன்று சிறியனையுய்யக்கொண்டாற்
புண்ணியநினக்கேயன்றோ பூரணானந்தவாழ்வே. (5)

576 பத்திநீ பத்திக்கான பலனுநீ பலவாச்சொல்லுஞ்
சித்திநீ சித்தர்சித்தித் திறமுநீ திறமார்மோன
முத்திநீ முத்திக்கான முதலுநீ முதன்மையான
புத்திநீ யெனக்கொன்றுண்டோ பூரணானந்தவாழ்வே. (6)

577 தாயினுமினியநின்னைச் சரணெனவடைந்தநாயேன்
பேயினுங்கடையனாகிப் பிதற்றுதல்செய்தனன்றோ
தீயிடைமெழுகாய்நொந்தேன் றெளிவிலேன் வீணேகாலம்
போயினதாற்றுகில்லேன் பூரணானந்தவாழ்வே. (7)

## மலைவளர்காதலி.

பதினான்குசீர்விருத்தம்.

578 பதியுண்டுநிதியுண்டுபுத்திரர்களுண்மித்திரர்கள்
பக்கமுண்டெக்காலமும்
பவிசுண்டுதவிசுண்டுதிட்டாந்தமாகயம
படரொணுந்திமிரமணுகாக்
கதியுண்டுஞானமாங்கதிருண்டுசதுருண்டு
காயசித்திகளுமுண்டு
கறையுண்டகண்டர்பாலம்மைநின்றாளிற்
கருத்தொன்றுமுண்டாகுமே
நதியுண்டகடலெனச்சமயத்தையுண்டபரா
ஞானவானந்தவொளியே
நாதாந்தரூபமேவேதாந்தமோனமே
நானெனுமகந்தைதீர்த்தென்
மதியுண்டமதியானமதிவதனவல்லியே
மதுசூதனன்றங்கையே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (1)

579 தெட்டிலேவலியமடமாதர்வாய்வெட்டிலே
சிற்றிடையிலேநடையிலே
சேலொத்தவிழியிலேபாலொத்தமொழியிலே
சிறுபிறைநுதற்கீற்றிலே
பொட்டிலேயவர்கட்டுபட்டிலேபுனைகந்த
பொடியிலேயடியிலேமேல்,
பூரித்தமுலையிலேநிற்கின்றநிலையிலே
புந்திதனைநுழையவிட்டு
நெட்டிலேயலையாமலறிவிலேபொறையிலே
நின்னடியர்கூட்டத்திலே

நிலைபெற்றவன்பிலேபாலைவற்றவெம்புஞ்ஞான
னேபத்திலேயுனிருதாண்
மட்டிலேமனதுசெலநினைகருளுமருள்வையேயா
வளமருவுதேவையபரேச
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (2)

580 பூதமுதலாகவேநாதபரிபந்தமும
பொய்யெனறனைக்காட்டியென்
போதத்தினடுவாகியடியீறுமில்லாத
போதபூரணவெளிக்கு
ளேதுமறநில்லென்றுபாயமாவைத்துநினை
வெல்லாஞ்செய்வலசித்தா
மின்பவுருவைத்தந்தவன்னையேநின்னையே
யெளியேன்மறந்துய்வனோ
வேதமுதலானநல்லாகமத்தன்மையை
விளக்குமுட்கண்ணிலார்க்கு
மிக்கநின்மகிமையைக்கேளாதசெவிடர்க்கும்
வீறுவாதம்புகலும்வாய்
வாதநோயாளர்க்குமெட்டாதமுக்கணுடை
மாமருந்துக்கமிர்தமே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (3)

581 மிடியிட்டவாழ்க்கையாலுப்பிட்டகலமெனவு
மெய்யெலாமுள்ளுடைந்து
வீறிட்டசெல்வர்தந்தலைவாசல்வாசமாய்
வேதனைகளுறவேதனுந்
துடியிட்டவெவ்வினையையேவிஞ்ஞன்புரவினான்
றொடரிட்டதொழில்களெல்லாந்

துண்டிட்டசானை தும்பியின்பொருட்டாயதுன்
றொண்டர்பணிசெய்வதென்றே
வடியிட்டசெந்தமிழினருமையிட்டாளரி
லரிவையோர்பரவைவாயி
லம்மட்டுமடியிடுநடைநடந்தருளடிக
ளடியீதுமுடியீதென
வடியிட்டமறைபேசுபசிளங்கிள்ளையே
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிபெண்ணுமையே. (4)

582 பூரணிபுராதனிசுமங்கலைசுதந்தரி
புராந்தகிதிரியம்பகியெழிற்
புங்கவிளங்குசிவசங்கரிசஹஸ்ரதள
புஷ்பமிசைவீற்றிருக்கு
நாரணிமனோதீதநாயகிகுணாதீத
நாதாந்தசத்தியென்றன்
னுமையுச்சரித்திடுமடியர்நாமமே
நானுச்சரிக்கவசமோ
வாரணிசடைக்கடவுளாரணியெனப்புகழ
வகிலாண்டகோடியீன்ற
வன்னையேயின்னையுங்கன்னியெனமறைபேசு
மானந்தரூபமயிலே
வாரணியுமிருகொங்கைமாதர்மகிழ்கங்கைபுகழ்
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (5)

583 பாகமோபெறவுனைப்பாடவறியேன்மல
பரிபாகம்வரவுமனதிற்

பண்புமோபற்றுமிலைநியமமோசெய்திடப்
பாவியேன்பாபரூப
தேகமோதிடமில்லைஞானமோகனவிலுஞ்
சிந்தியேன்பேரின்பமோ
சேரவென்றாற்கள்ளமனதுமோமெத்தவுஞ்
சிந்திக்குதென்செய்குவேன்
மோகமோமதமோகுரோதமோலோபமோ
முற்றுமாற்சரியமோதான்
முறியிட்டெனைக்கொள்ளுநிதியமோதேடவெனின்
மூசுவரிவண்டுபோல
மாகமோடவும்வல்லனெனையாளவல்லையோ
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (6)

584 தூளேறுதூசுபோன் வினையேறுமெய்யெனுந்
தொக்கினுட்சிக்கிநாளுஞ்
சுழலேறுகாற்றினிடையழலேறுபஞ்செனச்
சூறையிட்டறிவையெல்லா
நாளேறநாளேறவார்த்திகமெனுங்கூற்றி
னட்பேறவுள்ளுடைந்து
நயனங்களற்றுநீதாரூரேறுபோலவே
நானிலந்தனிலலையவோ
வேளேறுதந்தியைக்கனதந்தியுடன்வென்று
விரையேறுமாலைசூடி
விண்ணேறுமேகங்கள்வெற்பேறிமறைவுற
வெருட்டியகருங்கூந்தலாய்
வாளேறுகண்ணியேவிடையேறுமெம்பிரான்
பணதுக்கிசைந்தமயிலே

வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (7)

585 பூதமொடுபழகிவளரிந்திரியமாம்பேய்கள்
புந்திமுதலான்பேய்கள்
போராடுகோபாதிராக்ஷசப்பேய்களென்
போதத்தையூடழித்து
வேதனைவளர்த்திடச்சதுர்வேதவஞ்சன்
விதித்தானிவல்லலெல்லாம்
வீழும்படிக்குனதுமௌனமந்த்ராதிக்ய
வித்தையைவியந்தருள்வையோ
நாதவடிவாகியமஹாமந்த்ரரூபியே
நாதாந்தவெட்டவெளியே
நற்சமயமானபயிர்தழைபவருமேகமே
ஞானவானந்தமயிலே
வாதமிடுபரசமயம்யாவுக்குமுணர்வரிய
மகிமைபெறுபெரியபொருளே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (8)

---

## அகிலாண்டநாயகி.

—*—

586 வட்டமிட்டொளிர்பிராணவாயுவெனு
ங்களமோடுகமனஞ்செயு
மனமெனும்பெரியமத்தயானையையென்
வசமடக்கிடின்முமண்டலத்
திட்டமுற்றவளராஜயோகமிவன்
யோகமென்றறிஞர்புகழவே

யேழையேனுலகினீடுவாழ்வனினி
யிங்கிதற்குமனுமானமோ
பட்டவர்த்தனர்பராவுசக்ரதர
பாக்யமானசுபயோகமும்
பாரகாவியகவித்வநான்மறை
பாராயணஞ்செய்மதியூகமு
மட்டசித்தியுநலன்பருக்கருள
விருதுகட்டியபொனன்னமே
யண்டகோடிபுகழ்காவைவாழுமகி
லாண்டநாயகியெனம்மையே. (1)

## பெரியநாயகி.

587 காற்றைப்பிடித்துமட்காகத்தடைத்தபடி
கன்மப்புனற்குளுறுங்
கடைகெட்டநவவாயில்பெற்றபசுமட்கலக்
காயததுளெனையிருத்திச்
சோற்றைச்சுமத்திநீபந்தித்துவைக்கத்
துருத்திக்குண்மதுவென்னவே
துள்ளித்துடித்தென்னபேறுபெற்றேனருட்
டோயநீபாய்ச்சல்செய்து
நாற்றைப்பதித்ததெனஞானமாப்பயிரதனை
நாட்டிப்புலப்பட்டியு
நமனுனதீப்பூடுமனுகாமன்முன்னின்று
நாடுசிவபோகமான
பேற்றைப்பகுத்தருளியெனையாளவல்லையோ
பெரியவகிலாண்டகோடி
பெற்றநாயகிபெரியகபிலைமாநகர்மருவு
பெரியநாயகியம்மையே. (1)

# தந்தைதாய்.



கண்ணி.

583 தந்தைதாய்மகவுமனைவாழ்க்கையாக்கை
சகமனைத்துமௌனியருடன்ழைத்தபோதே
யிந்திரசாலங்கனவுகானனீரா
யிருந்ததுவேயிவ்வியற்கையென்னேயென்னே. (1)

589 என்னைநான்கொடுக்கவொருப்பட்டகால
மியாதிருந்தென்னதுபோயென்னென்னைநீங்கா
வன்னைபோலருள்பொழியுங்கருணைவாரி
யானந்தப்பெருமுகிலேயரசேசொல்லாய். (2)

590 அரசேநின்றிருக்கருணையல்லாதொன்றை
யறியாதசிறியேனுனதனுண்முத்திக்
கரைசேரும்படிக்குனருட்புணைபைக்கூட்டுங்
கைப்பிடியேகடைப்பிடியாக்கருத்துட்கண்டேன். (3)

591 கண்டேனிங்கென்னையுமென்றனையுநீங்காக்
கருணையுநின்றனையுநான்கண்டேன்கண்டேன்
விண்டேனென்றெனைப்புறம்பாத்தள்ளவேண்டா
விண்டதுநின்னருட்களிப்பின்வியப்பாலன்றே. (4)

592 ஓமென்றசுத்தவெளியொன்றேநின்றிங்
குயிரையெல்லாம்வம்மினெனவுவட்டாவின்பத்
தேவென்றநீகலந்துகலந்துமுத்தி
சேர்த்தனையேற்குரைவாமோசெகவிலாசம்.

593 செகத்தையெல்லாமணுவளவுஞ்சிதறுவண்ணஞ் (5)
சேர்த்தணுவில்வைப்பையணுத்திரளையெல்லா
மகத்துவமாப்பிரமாண்டமாகச்செய்யும்
வல்லவாநீநினைந்தவாறேயெல்லாம். (6)

594 சொல்லாலேவாய்துடிப்பதல்லானெஞ்சந்
துடித்திருகணீரருவிசொரியத்தேம்பிக்

* கல்லாலேயிருந்தநெஞ்சுங் கல்லாமுக்கட்
கனியேநெக்குருகிடவுங்காண்பேன்கொல்லோ. (7)

---

## பெற்றவட்கே.



595 பெற்றவட்கேதெரியுமந்தவருத்தம்பிள்ளை
பெறாப்பேதையறிவாளோபேரானந்த
முற்றவர்க்கேகண்ணீர்கம்பலையுண்டாகு
முறாதவரேகன்னெஞ்சமுடையாராவார். (1)

596 ஆவாவென்றழுதுதொழுங்கைபராசி
யப்பனேயானந்தவடிகளேநீ
வாவாவென்றவர்க்கருளுங்கருணையெந்தாய்
வன்னெஞ்சர்க்கிரங்குவதெவ்வாறுநீயே. (2)

597 நீயேயிங்கெளியேற்குந்தாகமோக
நினைவூட்டநின்றுணர்த்திநிகழ்த்தலாலே
பேயேற்குந்தனக்கெனவோரன்புமுண்டோ
பெம்மானேயின்னமன்புபெருகப்பாராய். (3)

598 பாராயோவென்றுயரமெல்லாமையா
பகருமுன்னேதெரியாதோபாவியேன்முன்
வாராயோவின்னமொருகாலானாலு
மலர்க்காலென்சென்னிமிசைவைத்திடாயோ. (4)

599 வைத்திடுங்காலைப்பிடித்துக்கண்ணின்மார்பில்
வைத்தணைத்துக்கொண்டுகையால்வளைத்துக்கட்டிச்
சித்தமிசைப்புகவிருத்திப்பிடித்துக்கொண்டு
தியக்கமறவின்பசுகஞ்சேர்வதென்றோ. (5)

600 சேராமற்சிற்றினத்தைப்பிரித்தெந்நாளுந்
திருவடிப்பேரினத்துடனேசேரவண்ண

மாராகரானலைந்தேனரசேநீதா
னறிந்திருந்துமாயையிலேனழுந்தவைத்தாய். (6)

601 வைத்தபொருளுடலாவிமூன்றுநின்கை
வசனமெனவேபாணிகொடுக்கவாங்கிக்கொண்டு
சித்தமிசைபுகுந்ததுதான்மெய்யோபொய்யோ
சிறியேற்கிங்குளவுரைபாய்திகையாவண்ணம். (7)

602 திகையாதோவெந்நாளும்பேரானந்தத்
தெள்ளமுதமுதவாமற்றிவலைகாட்டி
வகையாகவலக்கழித்தாயுண்டுடுத்து
வாழ்ந்தேனிரண்டுகான்மாடுபோலே. (8)

603 மாடுமக்கள்சிற்றிடையார்செம்பொனுடை
வைத்தகனதனமேடைமாடகூடம்
வீடுமெண்பாற்றொடர்ச்சியோவிடைவிடாமன்
மிக்ககதிவீடன்றோவிளங்கல்வேண்டும். (9)

604 விளங்கவெனக்குள்ளுள்ளேவிளங்காநின்ற
வேதகமேபோதகமேவிமலவாழ்வே
களங்கரகிதப்பொருளேயென்னைநீங்காக்
கண்ணுதலேநாதாந்தக்காட்சிப்பேறே. (10)

605 நாதமேநாதாந்தவெளியேசுத்த
ஞாதுருவேஞாயமேஞேயமேநல்
வேதமேவேதமுடிவானமோன
வித்தையிங்கென்னையினிவிட்டிடாதே. (11)

---

## கல்லாலின்.

606 கல்லாலினீழறனிலொருநால்வர்க்குங்
கடவுணீயுணர்த்துவதுங்கைகாட்டென்றாற்

சொல்லாலேசொலப்படுமோசொல்லுந்தன்மை
துரும்புபற்றிக்கடல்கடக்குந்துணிபேயன்றோ. (1)

607 அன்றோவாமோவெனவுஞ்சமயகோடி
யத்தனையும்வெவ்வேறாயாற்றநேரே
நின்றாபேநினைப்பெறுமாறெவ்வாறாங்கே
நின்னருள்கொண்டறிவதல்லானெறிவேறுண்டோ. (2)

608 நெறியார்க்கினின்னையன்றியகிலம்வேறோ
நிலநீர்தீக்கால்வானுமேலாத
குறியாதுமில்லையென்றாலியாங்கள்வேறோ
கோதையொருகூறுடையாய்கூறாய்கூறாய். (3)

609 கூறாயவைம்பூதச்சுமையைத்தாங்கிக்
குணமிலாமனமெனும்பேய்க்குரங்கின்பின்னேன்
மாறாதகவலையுடன்சுழலவென்னை
வைத்தனையேபரமேநின்மகிமைநன்றே. (4)

610 நன்றெனவுந்தீதெனவுமெனக்கிங்குண்டோ
நானாகிநீயிருந்தநியாயஞ்சற்றே
யின்றெனக்குவெளியானாலெல்லாம்வல்ல
விறைவாநின்னடியருடனிருந்துவாழ்வேன். (5)

611 வாழ்வெனவுந்தாழ்வெனவுமிரண்டாப்பேசும்
வையகத்தார்கற்பனையாமயக்கமான
பாழ்வலையைக்கிழித்துதறிச்செயல்போய்வாழப்
பரமேநின்னானந்தப்பார்வையெங்கே. (6)

612 எங்கேயெங்கேபருளென்றெமையிரந்தா
னேழையிவனெனவுமெண்ணியிச்சைகூரு
மங்கேயங்கேயெளிவந்தென்னையாண்ட
வாரமுதேயுனைக்காண்பானலந்துபோனேன். (7)

613 போனநாட்கிரங்குவதேதொழிலாயிங்ஙன் (7)
பொருந்துநாளத்தனையும்போக்கினேனென்
ஞானநாயகனேநின்மோனஞான
நாட்டமுற்றுவாழ்ந்திருக்குநாளெந்நாளோ. (8)

614 நாட்பட்டகமலமென்னவிதயமேவு
நறுந்தேனே துன்மார்க்கநாரிமார்கண்
வாட்பட்டகாயுமிந்தக்காயமென்றே
வன்கூற்றுமுயிர்பிடிக்கவருமுந்நீதி. (9)

615 நீதியெங்கேமறையெங்கேமண்விண்ணெங்கே
நித்தியராமவர்களெங்கேநெறிதப்பாத
சாதியெங்கேயொழுக்கமெங்கேயாங்களெங்கே
தற்பரநீயின்னுமொன்றைச்சமைப்பதானால். (10)

616 ஆனாலும்யானெனதிங்கற்றவெல்லை
யதுபோதுமதுகதிதானல்லவென்று
போனாலும்யான்போவனல்லான்மோனப்
புண்ணியனேவேறுமொருபொருளைநாடேன். (11)

617 பொருளேநின்பூரணமேலிட்டகாலம்
போக்குவரவுண்டோதற்போதமுண்டோ
விருடானுண்டோவல்லால்வெளிதானுண்டோ
வின்பமுண்டோதுன்பமுண்டோயாமங்குண்டோ. ()

618 உண்டோநீபடைத்தவுயிர்த்திரளிலென்போ
லொருபாவிதேகாதியுலகம்பொய்யாக்
கண்டேயுமெள்ளளவுத்துறவுமின்றிக்
காசினிக்குளலைந்தவரார்காட்டாய்தேவே. (13)

619 தேவரெல்லாந்தொழச்சிவந்தசெந்தாண்முக்கட்
செங்கரும்பேமொழிக்குமொழிதித்திப்பாக

மூவர்சொலுந்தமிழ்கேட்குந்திருச்செவிக்கே
மூடனேன்புலம்பியசொன்முற்றுமோதான். (14)

620 முற்றுமோவெனக்கினியானந்தவாழ்வு
முதறிவுக்கினியாய்நின்முளரித்தாளிற்
பற்றுமோசற்றுமில்லையையோவையோ
பாவிபடுங்கலக்கம்பார்த்திலாயோ. (15)

621 பார்த்தனவெல்லாமழியுமதனாற்சுட்டிப்
பாராதேபார்த்திருக்கப்பாரேமௌன
மூர்த்திவடிவாயுணர்த்துங்கைக்காட்டுண்மை
முற்றியெனதல்லல்வினைமுடிவதென்றோ. (16)

622 என்றனைநீயென்னுளாய்யாமென்பதென்னை
யிதுநிற்கவெல்லாந்தானில்லையென்றே
பொன்றிடச்செய்வல்லவனீயெமைப்படைக்கும்
பொற்புடையானென்னினதுபொருந்திடாதே. (17)

623 பொருந்துசகமனைத்தினையும்பொய்பொய்யென்று
புகன்றபடிமெய்யென்றேபோதரூபத்
திருந்தபடியென்றிருப்பதன்றேயன்றோ
வெம்பெருமான்யான்கவலையெய்தாக்காலம். (18)

624 காலமேகாலமொருமூன்றுங்காட்டுங்
காரணமேகாரணகாரியங்களில்லாக்
கோலமேயெனைவாவாவென்றுகூவிக்
குறைவறநின்னருள்கொடுத்தாற்குறைவோசொல்லாய் ()

625 சொல்லாயதொகுதியெல்லாங்கடந்துநின்ற
சொரூபானந்தச்சுடரேதொண்டனேனைக்
கல்லாகப்படைத்தாலுமெத்தனன்றே
கரணமுடனுறவுகலக்கமாட்டேன். (20)

626 கலங்காதநெஞ்சுடையஞானதீரர்
கடவுளுனைக்காணவேகாயமாதி
புலன்காணார்நானொருவன்ஞானம்பேசிப்
பொய்க்கூடுகாத்ததென்னபுதுமைகண்டாய். (21)

627 கண்டிலையோயான்படும்பாடெல்லாமூன்று
கண்ணிருந்துந்தெரியாதோகசிந்துள்ளன்பர்
தொண்டரடித்தொண்டனன்றோகருணைநீங்காச்
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. (22)

628 சோதியாயிருட்பிழம்பைச்சூறையாடுந்
தூவெளியேயெனைத்தொடர்ந்துதொடர்ந்தெந்நாளும்
வாதியாநின்றவினைப்பகையைவென்ற
வாழ்வேயிங்குனைப்பிரிந்துமயங்குகின்றேன். (23)

629 மயக்குறுமென்மனமணுகாப்பாதைகாட்டி
வல்வினையைப்பறித்தனையேவாழ்வேநானென்
செயக்கடவேன்செயலெல்லாநினதேயென்று
செங்கைகுவிப்பேனல்லாற்செயல்வேறில்லை. (24)

630 வேறுபடுஞ்சமயமெல்லாம்புகுந்துபார்க்கின்
விளங்குபரம்பொருளேநின்விளையாட்டல்லால்
மாறுபடுங்கருத்தில்லைமுடிவின்மோன
வாரிதியினதிதிரள்போல்வயங்கிற்றம்மா. (25)

631 அம்மாவீததிசயந்தானன்றோவன்றோ
வகண்டநிலையாக்கியென்னையறிவாம்வண்ணஞ்
சும்மாவேயிருக்கவைத்தாயையாவாங்கே
சுகமயமாயிருப்பதல்லாற்சொல்வானென்னே. (26)

632 என்னேநான்பிறந்துழலவந்தவாறிங்
கெனக்கெனவோர்செயலிலையேயேழையென்பான்

முன்னேசெய்வினையெனவும்பின்னேவந்து
மூளும்வினையெனவும்வராமுறையேயெந்தாய். (27)

633 தாயானதண்ணருளைநிரம்பவைத்துத்
தமியேனைப்புரவாமற்றள்ளித்தள்ளிப்
பேயானதென்கொலோபாவேகதேசம்
பூரணத்துக்குண்டோதான் புகலல்வேண்டும். (28)

634 புகலரியநின்விளையாட்டென்னையெந்தாய்
புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி
யிகல்வினைக்குமலமாயைகன்மத்தோடே
யிடருறவுஞ்செய்தனையேயிரக்கமீதோ. (29)

635 இரக்கமொடுபொறையீதலறிவாசார
மில்லேனல்லோர்களிட்டங்கண்டாற்
கரக்குமியல்புடையேன்பாழ்நெஞ்சமெந்தாய்
கருந்தாதோவல்லுருக்கோகரியகல்லோ. (30)

## பராபரக்கண்ணி.



636 சீராருந்தெய்வத்திருவருளாம்பூமிமுதற்
பாராதியாண்டபதியேபராபரமே. 1

637 கண்ணாரக்கண்டோர்கருப்பொருள்காணுமலருள்
விண்ணூடிருந்தவின்பவெற்பேபராபரமே. 2

638 சிந்தித்தவெல்லாமென்சிந்தையறிந்தேயுதவ
வந்தகருணைமழையேபராபரமே. 3

639 ஆராவமுதேயரசேயானந்தவெள்ளப்
பேராறேமோனப்பெருக்கேபராபரமே. 4

640 ஆரறிவாரென்னவனந்தமறையோலமிடும்
பேரறிவேயின்பப்பெருக்கேபராபரமே. 5

641 உரையிறந்தவன்பருளைத்தோங்கொளியாயோங்கிக்
கரையிறந்தவின்பக்கடலேபராபரமே. 6

642 எத்திக்குந்தானாகியென்னிதயந்தேயூறித்
தித்திக்குமானந்தத்தேனேபராபரமே. 7

643 திக்கொடுகீழ்மேலுந்திருவருளாம்பொற்பறிந்தோர்
கைக்குள்வளர்நெல்லிக்கனியேபராபரமே. 8

644 பூத்தபவளமேமொய்த்தபசும்பொற்சுடரே
சித்தேயென்னுள்ளத்தெளிவேபராபரமே. 9

645 கண்ணேகருத்தேயென்கற்பகமேகண்ணிறைந்த
விண்ணேயானந்தவியப்பேபராபரமே. 10

646 வாக்காய்மனதாய்மனவாக்கிறந்தவர்பாற்
ருக்காதேதாக்குந்தனியேபராபரமே. 11

647 பார்த்தவிடமெல்லாம்பரவெளியாய்த்தோன்றவொரு
வார்த்தைசொல்லவந்தமனுவேபராபரமே. 12

648 வானந்தமண்ணினந்தம்வைத்துவைத்துப்பார்க்கவெனக்
கானந்தந்தந்தவரசேபராபரமே. 13

649 அன்பைப்பெருக்கியெனதாருயிரைக்காக்கவந்த
வின்பப்பெருக்கேயிறையேபராபரமே. 14

650 வானமெல்லாங்கொண்டமவுனமணிப்பெட்டகத்துக்
கானபணியானவணியேபராபரமே. 15

651 ஓடுமிருநிதியுமொன்றாகக்கண்டவர்க
ணுடும்பொருளானநட்பேபராபரமே. 16

652 சித்தநினைவுஞ்செயுஞ்செயலுநீயெனவா
ழுத்தமர்கட்கானவுறவேபராபரமே. 17

653 போதாந்தப்புண்ணியர்கள்போற்றிசயபோற்றியெனும்
வேதாந்தவீட்டில்விளக்கேபராபரமே. 18

654 முத்தாந்தவீதிமுளரிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந்தேவேபராபரமே. 19

655 ஈனந்தருமுடலமென்னதியானென்பதற
வானந்தம்வேண்டியலந்தேன்பராபரமே. 20

656 என்புருகிநெஞ்சமிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்கவலந்தேன்பராபரமே 21

657 சுத்தவறிவாய்ச்சுகம்பொருந்தினல்லாலென்
சித்தந்தெளியாதென்செய்வேன்பராபரமே. 22

658 மாறுவநுபூதிவாய்க்கினல்லாலென்மயக்கந்
தேறுதென்செய்வேன்சிவமேபராபரமே. 23

659 தாகமறிந்தின்பநிட்டைதாராயேலாகெடுவேன்
மோகம்விழுந்திடினென்செய்வேன்பராபரமே. 24

660 அப்பாவென்னெய்ப்பில்வைப்பேயாற்றுகிலேன்போற்றியெ
ன்று, செப்புவதல்லால்வேறென்செய்வேன்பராபரமே

661 உற்றறியுமென்னறிவுமுட்கருவிபோற்சவிமாண்
டற்றுமின்பந்தந்திலையேயையாபராபரமே. 26

662 சொல்லாலடங்காச்சுகக்கடலில்வாய்மடுக்கி
னல்லாலென்றாகமறுமோபராபரமே. 27

663 பாராயோவென்னைமுகம்பார்த்தொருகாலென்கவலை
தீராயோவாய்திறந்துசெப்பாய்பராபரமே. 28

664 ஓயாதோவென்கவலையுள்ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையாபகராய்பராபரமே. 29

665 ஓகோவுனைப்பிரிந்தாருள்ளங்கனலில்வைத்த
பாகோமெழுகோபகராய்பராபரமே. 30

666 கூர்த்தவறிவத்தனையுங்கொள்ளைகொடுத்துன்னருளைப்
பார்த்தவனுமென்னைமுகம்பாராய்பராபரமே. 31

667 கடலமுதேதேனேயென்கண்ணேகவலைப்
படமுடியாதென்னை முகம்பார்பராபரமே. 32

668 உள்ளமறிவாயுழப்பறிவாய்நானேழை
தள்ளிவிடின்மெத்தத்தவிப்பேன்பராபரமே. 33

669 கன்றினுக்குச்சேதாகனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணையெந்தாய்பராபரமே. 34

670 எண்ணாதவெண்ணமெலாமெண்ணியெண்ணியேழைநெஞ்சம்
புண்ணாகச்செய்ததினிப்போதும்பராபரமே. 35

671 ஆழித்துரும்பெனவேயங்குமிங்குமுன்னடிமை
பாழிற்றிரிவதென்னபாவம்பராபரமே. 36

672 கற்றவறிவாலுனைநான்கண்டவன்போற்கூத்தாடிற்
குற்றமென்றென்னெஞ்சேகொதிக்கும்பராபரமே. 37

673 ஐயோவுனைக்காண்பானாசைகொண்டதத்தனையும்
பொய்யோவெளியாய்ப்புகலாய்பராபரமே. 38

674 அன்பக்கண்ணீரிற்றுளைந்தேற்குன்னானந்த
வின்பக்கண்ணீர்வருவதெந்நாள்பராபரமே 89

675 வஞ்சனையும்பொய்யுமுள்ளேவைத்தழுக்காறுயுளறு
நெஞ்சனுக்குமுண்டோநெறிதான்பராபரமே. 40

676 பாசம்போய்நின்றவர்போற்பாராட்டியானு
மோசம்போனேனுன்முறையோபராபரமே. 41

677 நன்றறியேன்றீதறியேனென்றுநின்றவனு
ரென்றறியேனேழையென்னேபராபரமே. 42

678 இன்றுபுதிதன்றேயெளியேன்படுந்துயர
மொன்றுமறியாயோவுரையாய்பராபரமே. 43

679 எத்தனைதான்கண்டுமெடுத்தெத்தனைநான்பட்டதுய
ரத்தனையுமேயறிந்ததன்றோபராபரமே. 44

680 இந்தநாட்சற்றுமிரங்கிலையேற்காலன்வரு
மந்தநாட்காக்கவல்லாரார்காண்பராபரமே. 45

681 உற்றுற்றுநாடியுளமருண்டபாவியைநீ
சற்றிரங்கியாளத்தகாதோபராபரமே. 46

682 எள்ளளவுநின்னைவிடவில்லையென்னைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன்சாற்றுபராபரமே. 47

683 பாடிப்படித்துலகிற்பாராட்டிநிற்பதற்கோ
தேடியென்னையடிமைசேர்த்தாய்பராபரமே. 48

684 சொன்னத்தைச்சொல்வதல்லாற்சொல்லறவென்சொல்விறு
திக், கென்னத்தைச்சொல்வேனெளியேன்பராபரமே. ()

685 சொல்லும்பொருளுமற்றுச்சும்மாவிருப்பதற்கே
யல்லும்பகலுமெனக்காசைபராபரமே. 50

686 நேசநிருவிகற்பநிட்டையல்லாலுன்னடிமைக்
காசையுண்டோநீயறியாதன்றேபராபரமே. 51

687 துச்சனெனவேண்டாமித்தொல்லுலகிலல்லல்கண்டா
லச்சமிகவுடையேனையாபராபரமே. 52

688 கண்ணாவாரேனுமுனைக்கைகுவியாராயினந்த
மண்ணாவார்நட்பைமதியேன்பராபரமே. 53

689 கொல்லாவிரதங்குவலயமெல்லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென்னிச்சைபராபரமே. 54

690 ஏத்தாற்பிழைப்பேனோவெந்தையேநின்னருட்கே
பித்தானேன்மெத்தவுநான்பேதைபராபரமே. 55

691 வாயினாற்பேசாமவுனத்தைவைத்திருந்துந்
தாயிலார்போனான்றளர்ந்தேன்பராபரமே. 56

692 அன்னையிலாச்சேய்போலலக்கணுற்றேன்கண்ணா
வென்னகத்திற்றாய்போலிருக்கும்பராபரமே. 57

693 உற்றுநினைக்கிற்றுயரமுள்ளுருள்ளேசெந்தீயாய்ப்
பற்றநொந்தேனென்னைமுகம்பார்பராபரமே. (58)

694 பொய்யனிவனென்றுமெள்ளப்போதிப்பார்சொற்கேட்டு
கைவிடவும்வேண்டாமென்கண்ணேபராபரமே. (59)

695 எண்ணமறிந்தேயிளைப்பறிந்தேயேழையுய்யும்
வண்ணந்திருக்கருணைவையாய்பராபரமே. (60)

696 நாட்டாதேயென்னையொன்றினாட்டியிதமகிதங்
காட்டாதேயெல்லாநீகண்டாய்பராபரமே. (61)

697 உன்னைநினைந்துன்னிறைவினுள்ளேயுலாவுமென்னை
யன்னைவயிற்றின்னடைக்காதேபராபரமே. (62)

698 பாருனக்கென்றெண்ணும்பழக்கமேமாறா
வரமெனக்குத்தந்தருளென்வாழ்வேபராபரமே. (63)

699 வந்தித்துநின்னைமறவாக்கடனாகச்
சிந்திக்கநின்னருள்செய்யாய்பராமே. (64)

700 எவ்வுயிருமென்னுயிர்போலெண்ணியிரங்கவுநின்
றெய்வருட்கருணைசெய்யாய்பராபரமே. (65)

701 வெட்டவெளிப்பேதையன்யான்வேறுகபடொன்றறியேன்
சிட்டருடன்சேரனந்ததெண்டன்பராபரமே. (66)

702 இரவுபகலற்றவிடத்தேகாந்தயோகம்.
வரவுந்திருக்கருணைவையாய்பராபரமே (67)

703 மால்காட்டிசிந்தைமயங்காமனின்றுசுகக்
கால்காட்டிவாங்காதேகண்டாய்பராபரமே. (68)

704 எப்பொருளுநீயெனவேயெண்ணிநான்றானாத
வைப்பையழியாநிலையாவையாய்பராபரமே. (69)

705 சும்மாவிருப்பதுவேசுட்டற்றபூரணமென்
றெம்மாலறிதற்கெளிதோபராபரமே. (70)

706 முன்னோடுபின்பக்கமுடியடிநாப்பண்ணுறநின்
றன்னொடுநானிற்பதென்றோசாற்றாய்பராபரமே. (71)

707 மைவண்ணந்தீர்ந்தமவுனிசொன்னதெவ்வண்ண
மவ்வண்ணநிட்டையருளாய்பராபரமே. (72)

708 வித்தன்றியாதும்விளைவதுண்டோநின்னருளாஞ்
சித்தன்றியாங்களுண்டோசெப்பாய்பராபரமே. (73)

709 ஆங்காரமற்றுன்னறிவானவன்பருக்கே
தூங்காதூக்கமதுதூக்கும்பராபரமே. (74)

710 சிந்தையவிழ்ந்தவிழ்ந்துசின்மயமாநின்னடிக்கே
வந்தவர்க்கேயின்பநிலைவாய்க்கும்பராபரமே. (75)

711 சொல்லாடாவூமைப்போற்சொல்லிறந்துநீயாகி
னல்லாலெனக்குமுத்தியாமோபராபரமே. (76)

712 பேச்சாகாமோனம்பிறவாமுளைத்ததென்றற்
காய்ச்சாச்சுமேற்பயனுண்டாமோபராபரமே. (77)

713 கெட்டியென்றுன்னன்பர்மலங்கெட்டயர்ந்தோர்பூரணமாந்
தொட்டிலுக்குட்சேயபோற்றுயின்றார்பராபரமே. (78)

714 காட்டவருளிருக்கக்காணாதிருண்மலத்து
நாட்டமெனக்குவரனன்றோபராபரமே. (79)

715 எத்தன்மைக்குற்றமிபற்றிடினுந்தாய்பொறுக்கு
மத்தன்மைநின்னருளுமன்றோபராபரமே. (80)

716 எத்தனையோதேர்ந்தாலுமென்னாலேயின்பமுண்டோ
சித்துருவேயின்பச்சிவமேபராபரமே. (81)

717 மண்ணொடுவிண்காட்டிமறைந்துமறையாவருளைக்
கண்ணொடுகண்ணாகவென்றுகாண்பேன்பராபரமே. (82)

718 பஞ்சரித்துநின்னைப்பலகாலிரந்ததெல்லா
மஞ்சலெனும்பொருட்டேயன்றோபராபரமே. (83)

719 எங்கெங்கேபார்த்தாலுமெவ்வுயிர்க்குமவ்வுயிரா
யங்கங்கிருப்பதுநீயன்றோபராபரமே. (84)

720 அனைத்துமாய்நின்றாயேயான்வேறுநின்னை
நினைக்குமாறெங்கேநிகழ்த்தாய்பராபரமே. (85)

721 நின்போதத்தாலேநினைப்புமறப்புமென்று
லென்போதமெங்கேயியம்பாய்பராபரமே. (86)

722 ஒன்றைநினைந்தொன்றைமறந்தோமெனமெல்லாநீ
யென்றறிந்தாலெங்கேயியங்கும்பராபரமே. (87)

723 கொழுந்தில்வயிரமெனக்கோதறவுள்ளன்பி
லழுந்துமவர்க்கேசுகமுண்டாகும்பராபரமே. (88)

724 பற்றுப்பயிர்க்குப்படர்கொழுந்துபோற்பருவம்
பெற்றவர்க்கேநின்னருடான்பேராம்பராபரமே. (89)

725 யோகியர்க்கேஞானமொழுங்காம்போன்பான
தாகியரும்யோகமுன்னேசார்ந்தோர்பராபரமே. (90)

726 அல்லும்பகலுமறிவாகிநின்றவர்க்கே
சொல்லும்பொருளுஞ்சுமைகாண்பராபரமே. (91)

727 எச்சிலென்றுபூவையிகழ்ந்தோர்க்குனைப்போற்றப்
பச்சிலையுங்கிள்ளப்படுமோபராபரமே. (92)

728 அந்தக்கரணமடங்கத்துறப்பதுவே
யெந்தத்துறவினுநன்றென்றாய்பராபரமே. (93)

729 தன்னையறிந்தாற்றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோபேசாய்பராபரமே. (94)

730 அன்பாற்கரைந்துகண்ணீராறுகண்டபுண்ணியருக்
குன்பால்வரவழிதானுண்டோபராபரமே. (95)

731 தன்னையறிந்தருளேதாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற்குபாயம்பராபரமே. (96)

732 கற்றகலையானிலைதான்காணுமோகாண்பதெல்லா
மற்றவிடத்தேவெளியாமன்றோபராபரமே. (97)

733 கண்மூடிக்கண்விழித்துக்காண்பதுண்டோநின்னருளாம்
விண்மூடினெல்லாம்வெளியாம்பராபரமே. (98)

734 நேரேநினதருளென்னெஞ்சைக்கவரின்றும்
பாரேன்சுகமும்படைப்பேன்பராபரமே. (99)

735 வான்காணவேண்டின்மலையேறலொக்குமுன்னை
நான்காணப்பாவனைசெய்நாட்டம்பராபரமே. (100)

736 வாதனைவிட்டுன்னருளின்மன்னிலல்லால்வேறுமொரு
சாதனைதானுண்டோநீசாற்றாய்பராபரமே. (101)

737 பாரகமும்விண்ணகமும்பற்றாகநிற்பதருட்
டாரகத்தைப்பற்றியன்றோசாற்றாய்பராபரமே. (102)

738 விளக்குந்தகளியையும்வேறென்றார்நின்னைத்
துளக்கமறச்சீவனென்றுசொல்வார்பராபரமே. (103)

739 பாராதிநீயாப்பகர்ந்தாலகமெனவு
மாராயுஞ்சீவனுநீயாங்காண்பராபரமே. (104)

740 பொய்யைப்பொய்யென்றறியும்போதத்துக்காதாரவுன்
மெய்யருளேயன்றோவிளம்பாய்பராபரமே. (105)

741 வருவான்வந்தேனெனல்போன்மன்னியழியுஞ்சகத்தைத்
தெரிவாகவில்லையென்றதீரமபராபரமே. (106)

742 மாயாசகமிலையேயன்மற்றெனக்கோர்பற்றுமிலை
நீயேநானென்றுவந்துநிற்பேன்பராபரமே. (107)

743 வானாதிநீயெனவேவத்தமறையென்னையுநீ
தானாகச்சொல்லாதோசாற்றாய்பராபரமே. (108)

744 வெள்ளக்கருணைமதவேழமாநின்னருட்கென்
கள்ளக்கருத்தேகவளம்பராபரமே. (109)

745 வண்டாய்த்துவண்டுமெய்வுணமலரணைமேற்
கொண்டார்க்கோவின்பங்கொடுப்பாய்பராபரமே. (110)

746 மாயைமுதலாம்வினைநீமன்னுயிர்நீமன்னுயிர்சேர்த்
தாயுமறிவானதுநீயன்றோபராபரமே. (111)

747 என்னறிவும்யானுமெனதென்பதுமாயினைக
ணின்னவையேயன்றோநிகழ்த்தாய்பராபரமே. (112)

748 பாரறியாதண்டப்பரப்பறியாதுன்பெருமை
யாரறிவார்நானோவறிவேன்பராபரமே. (113)

749 அண்டமனைத்திலுமாயப்பாலுக்கப்பாலுங்
கொண்டநின்னையாரறிந்துகொள்வார்பராபரமே. (114)

750 ஒப்புயர்வொன்றின்றியொளிபுகாமோனவட்டக்
கப்பலுக்காம்வான்பொருணீகண்டாய்பராபரமே. (115)

751 என்போலெளியவருமெங்கெங்கும்பார்த்தாலு
முன்போல்வலியவருமுண்டோபராபரமே. (116)

752 பார்க்கினணுபிண்டப்பரப்பனைத்துநின்செயலே
யார்க்குஞ்செயலிலையேயையாபராபரமே. (117)

753 ஒன்றேபலவேயுருவேயருவேயோ
வென்றேயழைப்பதுன்னையென்றோபராபரமே (118)

754 செப்புவதெல்லாஞ்செபநான்சிந்திப்பதெல்லாநின்
னொப்பிறியானமெனவோர்ந்தேன்பராபரமே. (119)

755 ஆரிருந்தென்னார்போயென்னாருமுதாநின்னருளின்
சீரிருந்தாலுய்வேன்சிவமேபராபரமே. (120

756 வஞ்சநமன்வாதனைக்கும்வன்பிறவிவேதனைக்கு
மஞ்சியுனையடைந்தேனையாபராபரமே. (121)

757 எந்தப்படியுன்னிதயமிருந்ததெமக்
கந்தப்படிவருவதன்றோபராபரமே. (122

758 எந்தெந்தநாளுமெனைப்பிரியாதென்னுயிராய்ச்
சிந்தைகுடிகொண்டவருட்டேவேபராபரமே. (123)

759 அஞ்சலஞ்சலென்றடிமைக்கப்போதைக்கப்போதே
நெஞ்சிலுணர்த்துநிறைவேபராபரமே. (124)

760 என்னையுன்றன்கைக்களித்தார்யாவரன்னையான்கொடுத்துப்
பின்னையுன்றற்பெற்றநலம்பேசேன்பராபரமே. (125)

761 வாய்பேசாவூமையெனவைக்கவென்றோ மௌனத்
தாயாகவந்தருளைத்தந்தாய்பராபரமே. (126)

762 தன்னைத்தந்தென்னைத்தடுத்தாண்டநின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபலனென்றாய்பராபரமே. (127)

763 மார்க்கண்டர்க்காகமறலிபட்டபாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க்கென்னபயங்காண்பராபரமே. (128)

764 சுட்டியுணராமற்றுரியநியாய்வெளியில்
விட்டநின்னையாரேவியப்பேன்பராபரமே. (129)

765 சூதொன்றுமின்றியென்னைச்சும்மாவிருக்கவைத்தா
யீதொன்றும்போதாதோவின்பம்பராபரமே. (130)

766 வாயொன்றும்பேசாமவுனியாய்வந்தாண்ட
தேயொன்றும்போதாதோவின்பம்பராபரமே. (131)

767 என்றுமிருந்தபடிக்கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோவுரையாய்பராபரமே. (132)

768 எண்டிசைக்கீழ்மேலானவெல்லாம்பெருவெளியாக்
கண்டவிடத்தென்னையுநான்கண்டேன்பராபரமே. (133)

769 பித்தனையேதுமறியாப்பேதையனையாண்டவுனக்
கெத்தனைதான்றெண்டனிடுவேன்பராபரமே (134)

770 தாயர்கர்ப்பத்தூடனமுந்தண்ணீருந்தந்தருளு
நேயவுனையாரேநினையார்பராபரமே. (135)

7,71 விரிந்தமனமொடுங்கும்வேளையினுனாகப்
பரந்தவருள்வாழிபதியேபராபரமே. (136)

772. சிந்தனைபோய்நானெனல்போய்த்துக்கவின்பமாமழையை
வந்துபொழிந்தனையேவாழிபராபரமே. (137)

773 தந்தேதனையோர்வசனந்தந்தபடிக்கின்பமுமாய்
வந்தேதனையென்றனையேவாழிபராபரமே. (138)

774 மண்ணும்விண்ணும்வந்துவணங்காவோநின்னருளைக்
கண்ணுறவுட்கண்டவரைக்கண்டாற்பராபரமே. (139)

775 என்றுக்கருணைபெற்றவின்பத்தபோதனர்சொல்
சென்றசென்றதிக்கனைத்துஞ்செல்லும்பராபரமே (140)

776 ஆடுவதும்பாடுவதுமானந்தமாகநின்னைத்
தேடுவதுநின்னடியார்செய்கைபராபரமே. (141)

777 பொங்கியநின்றண்ணருளைப்புட்கலமாப்பெற்றவர்கட்
கெங்கெழுந்தென்ஞாயிறியம்பாய்பராபரமே. (142)

778 பாலரொடுபேயர்பித்தர்பான்மையெனநிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ்செய்கைபராபரமே. (143)

779 உண்டுடுத்துப்பூண்டிங்குலகத்தார்போற்றிரியுந்
தொண்டர்விளையாட்டேசுகங்கண்பராபரமே. (144)

80 கங்குல்பகலற்றதிருக்காட்சியர்கள்கண்டவழி
யெங்குமொருவழியேயெந்தாய்பராபரமே. (145)

781 காயநிலையல்லவென்றுகாண்பாருறங்குவரோ
தூயவருட்பற்றுத்தொடர்வார்பராபரமே. (146)

782 அப்புமுப்பும்போன்றவயிக்யபரானந்தர்தமக்
கொப்புவமைசெல்லவும்வாயுண்டோபராபரமே. (147)

783 சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்குங்
கொத்தடிமையானகுடிநான்பராபரமே. (148)

784 தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே. (149)

785 விண்ணுக்கும் விண்ணாகி மேவு முனக்கோர்பூசை
பண்ணிநிற்கு மாறுபகராய்பராபரமே. (150)

786 நெஞ்சகமே கோயினினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய்பராபரமே. (151)

787 கெட்டவழியாணவப்பேய்கீழாகமேலான
சிட்டருனைப்பூசைசெய்வார்பராபரமே. (152)

788 கால்பிடித்துமூலக்கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிற்றேகம்விழுமோபராபரமே. (153)

789 பஞ்சசுத்திசெய்துநின்னைப்பாவித்துப்பூசைசெய்தால்
விஞ்சியஞானம்விளங்கும்பராபரமே. (154)

790 அன்பர்பணிசெய்யவென்னையாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந்தெய்தும்பராபரமே. (155)

791 மூர்த்திதலந்தீர்த்தமுறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலசற்குருவும்வாய்க்கும்பராபரமே. (156)

792 விரும்புஞ்சரியைமுதன்மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோலன்றோபராபரமே. (157)

793 தானந்தவந்தருமஞ்சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணைநல்லோர்பராபரமே. (158)

794 சொன்னத்தைச்சொல்லித்துடிக்கின்றவாணவப்பேய்க்
கின்னல்வருவதெந்நாளெந்தாய்பராபரமே. (159)

795 இன்றோவிருவினைவந்தேறியதுகாலமென்றோ
வன்றேநினைந்ததன்றோவாற்றேன்பராபரமே. (160)

796 எண்ணமுந்தானின்னைவிடவில்லையென்றால்யான்முனமே
பண்ணவினையேதுபகராய்பராபரமே. (161)

901 கன்னங்கரியசிறக்கிருமாயிராகநசைப்பேய்க்
கென்னையிலக்காக்கவைத்ததென்னேபராபரமே. (266)

902 சித்திநெறிகேட்டல்செகமயக்கஞ்சென்மமற
முத்திநெறிகேட்டன்முறைகாண்பராபரமே. (267)

903 சிந்தைசிதையச்சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந்தெய்தும்பராபரமே. (268)

904 கூர்த்தவறிவாலறியக்கூடாதெனக்குரவன்
நேர்த்தபடிதானேயிருந்தேன்பராபரமே. (269)

905 பத்தருந்தும்பரமசுகம்யானருந்த
வெத்தனைநாள்செல்லுமியம்பாய்பராபரமே. (270)

906 தீரத்திறற்றுறவுசேராமலிவ்வுலகிற்
பாரத்தனம்பேசல்பண்போபராபரமே. (271)

907 இந்தவெளியினையுண்டேப்பமிடப்போறிவாத்
தந்தவெளிக்கேவெளியாய்ச்சார்ந்தேன்பராபரமே. ()

908 உணர்த்துமுனைநாடாதுணர்ந்தவையேநாடி
யிணக்குறுமென்னேழைமைதானென்னேபராபரமே. ()

909 உண்டுபோலின்றுமுலகைத்திரமெனவுட்
கொண்டோன்பெற்றபலனைகூறுப்பராபரமே. (274)

910 உள்ளபடியாதுமெனவுற்றுணர்ந்தேனக்கணமே
கள்ளமனம்போனவழிகாணேன்பராபரமே. (275)

911 சித்தமவுனஞ்செயல்வாக்கெலாமவுனஞ்
சுத்தமவுனமென்யாற்றோன்றிற்பராபரமே. (276)

912 எண்ணில்பலகோடியுயிரெத்தனையோவத்தனைக்குங்
கண்ணிற்கலந்தவருட்கண்ணேபராபரமே. (277)

913 எனக்கினியாரும்போலுமில்லையென்றால்யானு
முனக்கினியனாகவுளேனோபராபரமே. (278)

914 அண்டபிண்டங்காணேனகப்புறமுமொன்றாக்
கண்டவென்னைநீகலந்தகாலம்பராபரமே. (279)

915 எத்தனையோகோடியெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ்
சித்தமிரங்கிலையென்செய்வேன்பராபரமே (280)

916 அன்றந்தநால்வருக்குமற்புதமாநீயுரைத்த
தொன்றந்தவார்த்தையெனக்குண்டோபராபரமே. ()

917 அப்பனென்றுமன்னையென்றுமாரியனென்றும்மையே
செப்புவதுமுன்னிலையின்சீர்காண்பராபரமே (282)

918 கட்டுங்கனமுயர்ந்தக்காலர்வரும்போதெதிர்த்து
வெட்டுந்தளமோவிளம்பாய்பராபரமே. (283)

919 பேசாதமோனநிலைபெற்றன்றோநின்னருளாம்
வாசாமகோசரந்தான்வாய்க்கும்பராபரமே. (284)

920 கற்றாலுங்கேட்டாலுங்காயமழியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோபேசாய்பராபரமே. (285)

921 கண்டவடிவெல்லாங்கரைக்கின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளேயன்றோபராபரமே. (286)

922 தன்செயலாலொன்றுமிலைதானென்றான்பாவி
நின்செயலாய்நில்லாநிலையேன்பராபரமே. (287)

923 கொலைகளவுகட்காமங்கோபம்விட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடான்வாய்க்கும்பராபரமே. (288)

924 தன்னையறியாதுசகந்தானுயிருந்துவிட்டா
லுன்னையறியவருளுண்டோபராபரமே. (289)

925 ஒன்றிரண்டென்றுன்னுணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமென்னைவையாயிறைவேபராபரமே. (290)

926 கருதுமடியார்களுளங்காணவெளியாகுந்
துரியநிறைவானசுகமேபராபரமே. (291)

927 பொய்குவித்தநெஞ்சினருட்பொற்பறிகது நிக்கனைத்துங்
கைகுவித்துநிற்பதெந்தக்காலம்பராபரமே. (292)

928 அத்துவிதமானவயிக்யவனுபவமே
சுத்தநிலைபந்நிலையார்சொல்வார்பராபரமே. (293)

929 வைத்தசுவரலம்பின்மண்போமோமாயையினோர்க்
கெத்தனைபோதித்துமென்னோமெந்தாய்பராபரமே. ()

930 பூட்டற்றுத்தேகமற்றுப்போகுமுன்னேநின்னருளைக்
காட்டத்தகாதோவென்கண்ணேபராபரமே. (295)

931 சொல்லிற்பதர்களெந்துசொன்முடிவுகாணாதார்
நெல்லிற்பதர்போலநிற்பார்பராபரமே. (296)

932 அழுக்காற்றுநெஞ்சமழுங்கியபுன்மாக்க
ளிழுக்காற்றலின்பநலமெய்தார்பராபரமே. (297)

933 தேகாதிபொய்யெனவேதேர்ந்தவுபசாந்தருக்கு
மோகாதியுண்டோமொழியாய்பராபரமே. (298)

934 சாதனையெல்லாமவிழ்த்தற்போதங்காட்டாதோர்
போதனைநீகல்துவதெப்போதோபராபரமே. (299)

935 ஒன்றுமறியாமிருளாயுள்ளம்படைத்தவெனக்
கென்றுகதிவருவதெந்தாய்பராபரமே. (300)

936 சிந்திக்குந்தோறுமென்னுட்சிற்சுகமாயூற்றூறிப்
புந்திக்குணின்றவருட்பொற்பேபராபரமே. (301)

937 என்றுமடைந்தோர்கட்கிரங்கார்குறிப்பனைத்துங்
கன்றையுதைகாலிகதைகாண்பராபரமே. (302)

938 குற்றங்குறையக்குணமேலிடவருளை
யுற்றவரேயாவிக்குறவாம்பராபரமே. (303)

939 ஓருரையால்வாய்க்குமுண்மைக்கோ ரனந்தநூல்கோடிப்
பேருரையார்பேசிலென்னபேறாம்பராபரமே (304)

940 சொல்லுஞ்சமயநெறிச்சுற்றுக்குளேசுழலு
மல்லலொழிவதென்றைக்கையாபராபரமே. (305)

941 பிடித்ததையேதாபிக்கும்பேராணவத்தை
யடித்துத்துரத்தவல்லாரார்கண்பராபரமே. (306)

942 நேசத்தானின்னைநினைக்குநினைவுடையா
ராசைக்கடலிலழுந்தார்பராபரமே. (307)

943 கள்ளாதுகட்டுணவுங்காரியமோநானொருசொல்
கொள்ளாததோஷமன்றோகூறாய்பராபரமே. (308)

944 சென்றவிடமெல்லாந்திருவருளேதாரகமா
நின்றவர்க்கேயானந்தநிட்டைபராபரமே. (309)

945 நீட்சிகுறுகலிலாநித்யசுகாரம்பசக
சாட்சியாமுன்னைவந்துசார்ந்தேன்பராபரமே. (310)

946 வானாதிதத்துவமாய்மன்னிநின்றகாரணநீ
நானாகிநிற்பதெந்தநாளோபராபரமே. (311)

947 காட்டத்திலங்கிகடையவந்தாலென்னவுன்னு
நாட்டத்தினூடுவந்தநட்பேபராபரமே. (312)

948 நித்திரையாய்த்தானேநினைவயர்ந்தானித்தநித்தஞ்
செத்தபிழைப்பானதெங்கள்செய்கைபராபரமே. ()

949 இன்பநிட்டையெய்தாமல்யாதெனினுஞ்சென்றுமனந்
துன்புறுதல்வன்பிறவிததுக்கம்பராபரமே. (314)

950 பொய்யகலமெய்யானபோதநிலைகண்டோர்க்கோ
ரையமில்லையையமில்லையைபராபரமே. (315)

951 மந்திரத்தையுன்னிமயங்காதெனக்கினியோர்
தந்திரத்தைவைக்கத்தகாதோபராபரமே. (816)

952 விண்கருணைபூத்ததென்னமேவியுயிர்க்குயிராய்த்
தன்கருணைதோன்றவருடாய்நீபராபரமே. (317)

953 தன்மயமாய்நின்றநிலைதானேதானாகிநின்று
னின்மயமாயெல்லாநிகழும்பர்பரமே. (318)

954 ஏங்கியிடையுநெஞ்சேவழையைநீவாவென்றே
பாங்குபெறச்செய்வதுன்மேற்பாரம்பராபரமே. (319)

955 ஆண்டநின்னைநீங்காவடிமைகள்யாமாணவத்தைப்
பூண்டதென்னகன்மம்புகலாய்பராபரமே. (320)

956 எங்கணுநீயென்றாலிருந்தபடியெய்தாம
லங்குமிங்குமென்றலையலாமோபராபரமே. (321)

957 கற்குமதுவுண்டுகளிக்கதல்லாநின்னருளி
னிற்குமதுகந்ததுண்டோநீதான்பராபரமே. (322)

958 அண்டபகிரண்டமறியாதநின்வடிவைக்
கண்டவரைக்கண்டாற்கதியாம்பராபரமே (323)

959 கலக்கமுறநெஞ்சைக்கலக்கித்திரும்பத்
துலக்குபவனீயலையோசொல்லாய்பராபரமே. (324)

960 சிந்தையுமென்போலச்செயலறறடங்கிவிட்டால்
வந்ததெலாநின்செயலாவாழ்வேன்பராபரமே. (325)

961 பந்தமெலாந்தீரப்பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவைமறவேன்பராபரமே. (326)

962 தானந்தமானசகசநிருவிகற்ப
வானந்தநிட்டையருளாயாபராபரமே. (327)

963 அல்லலெல்லாந்தீரவெனக்கானந்தமாகவொரு
சொல்லையென்பால்வைத்ததையென்சொல்வேன்பராபரமே.

964 சிந்தைமயக்கமறச்சின்மயமாய்நின்றவுன்னைத்
தந்தவுனக்கென்னையுநான்றந்தேன்பராபரமே. (329)

965 மைகாட்டுமாயைமயக்கமறநீகுருவாய்க்
கைகாட்டவுங்கனவுகண்டேன்பராபரமே. (330)

966 மால்வைத்தசிந்தைமயக்கறவென்சென்னிமிசைக்
கால்வைக்கவுங்கனவுகண்டேன்பராபரமே. (331)

967 மண்ணுமாயையெல்லாமாண்டுவெளியாகவிரு
கண்ணாரவுங்கனவுகண்டேன்பராபரமே. (332)

968 மண்ணீர்மையாலேமயங்காதுன்னையாலென்
கண்ணீர்துடைக்கவுநான்கண்டேன்பராபரமே. (333)

969 உள்ளதுணராவுணர்விலிமாபாவியென்று
மெள்ளமெள்ளக்கைநெகிழவிட்டாய்பராபரமே. (334)

970 எல்லாநினதுசெயலென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோவையாபராபரமே. (335)

971 பந்தமயக்கிருக்கப்பற்றற்றேனென்றனது
மிந்தமயக்கமெனக்கேன்பராபரமே (336)

972 காட்சியெல்லாங்கண்ணைவிடக்கண்டதுண்டோயாதினுக்கு
மாட்சியுனதருளேயன்றோபராபரமே. (337)

973 எட்டுத்திசையுமொன்றாயின்பமாய்நின்றவுனை
விட்டுப்பிரியவிடமேவேறுபராபரமே (338)

974 பிறியாதுயிர்க்குயிராய்ப்பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவேசிவமேபராபரமே. (339)

975 ஏதேதுசொன்னாலுமெள்ளளவுநீயிரங்காச்
சூதேதெனக்குளவுசொல்லாய்பராபரமே. (340)

976 கற்பனையாய்ப்பாடுகின்றேன்கண்ணீருங்கம்பலையுஞ்
சொற்பனத்துங்காணேனென்சொல்வேன்பராபரமே. (341)

977 வன்பொன்றுநீங்காமனதிறப்பமாறுப்பே
ரன்பொன்றும்போதுமெனக்கையாபராபரமே. (342)

978 ஏதுந்தெரியாவெளியேயனைவாவெனநின்
போதநிலைகாட்டிற்பொறாதோபராபரமே. (343)

979 ஓராயமெல்லாமொழிந்தேற்குன்றெய்வவரு
டாராதிருக்கத்தகுமோபராபரமே. (344)

980 மோனந்தருஞானமுட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கையருளாய்பராபரமே. (345)

981 வாடுமுகங்கண்டென்னைவாடாமலேகாத்த
நீடுங்கருணைநிறைவேபராபரமே. (346)

982 புந்தியினுனின்னடியைப்போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிற்போநின்றியானைப்பராபரமே. (347)

983 உனக்குவமையாக்கருணையுள்ளவரும்வன்மைக்
கெனக்குவமையானவருமில்லைபராபரமே. (348)

984 தாயிருந்தும்பிள்ளைதளர்ந்தாற்போலெவ்விடத்து
நீயிருந்துநான்றளர்ந்துநின்றேன்பராபரமே. (349)

985 வாயாற்கிணறுகெட்டவாறேபோல்வாய்பேசிப்
பேயானார்க்கின்பமுண்டோபேசாய்பராபரமே. (350)

986 பாவமென்றாலேதும்பயமின்றிச்செய்பவிந்தச்
சீவனுக்கார்போதந்தெரித்தார்பராபரமே. (351)

987 இன்பநிருவிகற்பமின்றேதாவன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிதுசொன்னேன்பராபரமே. (352)

988 கற்குநிலைகற்றாற்கருவியவிழாதருளாய்ப்
நிற்குநிலைகற்பதுவேவேதம்பராபரமே. (353)

989 காச்சச்சுடர்விடும்பொற்கட்டிபோனின்மலமாய்ப்
பேச்சற்றவரேபிறவார்பராபரமே. (354)

990 பற்றொழிந்துசிந்தைப்பதைப்பொழிந்துதானேதா
னற்றிருப்பதென்றைக்கமைப்பாய்பராபரமே. (355)

991 உருவெளிதான்வாதனையுற்றதமர்க்கல்லாலினமுங்
குருவழிநின்றார்க்குமுண்டோகூறாய்பராபரமே. (356)

992 தேகமியாந்தனுமொருசித்திபெறச்சீவன்முத்தி
யாகுநெறிநல்லநெறியையாபராபரமே. (357)

993 உலகநெறிபோற்சடலமேமாயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்தவியல்போபராபரமே. (358)

994 பரமாப்பரவெளியாப்பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந்
திரமேதுமில்லைநன்றாத்தேர்ந்தேன்பராபரமே. (359)

995 தேடுவேனின்னருளைத்தேடுமுன்னேயெய்தினட
மாடுவேனானந்தமாவேன்பராபரமே. (360)

996 உள்ளக்குழையவுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்றுகாண்பேன்பராபரமே. (361)

997 பட்டப்பகல்போலப்பாழ்த்தசிந்தைமாளினெல்லாம்
வெட்டவெளியாகவிளங்கும்பராபரமே. (362)

998 பார்க்கினணுப்போற்கிடந்தபாழ்ஞ்சிந்தைமாளினென்னை
யார்க்குச்சரியிடலாமைபராபரமே. (363)

999 பாட்டுக்கோவன்பினுக்கோபத்திக்கோவன்பர்தங்க
ணீட்டுக்கெல்லாங்குறுகிநின்றாய்பராபரமே. (364)

1000 முத்தாந்தவித்தேமுளைக்குநிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச்சிறப்பேபராபரமே. (365)

1001 உன்றுவெளியாயுறங்காதபேருணர்வா
யென்றுவிக்குள்ளேயிருந்தாய்பராபரமே. (366)

1002 தத்துவமெல்லாமகன்றதன்மையர்க்குச்சின்மயமா
நித்தமுத்தசுத்தநிறைவேபராபரமே. (367)

1002 உள்ளக்கொதிப்பலவுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்க்கருணைவேண்டும்பராபரமே. (368)

1004 என்னைப்புரப்பதருளின்கடனுமென்கடனு
நின்னிற்பணியறவேநிற்கைபராபரமே.

901 கன்னங்கரியநிறக்காமவிராக்ஷசப்பேய்க்
கென்னையிலக்காகவைத்ததென்னேபராபரமே. (266)

902 சித்திநெறிகேட்டல்செகமயக்கஞ்சென்மமற
முத்திநெறிகேட்டன்முறைகாண்பராபரமே. (267)

903 சிந்தைசிதையச்சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந்தெய்தும்பராபரமே. (268)

904 கூர்த்தவறிவாலறியக்கூடாதெனக்குரவன்
றேர்த்தபடிதானேதிரிந்தேன்பராபரமே. (269)

905 பத்தருந்தும்பரமசுகம்யானருந்த
வெத்தனைநாள்செல்லுமியம்பாய்பராபரமே. (270)

906 தீரத்தினுற்றுறவுசேராமலிவ்வுலகிற்
பாரத்தனம்பேசல்பண்போபராபரமே. (271)

907 இந்தவெளியினையுண்டேப்பமிடப்போறிவாத்
தந்தவெளிக்கேவெளியாய்ச்சார்ந்தேன்பராபரமே. ()

908 உணர்த்துமுனைநாடாதுணர்ந்தவையேயோநாடி
யிணக்குறுமென்னைமறைமைதானென்னேபராபரமே. ()

909 உண்டுபோலின்றுமுலகைத்திரமெனவுட்
கொண்டுகொண்டென்பெற்றபலன்கூறாய்பராபரமே. (274)

910 உள்ளபடியாதுமெனவுற்றுணர்ந்தேனக்கணமே
கள்ளமனம்போனவழிகாணேன்பராபரமே. (275)

911 சித்தமவுனஞ்செயல்வாக்கெலாமவுனஞ்
அத்தமவுனமென்பாற்றோன்றிற்பராபரமே. (276)

912 எண்ணில்பலகோடியுயிரெத்தனையோவத்தனைக்குந்
தண்ணளிக்கலந்தவருட்கண்ணேபராபரமே. (277)

913 என்னினியாருண்டோர்ஒழியில்லையென்றல்யானு
[illegible]இனியாருக்காவுளவேன்பராபரமே. (278)

914 அண்டபிண்டங்காணேனகம்புறமுமொன்றாக்
கண்டவென்னைநீகலந்தகாலம்பராபரமே. (279)

915 எத்தனையோகோடியெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ்
சித்தமிரங்கிலையென்செய்வேன்பராபரமே. (280)

916 அன்றந்தநால்வருக்குமற்புதமாநீயுரைத்த
தொன்றந்தவார்த்தை.தயெனக்குண்டோபராபரமே. ()

917 அப்பனென்றுமன்னையென்றுமாரியனென்றும்புனையே
செப்புவதுமுன்னிலையின்சீர்காண்பராபரமே (282)

918 கட்டுங்கனமுயங்கக்காலர்வரும்போதெதிர்த்து
வெட்டுந்தளமோவிளப்பாய்பராபரமே. (283)

919 பேசாதமோனநிலைபெற்றன்றோநின்னருளாம்
வாசாமகோசரந்தான்வாய்க்கும்பராபரமே. (284)

920 கற்றாலுங்கேட்டாலுங்காயமழியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோபேசாய்பராபரமே. (285)

921 கண்டவடிவெல்லாங்கரைக்கின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளேயன்றோபராபரமே. (286)

922 தன்செயலாலொன்றுமிலைதானென்றான்பாவி
நின்செயலாய்நில்லாநினைவேன்பராபரமே. (287)

923 கொலைகளவுகட்காமங்கோபம்விட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடான்வாய்க்கும்பராபரமே. (288)

924 தன்னையறியாதுசகந்தானுயிருந்துவிட்டா
லுன்னையறியவருளுண்டோபராபரமே. (289)

925 ஒன்றிரண்டென்றன்னுவுணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமென்னைவையாயிறையேபராபரமே. (290)

926 கருதுமடியார்களுளங்காணவெளியாகுந்
துரியநிறைவானசுகமேபராபரமே. (291)

927 பொய்குவித்தநெஞ்சினருட்பொற்பறிந்துநிக்கனைத்துங்
கைகுவித்துநிற்பதெந்தக்காலம்பராபரமே. (292)

928 அத்துவிதமானவயிக்யவனுபவமே
சுத்தநிலையந்நிலையார்சொல்வார்பராபரமே. (293)

929 வைத்தசுவரலம்பின்மண்போமோமாயையினோர்க்
கெத்தனைபோதித்துமென்றுமெந்தாய்பராபரமே. ()

930 பூட்டற்றுத்தேகமற்றுப்போகுமுன்னேநின்னருளைக்
காட்டத்தகாதோவென்கண்ணேபராபரமே. (295)

931 சொல்லிறப்பதர்களைந்துசொன்முடிவுகாணாதார்
நெல்லிறப்பதர்போலநிற்பார்பராபரமே. (296)

932 அழுக்காற்றாநெஞ்சமழுங்கியபுன்மார்க்க
விழுக்காற்றாலின்பநலமெய்தார்பராபரமே. (297)

933 தேகாதிபொய்யெனவேதேர்ந்தவுபசாந்தருக்கு
மோகாதியுண்டோமொழியாய்பராபரமே. (298)

934 சாதனையெல்லாமவிழ்த்தற்போதங்காட்டாதோர்
போதனைநீங்குவதெப்போதோபராபரமே. (299)

935 ஒன்றுமறியாமிருளாமுள்ளம்படைத்தவெனக்
கென்றுகதிவருவதெந்தாய்பராபரமே. (300)

936 சிந்திக்குந்தோறுமென்னுட்சிற்சுகமாயூற்றூறிப்
புந்திக்குணின்றவருட்பொற்பேபராபரமே. (301)

937 என்றுமடைந்தோர்கட்கிரங்கார்குறிப்பனைத்துங்
கன்றையுதைகாலிகதைகாண்பராபரமே. (302)

938 குற்றங்குறையக்குணமேலிடவருளை
யுற்றவரேயாவிக்குறவாம்பராபரமே. (303)

939 ஓருரையால்வாய்க்குமுண்மைக்கோரனந்தநூல்கோடிப்
பேருரையார்பேசிலென்னபேறாம்பராபரமே. (304)

940 சொல்லுஞ்சமயநெறிச்சுற்றுக்குளேசுழலு
மல்லலொழிவதென்றைக்கைபராபரமே. (305)

941 பிடித்ததையேதாபிக்கும்பேராணவத்தை
யடித்துத்துரத்தவல்லாரார்காண்பராபரமே. (306)

942 நேசத்தாணின்னைநினைக்குநினைவுடையா
ராசைக்கடலிலழுந்தார்பராபரமே. (307)

943 கள்ளாதுகட்டுணவுங்காரியமோநானொருசொல்
கொள்ளாததோஷமன்றோகூறாய்ப்பராபரமே. (308)

944 சென்றவிடமெல்லாந்திருவருளேதாரகமா
நின்றவர்க்கேயானந்தநிட்டைபராபரமே. (309)

945 நீட்சிகுறுகலிலாநித்யசுகாரம்பசக
சாட்சியாமுன்னைவந்துசார்ந்தேன்பராபரமே. (310)

946 வாறுதித்தத்துவமாய்மன்னிநின்றகாரணநீ
நாறுகிநிற்பதெந்தநாளோபராபரமே. (311)

947 காட்டத்திலங்கிகடையவந்தாலென்னவுன்னு
நாட்டத்தினூடுவந்தநட்பேபராபரமே. (312)

948 நித்திரையாய்த்தானேநினைவயர்ந்தானித்தநித்தஞ்
செத்தபிழைப்பானதெங்கள்செய்கைபராபரமே. ()

949 இன்பநிட்டையெய்தாமல்யாதெனினுஞ்சென்றுமனந்
துன்புறுதல்வன்பிறவிதுக்கம்பராபரமே. (314)

950 பொய்பகலமெய்யானபோதநிலைகண்டோர்க்கோ
ரையமில்லையையமில்லையாபராபரமே. (315)

951 மந்திரத்தையுன்னிமயங்காதெனக்கினியோர்
தந்திரத்தைவைக்கத்தகாதோபராபரமே. (316)

952 விண்கருணைபூத்ததென்னமேவியுயிர்க்குயிராய்த்
தன்கருணைதோன்றவருடாய்நீபராபரமே. (317)

953 தன்மயமாய்நின்றநிலைதானேதானாகிநின்று
னின்மயமாயெல்லாநிகழும்பராபரமே. (318)

954 ஏங்கியிடையுநெஞ்சவேழையைநீவாவென்றே
பாங்குபெறச்செய்வதுன்மேற்பாரம்பராபரமே. (319)

955 ஆண்டநின்னைநீங்காவடிமைகள்யாமாணவத்தைப்
பூண்டதென்னகன்மம்புகலாய்பராபரமே. (320)

956 எங்கணுநீயென்றாலிருந்தபடியெய்தாம
லங்குமிங்குமென்றலைபலாமோபராபரமே. (321)

957 கற்குமதுவுண்டுகளித்ததல்லாநின்னருளி
னிற்குமதுகந்ததுண்டோநீதான்பராபரமே. (322)

958 அண்டபகிரண்டமறியாதநின்வடிவைக்
கண்டவரைக்கண்டாற்கதியாம்பராபரமே (323)

959 கலக்கமுறநெஞ்சைக்கலக்கித்திரும்பத்
துலக்குபவனீயலையோசொல்லாய்பராபரமே. (324)

960 சிந்தையுமென்போலச்செயலறறடங்கிவிட்டால்
வந்ததெலாநின்செயலாவாழ்வேன்பராபரமே. (325)

961 பந்தமெலாந்தீரப்பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவைமறவேன்பராபரமே. (326)

962 தானந்தமானசகசநிருவிகற்ப
வானந்தநிட்டையருளாய்பராபரமே. (327)

963 அல்லலெல்லாந்தீரவெனக்கானந்தமாகவொரு
சொல்லையென்பால்வைத்ததையென்சொல்வேன்பராபரமே.

964 சிந்தைமயக்கமறச்சின்மயமாய்நின்றவுன்னைத்
தந்தவுனக்கென்னையுநான்றந்தேன்பராபரமே. (329)

965 மைகாட்டுமாயைமயக்கமறநீகுருவாய்க்
கைகாட்டவுங்கண்டுகண்டேன்பராபரமே. (330)

966 மால்வைத்தசிந்தைமயக்கறவென்சென்னிமிசைக்
கால்வைக்கவுங்கனவுக்கண்டேன்பராபரமே. (331)

967 மண்ணானமாயையெல்லாமாண்டுவெளியாகவிரு
கண்ணாரவுங்கனவுகண்டேன்பராபரமே. (332)

968 மண்ணீர்மையாலேமயங்காதுன்னையாலென்
கண்ணீர்துடைக்கவுநான்கண்டேன்பராபரமே. (333)

969 உள்ளதுணராவுணர்விலிமாபாவியென்றே
மெள்ளமெள்ளக்கைநெகிழவிட்டாய்பராபரமே. (334)

970 எல்லாநினதுசெயலென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோவையாபராபரமே. (335)

971 பந்தமயக்கிருக்கப்பற்றொழிந்தேனென்றுளது
மிந்தமயக்கமெனக்கேன்பராபரமே (336)

972 காட்சியெல்லாங்கண்ணைவிடக்கண்டதுண்டோயாதினுக்கு
மாட்சியுனதருளேயன்றோபராபரமே. (337)

973 எட்டுத்திசையுமொன்றாயின்பமாய்நின்றவுன்னை
விட்டுப்பிரியவிடம்வேறோபராபரமே. (338)

974 பிறியாதுயிர்க்குயிராய்ப்பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவேசிவமேபராபரமே. (339)

975 ஏதேதுசொன்னாலுமெள்ளளவுநீயிரங்காச்
சூதேதெனக்குளவுசொல்லாய்பராபரமே. (340)

976 கற்பனையாய்ப்பாடுகின்றேன்கண்ணீருங்கம்பலையுஞ்
சொற்பனத்துங்காணேனென்சொல்வேன்பராபரமே. (341)

977 வன்பொன்றுநீங்காமனதிறப்பமாறாப்பே
ரன்பொன்றும்போதுமெனக்கையாபராபரமே. (342)

978 ஏதுந்தெரியாவெளியேயெனைவாவெனநின்
போதநிலைகாட்டிற்பொறாதோபராபரமே. (343)

979 ஓராமலெல்லா மொழிந்தேற்குன்றெய்வவரு
டாராதிருக்கத்தகுமோபராபரமே. (344)

980 மோனந்தருஞானமூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கையருளாய்ப்பராபரமே. (345)

981 வாடுமுகங்கண்டென்னைவாடாமலேகாத்த
நீடுங்கருணைநிறைவேபராபரமே. (346)

982 புந்தியினுனின்னடியைப்போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிறப்போநின்றியானம்பராபரமே. (347)

983 உனக்குவமையாக்கருணையுள்ளவரும்வன்மைக்
கெனக்குவமையானவருமில்லைபராபரமே. (348)

984 தாயிருந்தும்பிள்ளைதளர்ந்தாற்போலெவ்விடத்து
நீயிருந்துநான்றளர்ந்துநின்றேன்பராபரமே. (349)

985 வாயாற்கிணறுகெட்டவாறேபோல்வாய்பேசிப்
பேயானோர்க்கின்பமுண்டோபேசாய்பராபரமே. (350)

986 பாவமென்றாலேதும்பயமின்றிச்செய்பவிந்தச்
சீவனுக்காரபோதந்தெரித்தார்பராபரமே. (351)

987 இன்பநிருவிகற்பமின்றேதாவன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிதுசொன்னேன்பராபரமே. (352)

988 கற்குநிலைகற்றாற்கருவியவிழாதருளாய்ப்
நிற்குநிலைகற்பதுவேநீதம்பராபரமே. (353)

989 காச்சச்சுடர்விடும்பொற்கட்டிபோனின்மலமாய்ப்
பேச்சற்றவரேபிறவார்பராபரமே. (354)

990 பற்றொழிந்துசிந்தைப்பதைப்பொழிந்துதானேதா
னற்றிருப்பதென்றைக்கமைப்பாய்பராபரமே. (355)

991 உருவெளிதான்வாதனையுந்தமர்க்கல்லாலினமுங்
குருவழிநின்றோர்க்குமுண்டோகூறாய்பராபரமே. (356)

992 தேகமியாதேனுமொருசித்திபெறச்செய்முத்தி
யாகுமென்றிலல்லவென்றிப்பயா பராபரமே. (357)

993 உலகநெறிபோற்சடலமோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்தவியல்போபராபரமே. (358)

994 பரமாப்பரவெளியாப்பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந்
திரமேதுமில்லைநன்றாத்தேர்ந்தேன்பராபரமே. (359)

995 தேடுவேனின்னருளைத்தேடுமுன்னேயெய்திநட
மாடுவேனானந்தமாவேன்பராபரமே. (360)

996 உள்ளங்குழையவுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்றுகாண்பேன்பராபரமே. (361)

997 பட்டப்பகல்போலப்பாழ்த்தசிந்தைமாளிகையெல்லாம்
வெட்டவெளியாகவிளங்கும்பராபரமே. (362)

998 பார்க்கினணுப்போற்கிடந்தபாழ்ஞ்சிந்தைமாளிலென்னை
யார்க்குச்சரியிடலாமைபராபரமே. (363)

999 பாட்டுக்கோவன்பினுக்கோபத்திக்கோவன்பர்தங்க
ணீட்டுக்கெல்லாங்குறுகிநின்றாய்பராபரமே. (364)

1000 முத்தாந்தவீதிமுளைக்குநிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச்சிறப்பேபராபரமே. (365)

1001 உன்னுவெளியாயுறங்காதபேருணர்வா
யென்னுயிக்குள்ளேயிருந்தாய்பராபரமே. (366)

1002 தத்துவமெல்லாமகன்றதன்மையர்க்குச்சின்மயமா
நித்தமுத்தசுத்தநிறைவேபராபரமே. (367)

1002 உள்ளக்கொதிப்பலவுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்க்கருணைவேண்டுபராபரமே. (368)

1004 என்னைப்புரப்பதருளின்கடனுமென்கடனு
மின்னிற்பணியறவேநிற்கைபராபரமே. (369)

1005 தானேயாநன்னிலையைத்தந்தவருளானந்த
வானேயனுதிதவாழ்வேபராபரமே. (370)

1006 மண்ணுதிபூதமெல்லாம்வைத்திருந்தநின்னிறைவைக்
கண்ணாக்கண்டுகளிதேன்பராபரமே. (371)

1007 அறியாமையீதென்றறிவித்தவன்றேதான்
பிறியாவருணிலையுபெற்றேன்பராபரமே. (372)

1008 தீதெனவுநன்றெனவுந்தேர்ந்துநான்றோர்ந்தபடி
யேதுநடக்கவொட்டாதென்னேபராபரமே. (373)

1009 கண்டவறிவகண்டாகாரமெனமெய்யறிவிற்
கொண்டவர்க்கேமுத்திகொடுப்பாய்பராபரமே. (374)

1010 ஈருகவல்வினைநானென்னுமலினபசுகம்
பேரும்படிக்கடிமைபெற்றேன்பராபரமே. (375)

1011 பெற்றானுபூதிபேசாதமோனநிலை
கற்றாருனைப்பிரியார்கண்டாய்பராபரமே. (376)

1012 நீயேநானென்றுநினைப்புமறப்புமறத்
தாயேயனையவருட்தாய்பராபரமே. (377)

1013 சஞ்சலமற்றெல்லாநீதானென்றுணர்ந்தேனென்
னஞ்சலியுங்கொள்ளாயரசேபராபரமே. (378)

1014 பூதமுதனாதவரைபொய்யென்றமெய்யரெல்லாங்
காதலித்தவின்பக்கடலேபராபரமே (379)

1015 வாக்குமனமொன்றுபட்டவார்த்தையல்லால்வெவ்வேறாய்ப்
போக்குடையவார்த்தைபொருந்தேன்பராபரமே. ()

1016 வன்மையின்றியெல்லாமதித்துணர்வாய்க்காகெடுவேன்
றன்மையொன்றுந்தோயாத்தடையேபராபரமே. ()

1017 பத்தர்சித்தர்வாழிபரிபக்குவர்கள்வாழிசெங்கோல்
வைத்தவர்கள்வாழிகுருவாழிபராபரமே. (382)

1018 கல்லாதேனானுங்கற்றுணர்ந்தமெய்யடியார்
சொல்லாலேநின்னைத்தொடர்ந்தேன்பராபரமே (383)

1019 சொல்சிறப்பச்சற்குருவாய்த்தோன்றிச்சுகங்கொடுத்த
நல்லுரைக்கேகொத்தடிமைநான்காண்பராபரமே. ()

1020 முத்திக்குவித்தானமோனக்கரும்புவழி
தித்தித்திடவிளைந்ததேனேபராபரமே. (385)

1021 நித்திரையும்பாழ்த்தநினைவுமற்றுநிற்பதுவோ
சித்தவநுணிலைநீசொல்லாய்பராபரமே. (386)

1022 மண்ணுமறிகடலுமற்றுளவுமெல்லாமுன்
கண்ணிலிருக்கவுநான்கண்டேன்பராபரமே (387)

1023 பூட்டிவைத்துவஞ்சப்பொறிவழியேயென்றனைநீ
யாட்டுகின்றதேதோவறியேன்பராபரமே. (388)

1024 பொய்யுணர்வாயிந்தப்புழுக்கூட்டைக்காத்திருந்தே
னுய்யும்வகையுமுளதோபராபரமே. (389)

## பைங்கிளிக்கண்ணி.



1025 அந்தமுடனாதியளவாமலென்னறிவிற்
சுந்தரவானசோதிதுலங்குமோபைங்கிளியே. (1)

1026 அகமேவுமண்ணனுக்கென்னல்லலெல்லாஞ்சொல்லிச்
சுகமானநீபோய்ச்சுகங்கொடுவாபைங்கிளியே. (2)

1027 ஆவிக்குளாவியெனுமற்புதனார்சிற்சுகந்தான்
பாவிக்குங்கிட்டுமோசொல்லாய்நீபைங்கிளியே (3)

1028 ஆருமறியாமலெனையந்தரங்கமாகவந்து
சேரும்படியிறைக்குச்செப்புவாபைங்கிளியே. (4)

1029 ஆறானகண்ணீர்க்கென்னங்கபங்கமானதையுங்
கூறாததென்னோகுதலைமொழிப்பைங்கிளியே. 5)

1030 இன்பருளவாடையிழுக்கேறுமெமக்கண்ணல்சுதந்த
வம்பரயாமாடையளிப்பானோபைங்கிளியே. (6)

1031 உன்னுமலொன்றிரண்டென்றோராமல்வீட்டுநெறி
சொன்னான்வரவும்வகைசொல்லாய்நீபைங்கிளியே (7)

1032 ஊருமிலார்பேருமிலாருற்றார்பெற்றாருடனே
யாருமிலாரென்னையறிவாரோபைங்கிளியே. (8)

1033 ஊரைப்பாராமலெனக்குள்ளகத்துநாயகனார்
சீரைப்பார்த்தாற்கருணைசெய்வாரோபைங்கிளியே. ()

1034 என்றுவிடியுமிறைவாவோவெனவென்று
நின்றநிலையெல்லாநிகழ்த்தாய்நீபைங்கிளியே. (10)

1035 எந்தமடலூடுமெழுதாவிறைவடிவைச்
சிந்தைமடலாவெழுதிச்சேர்ப்பேனோபைங்கிளியே. ()

1036 கண்ணுண்மணிபோலின்பங்காட்டியெனைப்பிரிந்த
திண்ணியருமின்னமவந்துசேர்வாரோபைங்கிளியே. (12)

1037 ஏடார்மலர்சூடேனையபெருமான்பொன்னடியாம்
வாடாமலர்முடிக்குவாய்க்குமோபைங்கிளியே. (13)

1038 கல்லேனுமனரேன்கனிந்தவனபேபூசையென்ற
கல்லாபொல்லாவென்னையுநாடுவரோபைங்கிளியே. ()

1039 கண்டதனைக்கண்டுகலக்கந்தவிரெனவே
விண்டபெருமானையுநானமேவுவனோபைங்கிளியே. ()

1040 காணாதகாட்சிகருத்துவந்துகாணாமல்
வீணாள்கழித்துமெலிவேனோபைங்கிளியே. (16)

1041 காந்தமிரும்பைக்கவர்ந்திழுத்தாலென்னவருள்
வேந்தனெனையிழுத்துமேவுவனோபைங்கிளியே. (17)

1042 [illegible]துங்கண்டனையேயெம்மிறைவர்
[illegible]யின்பம்புசிப்பேனோபைங்கிளியே. (18)

1043 கிட்டிக்கொண்டன்பருண்மைகேளாய்பலவடிகொள்
பட்டிக்குமின்பமுண்டோசொல்லாய்நீபைங்கிளியே. ()

1044 கிட்டேராய்நெஞ்சிற்கிளர்வார்தழுவவென்று
னெட்டேராவரவர்நேசமென்னோபைங்கிளியே. (20)

1045 கூறுங்குணமுமில்லாக்கொள்கையினாரெண்கலை
யாறும்படிக்குமணைவாரோபைங்கிளியே. (21)

1046 சின்னஞ்சிறியேன்றன்சிந்தைகவர்ந்தாரிறைவர்
தன்னந்தனியேதவிப்பேனோபைங்கிளியே. (22)

1047 சிந்தைமருவித்தெளிவித்தெனையாள
வந்தகுருநாதனருள்வாய்க்குமோபைங்கிளியே. (23)

1048 சொல்லிறந்துநின்றசுகரூபப்பெம்மானை
யல்லும்பகலுமணைவேனோபைங்கிளியே. (24)

1049 தற்போதத்தாலேதலைகீழதாகவைய
னற்போதவின்புவரநாட்செலுமோபைங்கிளியே (25)

1050 தன்னையறியுந்தருணந்தனிற்றலைவ
னென்னையணையாதவண்ணமெங்கொளித்தார்பைங்கிளியே.

1051 தாங்கரியமையலெல்லாந்தந்தெனைவிட்டின்னருளாம்
பாங்கியைச்சேர்ந்தாரிறைக்குப்பண்போசொல்பைங்கிளியே

1052 தாவியதோர்மார்க்கடமாந்தன்மைவிட்டேயண்ணலிடத்
தோவியம்போனிற்கினெனையுள்குவரோபைங்கிளியே. (28)

1053 தீராக்கருவழக்கைத்தீர்வையிட்டங்கென்னையினிப்
பாரேறுதாண்டானைப்பற்றுவனோபைங்கிளியே. (29)

1054 தூங்கிவிழித்தென்னபலன்றூங்காமற்றூங்கிநிற்கும்
பாங்குகண்டாலன்றோபலன்காண்பேன்பைங்கிளியே.

1055 தொல்லைக்கலைதொலைத்துத்தொலையாத
வெல்லையிலாவின்பமயமெய்துவனோபைங்கிளியே. ()

1056 நன்னெஞ்சத்தன்பரெல்லாநாதரைச்சேர்ந்தின்பணைந்தார்
வன்னெஞ்சத்தாலேநான்வாழ்விழந்தேன்பைங்கிளியே

1057 நானேகருதின்வரநாடார்சும்மாவிருந்தாற்
றானேயணைவரவர்தன்மையென்னோபைங்கிளியே. ()

1058 நீர்க்குமிழிபோன்றவுடனிற்கையிலேசாசுவதஞ்
சேர்க்கவறியாமற்றிகைப்பேனோபைங்கிளியே: (34)

1059 நெஞ்சகத்தில்வாழ்வார்நினைக்கின்வேறென்றணையார்
வஞ்சகத்தாரல்லரவர்மார்க்கமென்னோபைங்கிளியே.

1060 பன்முத்திரைச்சமயம்பாழ்படக்கல்லாலடிவாழ்
சின்முத்திரையாசைச்சேர்வேனோபைங்கிளியே. (36)

1061 பச்சைகண்டநாட்டிற்பறக்குமுனைப்போற்பறந்தே
னிச்சையெல்லாமண்ணற்கியம்பிவா பைங்கிளியே. ()

1062 பாசபந்தஞ்செய்ததுன்பம்பாராமலெம்மிறைவ
னாசைதந்ததுன்பமதற்காற்றேனான்பைங்கிளியே. (38)

1063 பாராசையற்றிறையைப்பற்றறநான்பற்றிநின்ற
பூராயமெல்லாம்புகன்றுவா பைங்கிளியே. (39)

1064 பேதைப்பருவத்தேபின்றொடர்ந்தென்பக்குவமுஞ்
சோதித்தவண்ணல்வந்துதோய்வாரோ பைங்கிளியே ()

1065 பைம்பயிரைநாடுமுன்போற்பார்பூத்தபைங்கொடிசேர்
செம்பயிரைநாடித்திகைத்தேனான்பைங்கிளியே. (41)

1066 பொய்க்கூடுகொண்டுபுலம்புவனோவெம்மிறைவர்
மெய்க்கூடுசென்றுவிளம்பிவா பைங்கிளியே. (42)

1067 பொய்ப்பணிவேண்டேனைப் பொருட்படுத்தியண்ணலென்
பான்,மெய்ப்பணியுந்தந்தொருகான்மேவுவனோபைங்கிளியே

1068 மண்ணுறங்கும்விண்ணுறங்குமற்றுளவெலாமுறங்குங்
கண்ணுறங்கேனெம்மிறைவர்காதலாற்பைங்கிளியே.

106 பட்டப்பட்டா தம்பக்கமெல்லாந் திரமென்னை
வெட்டவெளிவீட்டிலுன்னன் மேவுவனோ பைங்கிளியே. (

1070 மாலைவளர்த் தென்னைவளர்த் திறைவர் பன்னெறியாம்
பாலைவனத் திவ்விட்ட பாவமென்னோ பைங்கிளியே

1071 மெய்பிணியாய் மாற்றவுந்தமெத்தவுண்டெம்மண்ணறா
மையனோய்தீர்க்க மருந்துமுண்டோ பைங்கிளியே. (47)

1072 மேவுபஞ்சவண்ண முற்றாய் வீண்சிறைபாலல்லலுற்றாய்
பாவிபஞ்சவண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே. (48)

1073 வாய்திறவா வண்ணமென்னை வைத்தாண்டார்க்கென்றுயரை
நீதிறவா சொல்லினிச மாங்காண் பைங்கிளியே: (49)

1074 வாட்டப்படா தமவுனவின்பக்கையாலே
காட்டிக்கொடுத்தானைக் காண்பேனோ பைங்கிளியே. (

1075 வாராவரவாகவந்தருளு மோனருக்கென்
போராசையெல்லாம் போய்ப்பேசிவா பைங்கிளியே.

1076 விண்ணவர் தம்பாலமுதம் வேப்பங்காயாகவென் பாற்
பண்ணியதெம்மண்ணன் மயல்பாரத்தாயோ பைங்கிளியே. (

1077 விண்ணுள்வளியடங்கி வேறறறதென்னவருட்
கண்ணுளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே. (53)

1078 விண்ணோர்நிலவுநலம் மேடையிலெல்லாருமுற
மண்ணானவீட்டிலென்னை வைத்ததென்னோ பைங்கிளியே.

1079 உள்ளதனிலுள்ளே யொளித்திருந்தென்கள்ளமெல்லாம்
வள்ளலறிந்தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே.

1080 ஆகத்தைநீங்கு முன்னே யாவிதுணைவனைநான்
மோகத்தின் வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே. (56)

1081 [illegible]
[illegible] வருவதோ பைங்கிளியே. (57)

1082 கள்ளத்தலைவரவர்க்காட்டிப்பேசாம
லுள்ளத்தில்வந்தவுபாயமென்னேழைக்கினியே. (58)

# எ ந் நா ட் க ண் ணி.

—*—

## தெய்வவணக்கம்

1083 நீர்பூத்தவேணிநிலவெறிப்பமன்றுடுங்
கார்பூத்தகண்டனையான்காணுநாளெந்நாளோ. ()
1084 பொன்னுருமன்றுண்மணிப்பூவைவிழிவண்டுசுற்று
மென்னாமுதினலமிச்சிப்பதெந்நாளோ. (2)
1085 நீக்கிமலக்கட்டறுத்துநேரேவெளியிலெம்மைத்
தூக்கிவைக்குநாதனைத்தொழுதிடுநாளெந்நாளோ. (3)
1086 கருமுகங்காட்டாமலென்றுங்கர்ப்பூரம்வீசுந்
திருமுகமேநோக்கித்திருக்கறுப்பதெந்நாளோ. (4)
1087 வெஞ்சேலெனும்விழியார்வேட்கைநஞ்சுக்கஞ்சினரை
யஞ்சேலெனுங்கைக்கபயமென்பதெந்நாளோ. (5)
1088 ஆறுசமயத்துமதுவதுவாய்நின்றிலங்குப
வீறுபரைதிருதாண்மேவுநாளெந்நாளோ. (6)
1089 பச்சைநிறமாய்ச்சிவந்தபாகங்கலந்துலகை
யிச்சையுடனீன்றாளையாங்காண்பதெந்நாளோ. (7)
1090 ஆதியந்தங்காட்டாதகண்டிதமாய்நின்றுணர்த்தும்
போதவடிவானடியைப்போற்றுநாளெந்நாளோ. (8)
1901 கங்கைநிலவுசடைக்காட்டானைத்தந்தையெனும்
புங்கவெண்கோட்டானைப்பதம்புந்திவைப்பதெந்நாளோ. ()
1902 அஞ்சுமுகங்காட்டாமலாறுமுகங்காட்டவந்த
செஞ்சரணச்சேவடியைச்சிந்தைவைப்பதெந்நாளோ.

1093 தந்தையிருகாடுணித்துத்தம்பிரான்றாள்சேர்ந்த
வெந்தையிருதாளிணைக்கேயின்புறுவதெந்நாளோ.

## குருமரபின்வணக்கம்.

---

1094 தூய்யகரமலராற்சொல்லாமற்சொன்னவுண்மை
யையனைக்கல்லாலரசைபாமணைவதெந்நாளோ (1)

1095 சிந்தையினுக்கெட்டாதசிற்சுகத்தைக்காட்டவல்ல
நந்தியடிக்கீழ்க்குடியாய்நாமணைவதெந்நாளோ. (2)

1096 எந்தைசனற்குமாரனெமையாட்கொள்வான்
வந்ததவத்தினரைவாழ்த்துநாளெந்நாளோ. (3)

1097 பொய்கண்டார்காணாப்புனிதமெனுமத்துவித
மெய்கண்டநாதனருண்மேவுநாளெந்நாளோ. (4)

1098 பாதிவிருத்தத்தாலிப்பார்விருத்தமாகவுண்மை
சாதித்தார்பொன்னடியைத்தான்பணிவதெந்நாளோ ()

1099 சிற்றம்பலமன்னுஞ்சின்மயாநந்தில்லைநகர்க்
கொற்றங்குடிமுத க் கூறுநாளெந்நாளோ. (6)

1100 குறைவிலருண்ஞானமுதல்கொற்றங்குடியடிக
ணறைமலர்த்தாட்கன்புபெற்றுநாமிருப்பதெந்நாளோ.

1101 நாளவங்கள்போகாமனன்னெறியைக்காட்டியெமை
யாளவந்தகோலங்கட்கன்புவைப்பதெந்நாளோ (8)

1102 என்னறிவையுள்ளடக்கியென்போல்வருமவுனி
தன்னறிவுக்குள்ளேநான்சாருநாளெந்நாளோ. (9)

1103 ஆறொன்றைநாடினதற்காறுமுண்டாமென்றெமக்குக்
கூறுமவுனியருள்கூடுநாளெந்நாளோ. (10)

1104 நில்லாமனின்றருளேநேரேபாரென்றவொரு
சொல்லான்மவுனியருட்டோற்றுநாளெந்நாளோ. (11)

1105 வைதிகமாஞ்சைசவீமவுனிமவுனத்தளித்த
மெய்திகழ்ந்தென்னல்லல்விடியுநாளெந்நாளோ. (12)

1106 வாக்குமனமற்றம்வுனிமவுனத்தருளே
தாக்கவுமென்னல்லலெல்லாந்தட்டழிவதெந்நாளோ.

## அடியார்வணக்கம்.

1107 வெம்பந்தந்தீர்த்துலகாள்வேந்தன்றிருஞான
சம்பந்தனையருளாற்சாருநாளெந்நாளோ. (1)

1108 ஏரின்சிவபோகமிங்கிவற்கேயென்னவுழ
வாரங்கொள்செங்கையர்தாள்வாரம்வைப்பதெந்நாளோ. ()

1109 பித்தரிறையென்றறிந்துபேதைபாற்றூதனுப்பு
வித்தமிழ்ச்சமர்த்தர்மெய்புகழ்வதெந்நாளோ. (3)

1110 போதவூர்நாடறியப்புத்தர்தமைவாதில்வென்ற
வாதவூரையனன்பைவாஞ்சிப்பதெந்நாளோ. (4)

1111 ஓட்டுடன்பற்றின்றியுலகைத்துறந்தசெல்வப்
பட்டினத்தார்பத்ரகிரிபண்புணர்வதெந்நாளோ. (5)

1112 கண்டதுபொய்யென்றகண்டாகாரசிவமெய்யெனவே
விண்டசிவவாக்கியர்தாண்மேவுநாளெந்நாளோ. (6)

1113 சக்கரவர்த்திதவராஜயோகியெனு
மிக்கதிருமூலனருண்மேவுநாளெந்நாளோ. (7)

1114 கந்தரனுபூதிபெற்றுக்கந்தரனுபூதிசொன்ன
வெந்தையருணகிரியிருக்குநாளெந்நாளோ. (8)

1115 எண்ணரியசித்தரிமையோர்முதலான
பண்ணவர்கள்பத்தருள்பாலிப்பதெந்நாளோ. (9)

## யாக்கையைப்பழித்தல்.

1116 சுக்கிலமுநீருஞ்சொரிமலமுநாறுமுடற்
புக்குழலும்வாஞ்சையினிப்போதுமென்பதெந்நாளோ. (1)

1117 நீர்க்குமிழிபூணமைத்துநின்றுநில்லாமெய்
பார்க்குமிடத்திதன்மேற்பற்றறுவதெந்நாளோ. (2)

1118 காக்கைநரிசெந்நாய்கழுகொருநாள்கூடியுண்டு
தேக்குவிருந்தாமுடலைச்சீயென்பதெந்நாளோ. (3)

1119 செங்கிருமியாதிசெனித்தசென்மபூமியினை
யிங்கெனுடலென்னுமிழுக்கொழிவதெந்நாளோ. (4)

1120 தத்துவர்தொண்ணூற்றறுவர்தாமாய்வாழ்நாட்டைப்
பித்தனேனென்னும்பிதற்றொழிவதெந்நாளோ. (5)

1121 ஊனென்றிநாதனுணர்த்துமதைவிட்டறிவே
னானென்றபாவிதலைநாணுநாளெந்நாளோ. (6)

1122 வேலையிலாவேதன்விதித்தவிந்த்ரசாலவுடன்
மாலைவியாபாரமயக்கொழிவதெந்நாளோ. (7)

1128 ஆழ்ந்துநினைக்கினரோகமாமிவ்வுடலில்
வாழ்ந்துபெரும்பேற்றைமதிக்குநாளெந்நாளோ. (8)

1124 மும்மலச்சேறானமுழுக்கும்பிபாகமெனு
மிம்மலகாயத்துளிகழ்ச்சிவைப்பதெந்நாளோ. (9)

1125 நாற்றமிகக்காட்டுநவவாயில்பெற்றபசுஞ்
சோற்றுத்துருத்திசுமையென்பதெந்நாளோ. (10)

1126 உருவிருப்பவுள்ளேதானூறுமலக்கேணி
யருவருப்புவாழ்க்கையைக்கண்டஞ்சுநாளெந்நாளோ. (11)

மாதரைப்பழித்தல்.

1127 மெய்வீசுநாற்றமெல்லாமிக்கமஞ்சளான்மறைத்துப்
பொய்வீசும்வாயார்புலையொழிவதெந்நாளோ. (1)

1128 திண்ணியநெஞ்சப்பறவைசிக்கக்குழற்காட்டிற்
கண்ணிவைப்போர்மாயங்கடக்குநாளெந்நாளோ. (2)

1129 கண்டுமொழிபேசிமனங்கண்டுகொண்டுகைவிலையாக்
கொண்டுவிடுமானார்பொய்க்கூத்தொழிவதெந்நாளோ.

1130 காமனைவாவென்றிருண்டகண்வலையைவீசுமின்னார்
நாமமறந்தருளைநண்ணுநாளெந்நாளோ. (4)

1131 கண்களில்வெண்பூளைகரப்பக்கருமையிட்ட
பெண்கண்மயறப்பிப்பிழைக்குநாளெந்நாளோ. (5)

1132 வீங்கித்தளர்ந்துவிழுமுலையார்மேல்வீழ்ந்து
தூங்குமதன்சோம்பைத்துடைக்குநாளெந்நாளோ (6)

1133 கச்சிருக்குங்கொங்கைகரும்பிருக்குமின்மாற்றம்
வைச்சிருக்குமாதர்மயக்கொழிவதெந்நாளோ. (7)

1134 பச்சென்றகொங்கைப்பசப்பியர்பாழானமய
லச்சென்றறிந்தருளைநண்ணுநாளெந்நாளோ. (8)

1135 உந்திச்சுழியாழுளத்தைச்சுழித்தகன
தந்தித்தனத்தார்தமைமறப்பதெந்நாளோ. (9)

1136 தட்டுவைத்தசேலைகொய்சகத்திற்சிந்தையெல்லாங்
கட்டிவைக்குமாயமின்னார்கட்டழிவதெந்நாளோ. ()

1137 ஆழாழியென்னவளவுபடாவஞ்சநெஞ்சப்
பாழானமாதர்மயற்பற்றொழிவதெந்நாளோ. (11)

1138 தூயபனித்திங்கள்சுடுவதெனப்பித்தேற்று
மாயமடவார்மயக்கொழிவதெந்நாளோ. (12)

1139 ஏழைக்குறும்புசெயுமேந்திழையார்மோகமெனும்
பாழைக்கடந்துபயிராவதெந்நாளோ. (13)

1140 விண்டுமொழிகுளறிவேட்கைமதுமொண்டுதருந்
தொண்டியர்கள்கட்கடையிற்சற்றொழிவதெந்நாளோ (14)

1141 மெய்யிற்சிலம்பிறக்கமேவுமின்பம்போன்மாதர்
பொய்யிலின்பின்றென்றுபொருந்துநாளெந்நாளோ, ()

## தத்துவமுறைமை.

1142 ஐம்பூதத்தாலேயலக்கழிந்தமோசமற
வெம்பூதமாற்றருளெய்துநாளெந்நாளோ. (1)

1143 சத்தமுதலாம்புலனிற்சஞ்சரித்தகள்வரெனும்
பித்தர்பயந்தீர்ந்துபிழைக்குநாளெந்நாளோ. (2)

1144 நாளும்பொறிவழியைநாடாதவண்ணமெமை
யாளும்பொறியாலருள்வருவதெந்நாளோ. (3)

1145 வாக்காதியானகன்மமாயைதம்பால்வீண்காலம்
போக்காமலுண்மைபொருந்துநாளெந்நாளோ. (4)

1146 மனமானவானரக்கைம்மாலையாகாம
லெனையாளடிகளடிபெய்துநாளெந்நாளோ. (5)

1147 வேட்டைப்புலப்புலையர்மேவாதவண்ணமனக்
காட்டைத்திருத்திக்களைகாண்பதெந்நாளோ. (6)

1148 உந்துபிறப்பிறப்பையுற்றுவிடாதெந்தையருள்
வந்துபிறக்கமனமிறப்பதெந்நாளோ. (7)

1149 புத்தியெனுந்துத்திப்பொறியரவின்வாய்த்தேரை
யொத்துவிடாதெந்தையருளோங்குநாளெந்நாளோ. ()

1150 ஆங்காரமென்னுமதயானைவாயிற்கரும்பா
யேங்காமலெந்தையருளெய்துநாளெந்நாளோ. (9)

1151 சித்தமெனும்பெளவத்திரைகடலில்வாழ்துரும்பாய்
நித்தமலையாதருளினிற்குநாளெந்நாளோ. (10)

1152 வித்தியாதத்துவங்களேழும்வெருண்டோடச்
சுத்தபரபோகத்தைத்துய்க்குநாளெந்நாளோ. (11)

1153 சுத்தவித்தையேமுதலாத்தோன்றுமோரைந்துவகைத்
தத்துவத்தைநீங்கியருள்சாருநாளெந்நாளோ. (12)

1154 பொல்லாதகாமப்புலைத்தொழிலிலென்னறிவு
செல்லாமனன்னெறியிற்சேருநாளெந்நாளோ. (13)

1155 அடிகளடிக்கீழ்க்குடியாயாம்வாழாவண்ணங்
குடிகெடுக்கும்பாழ்மடிமைக்கூறொழிவதெந்நாளோ. ()

1156 ஆனபுறக்கருவியாறுபத்துமற்றுளவும்
போனவழியுங்கூடப்புன்முளைப்பதெந்நாளோ. (15)

1157 அந்தகனுக்கெங்குமிருளானவாறுவறிவில்
வந்தவிருள்வேலைவடியுநாளெந்நாளோ. (16)

1158 புன்மலத்தைச்சேர்ந்துமலபோதம்பொருந்துதல்போய்
நின்மலத்தைச்சேர்ந்துமலநீங்குநாளெந்நாளோ. (17)

1159 கண்டுகண்டுந்தேறுக்கலக்கமெல்லாந்தீர்வண்ணம்
பண்டைவினைவேரைப்பறிக்குநாளெந்நாளோ. (18)

1160 பைங்கூழ்வினைதான்படுசாவியாகவெமக்
கெங்கோன்கிரணவெயிலெய்துநாளெந்நாளோ. (19)

1161 குறித்தவிதமாதியாற்கூடும்வினையெல்லாம்
வறுத்தவித்தாம்வண்ணமருள்வந்திடுநாளெந்நாளோ.

1162 சஞ்சிதமேயாதிசாக்காணமுஞ்சேறும்
வெந்தபொரியாகவருண்மேவுநாளெந்நாளோ. (21)

1163 தேகமுதனன்காத்திரண்டொன்றுப்நின்றிலகு
மோகமிகுமாயைமுடியுநாளெந்நாளோ. (22)

1164 சத்தமுதலாத்தனைழந்திங்கெமக்குணர்த்துஞ்
சுத்தமாமாயைதொடக்கறுவதெந்நாளோ. (23)

1165 எம்மைவினையையிறைபையெம்பாற்காட்டாத
வம்மைதிரோதையகலுநாளெந்நாளோ. (24)

1166 நித்திரையாய்வந்துவினைவழிக்குங்கேவலமாஞ்
சத்துருவைவெல்லுஞ்சமர்த்தறிவதெந்நாளோ. (25)

1167 சன்னல்பின்னலானசகலமெனுங்குப்பையிடை
முன்னவன்ஞானக்கனலைமூட்டுநாளெந்நாளோ. (26)

1168 மாயாவிகாரமலமொழிசுத்தாவத்தை
தேயவருளைத்தொடருநாளெந்நாளோ. (27)

## தன்னுண்மை.

1169 உடம்பறியுமென்னுமகந்தவூழுமெல்லாந்தீரத்
திடம்பெறவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ. (1)

1170 செம்மையறிவாலறிந்துதேக்கா திக்குள்ளிசைந்த
வெம்மைப்புலப்படவேயாமறிவதெந்நாளோ. (2)

1171 தத்துவமாம்பாழ்த்தசடவுருவைத்தான்சுமந்த
சித்துருவாமெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ. (3)

1172 பஞ்சப்பொறியையுயிரென்னுமந்தப்பஞ்சமறச்
செஞ்சவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ. (4)

1173 அந்தக்கரணமுயிராமென்றவநதாங்க
சிந்தையழியவெம்மைத்தேர்ந்தறிவதெந்நாளோ. (5)

1174 முக்குணத்தைச்சீவனென்னுமூடதைவிட்டருளா
லக்கணமேயெம்மையறிந்துகொள்வதெந்நாளோ. (6)

1175 காலையுயிரென்னுங்கலதிகள்சொற்கேளாமற்
சீலமுடனெம்மைத்தெளிந்துகொள்வதெந்நாளோ. (7)

1176 வான்கெடுத்துந்தேடுமதிகேடர்போலவெமை
நான்கெடுத்துத்தேடாமனன்கறிவதெந்நாளோ. (8)

## அருளியல்பு.

1177 ஈனந்தருநாடிதுநமக்குவேண்டாவென்
றூனந்தநாட்டிலவதரிப்பதெந்நாளோ. (1)

1178 பொய்க்காட்சியானபுவனத்தைவிட்டருளா
மெய்க்காட்சியாம்புவனமேவுநாளெந்நாளோ. (2)

1179 ஆதியந்தங்காட்டாமலம்பரம்போலேநிறைந்த
நீதியருட்கடலைச்சேருநாளெந்நாளோ. (3)

1180 எட்டுத்திசைக்கீழ்மேலெங்கும்பெருகிவரும்
வெட்டவெளியின்னூற்றின்மெய்தோய்வதெந்நாளோ.

1181 சூதானமென்றுசுருதியெல்லாமோலமிடு
மீதானமானவெறும்பாழ்மேவுநாளெந்நாளோ. (5)

1182 வெந்துவெடிக்கின்றசிந்தைவெப்பகலத்தண்ணருளாய்
வந்துபொழிகின்றமழைகாண்பதெந்நாளோ. (6)

1183 சூரியர்கள்சந்திரர்கடோன்றாச்சுயஞ்சோதிப
பூரணதேயத்திற்பொருந்துநாளெந்நாளோ. (7)

1184 கன்றுமனவெப்பக்கலக்கமெலாந்தீரவருட்
டென்றல்வந்துவீசுவெளிசேருநாளெந்நாளோ. (8)

1185 கட்டுநமன்செங்கோல்கடாவடிக்குங்கோலாக
வெட்டவெளிப்பொருளைமேவுநாளெந்நாளோ. (9)

1186 சாலக்கபாடத்தடைதீரவெம்பெருமா
னோலக்கமண்டபத்துளோடுநாளெந்நாளோ. (10)

1187 விண்ணவன்றுளென்னும்விரிநிலாமண்டபத்திற்
றண்ணீரருந்தித்தளர்வொழிவதெந்நாளோ. (11)

1188 வெய்யபுலிபார்த்துவிழித்திருந்தவல்லலறத்
துய்பவருளிற்றுயிலுநாளெந்நாளோ. (12)

1189 வெய்யபிறவிவெயில்வெப்பமெலாம்விட்டகல
வையனடிநீழலணையுநாளெந்நாளோ. (13)

1190 வாதப்பிறவிவலைகடலைநீந்தவையன்
பாதப்புணைபிணையைப்பற்றுநாளெந்நாளோ. (14)

1191 ஈனமில்லாமெய்ப்பொருளையிம்மையிலேகாணவெளி
ஞானமெனுமஞ்சனத்தைநான்பெறுவதெந்நாளோ. ()

1192 எல்லாமிறந்தவிடத்தெந்தைநிறைவாம்வடிவைப்
புல்லாமற்புல்லிப்புணருநாளெந்நாளோ. (16)

1193 சடத்துளுயிர்போலெமக்குத்தானுயிராய்ஞான
நடத்துமுறைகண்டுபணிநாம்விடுவதெந்நாளோ. (17)

1194 எக்கணுமாந்துன்பவிருட்கட்லேவிட்டருளாம்
மிக்கரையேறிவெளிப்படுவதெந்நாளோ. (18)

பொருளியல்பு.

1195 கைவிளக்கின்பின்னேபோய்க்காண்பார்போன் மெய்ஞ்ஞா
ன, மெய்விளக்கின்பின்னேபோய்மெய்காண்பதெந்நாளோ

1196 கேடில்பசுபாசமெல்லாங்கீழ்ப்படவுந்தானேமே
லாடுஞ்சுகப்பொருளுக்கன்புறுவதெந்நாளோ. (2)

1197 ஆணவத்தைநீக்கியறிவுடையைவகையாக்
காணவத்தைக்கப்பாலேக்காணுநாளெந்நாளோ. (3)

1198 நீக்கப்பிரியாநினைக்கமறக்கக்கூடாப்
போக்குவரவற்றபொருளணைவதெந்நாளோ. (4)

1199 அண்டருக்குமெய்ப்பில்லைப்பாமாரமுதையென்னகத்திற்
கண்டுகொண்டுநின்றுகளிக்குநாளெந்நாளோ. (5)

1200 காட்டுந்திருவருளேகண்ணாகக்கொண்டுபர
வீட்டின்பமெய்ப்பொருளைமேவுநாளெந்நாளோ. (6)

1201 நானெனதன்மைநழுவியேயெவ்வுயிர்க்குந்
தானெனவுண்மைதனைச்சாருநாளென்னாளோ (7)

1202 சிந்தைமறந்துதிருவருளாய்நிற்பவர்பால்
வந்தபொருளெம்மையுந்தான்வாழ்விப்பதெந்நாளோ.

1203 எள்ளுக்குளெண்ணெய்போலெங்கும்வியாபகமா
யுள்ளவொன்றையுள்ளபடியோருநாளெந்நாளோ (9)

1204 அருவுருவமெல்லாமகன்றதுவாயான
பொருளெமக்குவந்துபுலப்படுவதெந்நாளோ. (10)

1205 ஆரணமுங்காணுவகண்டிதாகாரபரி
பூரணம்வந்தெம்மைபொருந்துநாளெந்நாளோ. (11)

1206 சத்தொடுசித்தாகித்தயங்கியவானந்தபரி
சுத்தவகண்டசிவந்தோன்றுநாளெந்நாளோ. (12)

1207 எங்கெங்கும்பார்த்தாலுமின்புருவாய்நீக்கமின்றித்
தங்குந்தனிப்பொருளைச்சாருநாளெந்நாளோ. (13)

1208 அடிமுடிகாட்டாதசுத்தவம்பரமாஞ்சோதிக்
கடுவெளிவந்தென்னைக்கலக்குநாளெந்நாளோ. (14)

1209 ஒன்றனையுங்காட்டாவுளத்திருளைச்சூறையிட்டு
நின்றபராஞ்சோதியுடனிற்குநாளெந்நாளோ. (15)

1210 எந்தச்சமயமிசைந்துமறிவூடறிவாய்
வந்தபொருளைப்பொருளாவாஞ்சிப்பதெந்நாளோ. (16)

1211 எவ்வாறிங்குற்றுணர்ந்தார்யாவரவர்தமக்கே
யவ்வாறாய்நின்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ. ()

1212 பெண்ணாணலியெனவும்பேசாமலென்னறிவின்
கண்ணூடேநின்றவொன்றைக்காணுநாளெந்நாளோ ()

1213 நினைப்புமறப்புமறநின்றபராஞ்சோதி
தனைப்புலமாவென்னறிவிற்சந்திப்பதெந்நாளோ. (19)

## ஆனந்தவியல்பு.

1214 பேச்சுமூச்சில்லாதபேரின்பவெள்ளமுற்று
நீச்சுநிலைகாணாமனிற்குநாளெந்நாளோ. (1)

1215 சித்தந்தெளிந்தோர்தெளிவிற்றெளிவான
சுத்தசுகக்கடலூட்டோயுநாளெந்நாளோ. (2)

1216 சிற்றின்பமூண்டுழ்சிதையவனந்தங்கடல்போன்
முற்றின்பவெள்ளமென்மைமூடுநாளெந்நாளோ. (3)

1217 எல்லையில்பேரின்பமயமெப்படியென்றோர்தமக்குச்
சொல்லறியாவூமர்கள்போற்சொல்லுநாளெந்நாளோ. (4)

1218 அண்டரண்டகோடியனைத்துமுகாந்தவெள்ளங்
கொண்டதெனப்பேரின்பங்கூடுநாளெந்நாளோ. (5)

1219 ஆதியந்தமில்லாதவாதியனாதியெனுஞ்
சோதியின்பத்தூடேதுலையுநாளெந்நாளோ. (6)

1220 சாலோகமாதிசவுக்கியமும்விட்டநம்பான்
மேலானஞானவின்பமேவுநாளெந்நாளோ. (7)

1221 தற்பரத்திலுள்ளேயுஞ்சாலோகமாதியெனும்
பொற்பறிந்தானந்தம்பொருந்துநாளெந்நாளோ. (8)

1222 உள்ளத்தினுள்ளேதானூறுஞ்சிவானந்த
வெள்ளந்துளைந்துவிடாய்தீர்வதெந்நாளோ. (9)

1223 கன்னலுடன்முக்கனியுங்கற்கண்டுஞ்சீனியுமாய்
மன்னுமின்பவாரமுதைவாய்மடுப்பதெந்நாளோ. ()

1224 மண்ணாடுமூன்றமயக்கமெலாந்தீர்ந்திடவும்
விண்ணாடெழுந்தசுகமேவுநாளெந்நாளோ. (11)

1225 கானற்சலம்போன்றகட்டுழலைப்போய்த்திர
வானமுதவாரிமருவுநாளெந்நாளோ. (12)

1226 தீங்கரும்பென்றாலினியா தென்றாலினிப்பனபோற்
பாங்குறும்பேரின்பம்படைக்குநாளெந்நாளோ. (13)

1227 புண்ணியபாவங்கள்பொருந்தாமெய்யன்பரெல்லா
நண்ணியபேரின்பசுகநாமணைவதெந்நாளோ. (14)

அன்புநிலைமை

1228 தக்காஷிகண்டசரோருகம்போலென்னிதய
மிக்கவருள்கண்டுவிகசிப்பதெந்நாளோ. (1)

1229 வானமுகில்கண்டமயூரபக்ஷிபோலவையன்
ஞானநடங்கண்டாடிக்குநாளெந்நாளோ. (2)

1230 சந்திரனைநாடுஞ்சகோரபக்ஷிபோலறிவில்
வந்தபரஞ்சோதியையாம்வாஞ்சிப்பதெந்நாளோ. (3)

1231 குத்திரமெய்ப்புற்றகத்துக்குண்டலிப்பாம்பான்றாட்டுஞ்
சித்தனையென்கண்ணாற்றெரிசிப்பதெந்நாளோ. (4)

1232 அந்தரத்தேநின்றாடுமானந்தக்கூத்தனுக்கென்
சிந்தைதிரைகொடுத்துச்சேவிப்பதெந்நாளோ. (5)

1233 கள்ளனிவனென்றுமெனைக்கைவிடுதல்காரியமோ
வள்ளலேயென்றுவருந்துநாளெந்நாளோ. (6)

1234 விண்ணாடர்காணாவிமலபரஞ்சோதி
யண்ணாவாவென்றரற்றுநாளெந்நாளோ. (7)

1235 ஏதேதுசெய்தாலுமென்பணிபோய்நின்பணியா
மாதேவாவென்றுவருந்துநாளெந்நாளோ. (8)

1236 பண்டுங்காணேனான்பழம்பொருளேபின்னுமுனைக்
கண்டுங்காணேனெனவுங்கைதவிப்பதெந்நாளோ. (9)

1237 பொங்கேதமானபுழுக்கமெல்லாந்தீரவின்ப
மெங்கேயெங்கேயென்றிரங்குநாளெந்நாளோ. (10)

1238 கடலின்மடைகண்டதுபோற்கண்ணீராறாக
வுடல்வெதும்பிமூர்ச்சித்துருகுநாளெந்நாளோ. (11)

1239 புலர்ந்தேன்முகஞ்சருகாய்ப்போனேனிற்காணா
வலந்தேனென்றேங்கியழுங்குநாளெந்நாளோ. (12)

1240 புண்ணீர்மையாளர்புலம்புமாபோற்புலம்பிக்
கண்ணீருங்கம்பலையுங்காட்டுநாளெந்நாளோ. (13)

1241 போற்றேனென்றாலுமெனைப்புந்திசெய்யும்வேதனைக்கிங்
காற்றேனாற்றேனென்றரற்றுநாளெந்நாளோ. (14)

1242 பொய்முடங்கும்பூமிசிலபொட்டலறப்பூங்கமலன்
கைமுடக்கான்சனனக்கட்டறுவதெந்நாளோ. (15)

1243 கற்குணத்தைப்போன்றவஞ்சக்காரர்களைக்காணாம
னற்குணத்தார்கைக்கோத்துநான்றிரிவதெந்நாளோ. ()

1244 துட்டனைமாமாயைச்சுழனீக்கியந்தரமே
விட்டனையோவென்றுவியக்குநாளெந்நாளோ. (17)

அன்பர்நெறி.

1245 அத்துவாவெல்லாமடங்கச்சோதித்தபடிச்
சித்துருவாய்நின்றார்தெளிவறிவதெந்நாளோ. (1)

1246 மூச்சற்றுச்சிந்தைமுயற்சியற்றுமூதறிவாய்ப்
பேச்சற்றோர்பெற்றவொன்றைப்பெற்றிடுநாளெந்நாளோ.

1247 கோட்டாலையானகுணமிறந்தநிர்க்குணத்தோர்
தேட்டாலேதேடுபொருள்சேருநாளெந்நாளோ. (3

248 கெடுத்தேதபசுத்துவத்தைதக்கேடிலாவானந்த .
மடுத்தோரடுத்தபொருட்கார்வம்வைப்பதெந்நாளோ. (4)

1249 கற்கண்டாலோடுகின்றகாக்கைபோற்பொய்ம்மாயச்
சொற்கண்டாலோடுமன்பர்தோய்வறிவதெந்நாளோ.

1250 மெய்த்தகுலங்கல்விபுனைவேடமெல்லாமோடவிட்ட
சித்தமொன்றுஞ்சேராச்செயலறிவதெந்நாளோ. (6)

1251 குற்றச்சமயக்குறும்படர்க்குத்தற்போத
மற்றவர்கட்கற்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ. (7)

1252 தர்க்கமிட்டுப்பாழாஞ்சமயத்தர்க்கம்விட்டு
நிர்க்குமவர்கண்டவழிநேர்பெறுவதெந்நாளோ. (8)

1253 வீறியவேதாந்தமுன்மிக்ககாலாந்தவரை
யாறுமுணர்ந்தோருணர்வுக்கன்புவைப்பதெந்நாளோ.

1254 கண்டவிடமெல்லாங்கடவுண்மயமென்றறிந்து
கொண்டநெஞ்சநேயநெஞ்சிற்கொண்டிருப்பதெந்நாளோ

1255 பாக்கியங்களெல்லாம்பழுத்துமனம்பழுத்தோர்
நோக்குந்திருக்கூத்தைநோக்குநாளெந்நாளோ. (11)

1259 எவ்வுயிருந்தம்முயிர்போலெண்ணுந்தபோதனர்கள்
செவ்வறிவைநாடிமிகச்சிந்தைவைப்பதெந்நாளோ ()

அறிஞருரை.

1257 இருநிலனாய்த்தீயாகியென்றதிருப்பாட்டின்
பெருநிலையைக்கண்டணைந்துபேச்சறுவதெந்நாளோ ()

1258 அற்றவர்கட்கற்றசிவனாமென்றவத்துவித
முற்றுமொழிகண்டருளின்மூழ்குநாளெந்நாளோ. (2)

1259 தானென்னைமுன்படைத்தானென்றதகவுரையை
நானென்னுமுண்மைபெற்றுநாமுணர்வதெந்நாளோ (3)

1260 என்னுடையதோழனுமாமென்றதிருப்பாட்டி
னன்னெறியைக்கண்டுரிமைநாஞ்செய்வதெந்நாளோ.

1261 ஆருடனேசேருமறிவென்றவவ்வுரையைத்
தேருப்படிக்கருடான்சேருநாளெந்நாளோ. (5)

1262 உன்னிலுன்னுமென்றவுறுமொழிபாலென்னிதயந்
தன்னிலுன்னிநன்னெறியைச்சாருநாளெந்நாளோ. (6)

1263 நினைப்பறவேதாநினைந்தேனென்றநிலைநாடி
யனைத்துமாமப்பொருளிலாழுநாளெந்நாளோ. (7)

1264 சென்றுசென்றேயணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாகி
நின்றுவிடுமென்றநெறிநிற்குநாளெந்நாளோ. (8)

1265 ஆதியந்தமில்லாவரியபராஞ்சோதியென்ற
நீதிமொழிகண்டதுவாய்நிற்குநாளெந்நாளோ. (9)

1266 பிறிதொன்றிலாசையின்றிப்பெற்றிருந்தேனென்ற
நெறியுடையான்சொல்லினிலைநிற்குநாளெந்நாளோ. ()

1267 திரையற்றநீர்போற்றெளியவெனத்தேர்ந்த
வுரைபற்றியுற்றங்கொடுக்குநாளெந்நாளோ. (11)

1268 அறியாவறிவிலவிழ்ந்தேறவென்ற
நெறியாமுறையுணர்ந்துநிற்குநாளெந்நாளோ. (12)

1269 எனக்குணியென்றுமியற்கையாப்பின்னு
முனக்குணனென்றவுறுதிகொள்வதெந்நாளோ. (13)

1270 அறிவையறிவதுவேயாகும்பொருளென்
றுறுதிசொன்னவுண்மையினையோருநாளெந்நாளோ.

நிற்குநிலை.

1271 பண்ணினிசைபோலப்பரமன்பானின்றதிற
லெண்ணியருளாகியிருக்குநாளெந்நாளோ. (1)

1272 அறிவோடறியாமையற்றறிவினூடே
குறியிலறிவுவந்துகூடுநாளெந்நாளோ. (2)

1273 சொல்லான்மனத்தாற்றொடராச்சம்பூரணத்தி
னில்லாநிலையாய்நிலைநிற்பதெந்நாளோ. (3)

1274 செங்கதிரின்முன்மதியந்தேசடங்கிநின்றிடல்போ
லங்கணனார்தாளிலடங்குநாளெந்நாளோ. (4)

1275 வானூடடங்கும்வளிபோலவின்புருவாங்
கோனூடடங்குங்குறிப்பறிவதெந்நாளோ. (5)

1276 செப்பரியதென்கருணைச்சிற்சுகனார்பூரணத்தி
லப்பினிடையுப்பாயணையுநாளெந்நாளோ. (6)

1277 தூயவறிவானசுகரூபசோதிதன்பாற்
றீயினிரும்பென்னத்திகழுநாளெந்நாளோ. (7)

1278 தீதணையாக்கர்ப்பூரதீபமெனநான்கண்ட
சோதியுடனொன்றித்துரிசறுவதெந்நாளோ. (8)

1279 ஆராருக்காணாதவற்புதனார்பொற்படிக்கீழ்
நீரார்நிழல்போனிலவுநாளெந்நாளோ. (9)

1280 எட்டத்தொலையாதவெங்கைபிரான்சந்நிதியிற்
பட்டப்பகல்விளக்காய்ப்பண்புறுவதெந்நாளோ. (10)

1281 கருப்புவட்டைவாய்மடுத்துக்கண்டார்நாப்போல
விருப்புவட்டாவின்புறவைமேவுநாளெந்நாளோ. (11)

1282 துச்சப்புலனாற்சுழலாமற்றண்ணருளா
லுச்சிக்கதிர்ப்படிகமொவ்வுநாளெந்நாளோ. (12)

1283 இம்மாநிலத்திலிருந்தபடியேயிருந்து
சும்மாவருளைத்தொட்டருநாளெந்நாளோ. (13)

1284 தானவனுந்தன்மையெய்தித்தண்டமெனவண்டமெங்கு
ஞானமதயானைநடத்துநாளெந்நாளோ. (14)

1285 ஒன்றிரண்டுமில்லதுவாயொன்றிரண்டுமுள்ளதுவாய்
நின்றசமத்துநிலைநேர்பெறுவதெந்நாளோ. (15)

1286 பாசமகலாமற்பதியிற்கலவாமன்
மாசில்சமத்துமுத்திவாய்க்குநாளெந்நாளோ. (16)

1287 சிற்றறிவுமெள்ளச்சிதைந்தெம்மான்பேரறிவை
யுற்றறியாவண்ணமறிந்தோங்குநாளெந்நாளோ. (17)

1288 தந்திரத்தைமந்திரத்தைச்சாரினவையாமறிவென்
றெந்தையுணர்வேவடிவாவெய்துநாளெந்நாளோ. (18)

1289 போக்குவரவற்றவெளிபோனிறைந்தபோதநிலை
நீக்கமறக்கூடிநினைப்பறுவதெந்நாளோ. (19)

1290 காண்பானுங்காட்டுவதுங்காட்சியுமாய்நின்றவந்த
வீண்பாசவம்போயதுவாய்மேவுநாளெந்நாளோ. (20)

1291 வாடாதேநானுவாய்மாயாதேயெங்கோவை
நாடாதேநாடிநலம்பெறுவதெந்நாளோ. (21)

1292 ஆடலேகாட்டியெமதாடலொழித்தாண்டான்பொற்
றாடலைமேற்சூடித்தழைக்குநாளெந்நாளோ. (22)

1293 மேலொடுகீழில்லாதவித்தகரோர்தம்முடனே
பாலொடுநீர்போற்கலந்துபண்புறுவதெந்நாளோ. (23)

1294 அறியாதறிந்தெனையாளண்ணலைநாமாகக்
குறியாதவண்ணங்குறிக்குநாளெந்நாளோ. (24)

1295 ஓராமன்மந்திரமுமுன்னுமனப்பானைப்
பாராமற்பார்த்துப்பழகுநாளெந்நாளோ. (25)

1296 ஊன்பற்றுநின்றுணர்வுபற்றுப்பூரணன்பால்
வான்பற்றுங்கண்போன்மருவுநாளெந்நாளோ. (26)

1297 ஆண்டான்மவுனியளித்தவறிவாலறிவைத்
தீண்டாமற்றீண்டித்துலங்குநாளெந்நாளோ. (27)

1298 ஆணவத்தோடத்துவிதமானபடிமெய்ஞ்ஞானத்
தாணுவினோடத்துவிதஞ்சாருநாளெந்நாளோ. (28)

நிலைபிரிந்தோர்கூடுதற்குபாயம்.

1299 கன்மநெறிதப்பிற்கடுநரகென்றெந்நாளு
நன்மைதருஞானநெறிநாமணைவதெந்நாளோ. (1)

1300 ஞானநெறிதானேநழுவிடினுமுப்பதத்து
ளானமுத்திநல்குமெனவன்புறுவதெந்நாளோ. (2)

1301 பன்மார்க்கமானபலவழிபட்டேனுமொரு
சொன்மார்க்கங்கண்டுதுலங்குநாளெந்நாளோ. (3)

1302 அத்துவிதமென்றவனனியச்சொற்கண்டுணர்ந்து
சுத்தசிவத்தைத்தொடருநாளெந்நாளோ. (4)

1308 கேட்டன்முதனான்காலேகேடிலாநாற்பதமும்
வாட்டமறவெமக்குவாய்க்குநாளெந்நாளோ. (5)

1304 என்னதியானென்பதறவெவ்விடமுமென்னுசான்
சன்னிதியாக்கண்டுநிட்டைசாதிப்பதெந்நாளோ, (6)

1305 நாம்பிரமமென்றுகூடவேயொன்றுண்டாமாற்
றேம்பியெல்லாமொன்றாய்த்திகழுநாளெந்நாளோ. (7)

1396 முச்சகமேயாதிமுழுதுமகண்டாகார
சச்சிதானந்தசிவந்தானென்பதெந்நாளோ. (8)

1307 எவ்வடிவும்பூரணமாமெந்தையுருவென்றிசைந்த
வவ்வடிவுக்குள்ளேயடங்குநாளெந்நாளோ. (9)

1308 சிந்திக்கதெல்லாஞ்சிவபூரணமாக
வந்தித்துவாழ்த்திவணங்குநாளெந்நாளோ. (10)

1309 தாங்கியபார்விண்ணாதிதானேஞானாக்கினியா
யோங்குமியோகவுணர்வுற்றிடுநாளெந்நாளோ. (11)

1310 ஆசனமூர்த்தங்களறவகண்டாகாரசிவ
பூசைசெயவாசைபொருந்துநாளெந்நாளோ. (12)

1311 அஞ்செழுத்தினுண்மையதுவானவப்பொருளை
நெஞ்சழுத்தியொன்றாகிநிற்குநாளெந்நாளோ. (13)

1312 அவ்வுயிர்போலெவ்வுயிருமானபிரான்றன்னடிமை
யெவ்வுயிருமென்றுபணியாஞ்செய்வதெந்நாளோ. ()

1313 தேசிகர்கோனானதிறன்மவுனிநந்தமக்கு
வாசிகொடுக்கமகிழுநாளெந்நாளோ. (15)

1314 குருலிங்கசங்கமமாக்கொண்டதிருமேனி
யருண்மயமென்றன்புறறருள்பெறுவதெந்நாளோ. ()

---

## காண்பேனோவென்கண்ணி.

1315 சிந்திக்குந்தோறுந்தெவிட்டாவமுதேயென்
புந்திக்குணீதான்பொருந்திடவுங்காண்பேனோ. (1)

1316 கேவலத்தினுண்கிடந்துகீழ்ப்படாதின்பவருட்
காவலன்பாலொன்றிக்கலந்திடவுங்காண்பேனோ. (2)

1317 துரியங்கடந்தவொன்றேனுவெளியாய்நின்ற
பெரியநிறைவேயுனைநான்பெற்றிடவுங்காண்பேனோ ()

1318 மாசற்றவன்பர்நெஞ்சேமாறுகபெட்டகமாத்
தேசுற்றமாமணிநின்றேசினையுங்காண்பேனோ (4)

1319 மாயாவிகாரமலமகலவெந்தைபிரா
னேயானுபூதிநிலைபெறவுங்காண்பேனோ (5)

1320 பொய்யுலகும்பொய்யுறவும் பொய்யுடலும்பொய்யெனவே
மெய்யநினைமெய்யெனவேமெய்யுடனேகாண்பேனோ.

1321 வாலற்றபட்டமெனமாயாமனப்படலங்
காலற்றுவிழவுமுக்கண் ணுடையாய்காண்பேனோ. (7)

1322 உள்ளும்புறம்புமொருபடித்தாய்நின்றுசுகக்
கொள்ளும்படிக்கிறைநீகூட்டிடவுங்காண்பேனோ. (8)

1323 காட்டுகின்றமுக்கட்கரும்பேகனியேயென்
னுட்டமெல்லாந்தீரவுனதாடலையுங்காண்பேனோ. (9)

1324 தூங்காமற்றூங்கிச்சுகப்பெருமானின்னிறைவி
னீங்காமனிற்குநிலைபெறவுங்காண்பேனோ. (10)

1325 வாதவூராளிதனைவான்கருணையால்விழுங்கும்
போதவூரேறேநின்பொன்னடியுங்காண்பேனோ. (11)

1326 சாட்டையிலாப்பம்பரம்போலாடுஞ்சடசால
நாட்டமறவெந்தைசுத்தஞானவெளிகாண்பேனோ. ()

1327 மன்றுநிம்வாழ்வேமரகதஞ்சேர்மாணிக்கக்
குன்றேநின்றாட்கீழ்க்குடிபெறவுங்காண்பேனோ. (13)

1328 பொய்யென்றறிந்துமெனைப்போகவொட்டாதயவித்த
வையங்கனமயக்கமாற்றிடவுங்காண்பேனோ. (14)

1329 தாயினுநல்லதயாளுவேநின்னையுன்னித்
தீயின்மெழுகொத்துருகுஞ்சிந்தைவரக்காண்பேனோ.

1330 என்செயினுமென்பெறினு மென்னிறைவாவேழையன்
யா, னின்செயலென்றுன்னுநினைவுவரக்காண்பேனோ.

1331 எள்ளத்தனையுமிரக்கமிலாவன்பாவி
யுள்ளத்துமெந்தையுலாவிடவுங்காண்பேனோ. (17)

1332 வஞ்சகத்துக்காலயமாம்வல்வினையேனுகெடுவே
னெஞ்சகத்திலையாநீநேர்பெறவுங்காண்பேனோ. (18)

1333 தொல்லைப்பிறவித்துயர்கெடவுமெந்தைபிரான்
மல்லற்கருணைவழங்கிடவுங்காண்பேனோ. (19)

1334 வாளாருங்கண்ணார்மயற்கடலிலாழ்ந்தேன்சற்
றுளாகவெந்தையருள்செயவுங்காண்பேனோ. (20)

1335 பன்சாய்ப்பறக்குநெஞ்சப்பாவியைநீகூவியையா
வஞ்சாதேயென்றின்னருள்செயவுங்காண்பேனோ. ()

1336 ஆடுகறங்காகியலமந்துழன்றுமனம்
வாடுமெனையையாநீவாவெனவுங்காண்பேனோ. (22)

1337 சிட்டர்க்கெளியசிவனேயோதீவினையேன்
மட்டற்றவாசைமயக்கறவுங்காண்பேனோ. (23)

1338 உண்ணின்றுணர்த்துமுலப்பிலாவொன்றேநின்
றண்ணென்றசாந்தவருள்சார்ந்திடவுங்காண்பேனோ. ()

1339 ஓடுங்கருத்தொடுங்கவுள்ளுணர்வுதோன்றநினைக்
கூடும்படிக்கிறைநீகூட்டிடவுங்காண்பேனோ. (25)

1340 வாக்கான்மனத்தான்மதிப்பரியாய்நின்னருளை
நோக்காமனோக்கிநிற்குநுண்ணறிவுகாண்பேனோ. (26)

1341 இவ்வுடம்புநீங்குமுன்னேயெந்தாய்கேளின்னருளா
மவ்வுடம்புக்குள்ளேயவதரிக்கக்காண்பேனோ. (27)

1342 நித்தமாயொன்றாய்நிரஞ்சனமாய்நிர்க்குணமாஞ்
சுத்தவெளிநீவெளியாய்த்தோன்றிடவுங்காண்பேனோ.

1343 கண்ணிறைந்தமோனக்கருத்தேயென் கண்மணியென்
னுண்ணிறைந்தமானமயொழிந்திடவுங்காண்பேனோ ()

1344 அத்தாவிமலாவருளாளாவானந்த
சித்தாவெனக்குனருள்செய்திடவுங்காண்பேனோ (30)

1345 வீணேபிறந்திறந்துவேசற்றேனாசையறக்
காணேனிறைநின்கருணைபெறக்காண்பேனோ. (31)

1346 சட்டைபொத்தவிவ்வுடலைத்தள்ளுமுன்னேநான்சகச
நிட்டையைப்பெற்றையாநிருவிகற்பங்காண்பேனோ ()

1347 எல்லாந்தெரியுமிறைவாவென்னலலெல்லாஞ்
சொல்லாமுனீதான்றெருக்குத்திரங்கக்காண்பேனோ. ()

1348 அண்டபகிரண்டமனைத்துமொருபடித்தாக்
கண்டவர்கள்கண்டதிருக்காட்சியையுங்காண்பேனோ.

1349 ஊனிருந்தகாயமுடனிருப்பவெந்தைநின்பால்
வானிருந்தவென்னவுநான்வந்திருக்கக்காண்பேனோ. ()

1350 தினையத்தனையுந்தெளிவறியாய்ப்பாவியே
னினைவிற்பரம்பொருணீநேர்பெறவுங்காண்பேனோ. ()

1351 துன்பமெனுந்திட்டனைத்துஞ்சூறையிடவையாவே
யின்பவெள்ளம்வந்திங்கெதிர்ப்படவுங்காண்பேனோ.()

## ஆகாதோவென்கண்ணி.

1352 கல்லாதநெஞ்சங்கரைந்துருகவெத்தொழிற்கும்
வல்லாய்நின்னின்பம்வழங்கினலாகாதோ. (1)

1353 என்னையறியவெனக்கறிவாய்நின்றருணின்
றன்னையறிந்தின்பநலஞ்சாரவைத்தாலாகாதோ. (2)

1354 பொய்ம்மயமேயானபுரைதீரவெந்தையின்ப
மெய்ம்மயம்வந்தென்னைவிழுங்கவைத்தாலாகாதோ.

1355 மட்டில்லாச்சிற்சுகமாய்வாழ்வேநின்னின்பமயஞ்
சிட்டர்போல்பானருந்தித்தேக்கவைத்தலாகாதோ. ()

1356 அத்தாநின்பொற்றாளடிக்கேயனுதினமும்
பித்தாக்கியின்பம்பெருகவைத்தாலாகாதோ. (5)

1357 மெல்லியலார்மோகவிழற்கிறைப்பேனையாநின்
னெல்லையிலானந்தநலமிச்சித்தாலாகாதோ. (6)

1358 சுட்டழகாவெண்ணுமனஞ்சூறையிட்டானந்தமயக்
கட்டழகாநின்னைக்கலக்கவைத்தாலாகாதோ. (7)

1359 சோதியேநந்தாச்சுகவடிவேதூவெளியே
யாதியேநின்னையறியவைத்தாலாகாதோ. (8)

1360 நேசஞ்சிறிதுமிலேனின்மலனேநின்னடிக்கே
வாசஞ்செயவிங்கிவாவென்றாலாகாதோ. (9)

1361 என்னறிவுக்குள்ளேயிருந்ததுபோலேபாவே
நின்னறிவுணின்னுடன்பாணிற்கவைத்தாலாகாதோ. ()

1362 ஆதிப்பிரானேயென்னல்லிருளகச்
சோதிப்பிரகாசமயந்தோன்றுவித்தாலாகாதோ. (11)

1363 ஆசைச்சுழற்கடலிலாழாமலேயாநின்
னேசப்புணைத்தாணிறுத்தினாலாகாதோ. (12)

1364 பாசநிகளங்களெல்லாம்பஞ்சாகச்செஞ்செவே
யீசவெனைவாவென்றிரங்கினாலாகாதோ. (13)

1365 ஓயாவுள்ளன்பாயுருகிவாய்விட்டாற்றிச்
சேயாகியெந்தைநின்னைச்சேரவைத்தாலாகாதோ. ()

1366 ஆதியாம்வாழ்வாயகண்டிதமாய்நின்றபரஞ்
சோதீயென்னைத்தொழும்பனென்றாலாகாதோ. (15)

1367 விண்ணாரக்கண்டவிழிபோற்பரஞ்சோதி
கண்ணாநின்னிறைவைக்காணவைத்தாலாகாதோ. ()

1388 சோராமற்சேர்ந்துநின்றுசின்மயனைநின்மயத்தைப்
பாராமற்பாரெனநீபுகலும்வைத்தாலாகாதோ. (17)

1369 கண்ணாடிபோலவெல்லாங்காட்டுந்திருவருளை
யுண்ணாடியையாவுருகவைத்தாலாகாதோ. (18)

1370 மூலவிருள்கால்வாங்கமுதறிவுதோன்றவருட்
கோலம்வெளியாகவெந்தைகூடவித்தாலாகாதோ. (19)

1371 சாற்றரியவின்பவெள்ளந்தாக்குமதினீமூழ்கி
ஆற்றமுறுமென்னைவதினுண்மைசொன்னாலாகாதோ.

1372 கையுங்குவித்திரண்டுகண்ணருவிபெய்பவரு
ளையநின்றாட்கீழேபடிமைநின்றாலாகாதோ. (21)

---

## இல்லையோவென்கண்ணி.

---

1373 ஏதுந்தெரியாதெனை மறைத்தவல்லிருளை
நாதநீக்கவொருஞானவிளக்கில்லையோ. (1)

1373 பணியற்றுநின்றுபரனைதப்பறவென்கண்ணுண்
மணியொத்தசோதியின்பவாரியெனக்கில்லையோ (2)

1375 எம்மாலறிவதறவெம்பெருமான்யாதுமின்றிச்
சும்மாவிருக்கவொருசூத்திரந்தானில்லையோ. (3)

1376 நாய்க்குங்கடையானேனாதநின்னின்பமயம்
வாய்க்கும்படியினிமேலோர்மந்திரந்தானில்லையோ. (4)

1377 ஊனாகநிற்குமுணர்வைமறந்தையாநீ
தானாகநிற்கவொருதந்திரந்தானில்லையோ. (5)

1378 அல்லும்பகலுமகண்டவடிவேயுனைநான்
புல்லும்படியெனக்கோர்போதனைதானில்லையோ. (6)

# வேண்டாவோவென்கண்ணி.



1379 கண்டவடிவெல்லாநின்காட்சியென்றேகைகுவித்துப்
பண்டுமின்றுநின்றவென்னைப்பார்த்திரங்கவேண்டாவோ. ()

1380 வாதனையோடாடுமனப்பாம்புமாயவொரு
போதனைதந்தையாபுலப்படுத்தவேண்டாவோ. (2)

1381 தன்னையறியத்தனியறிவாய்நின்றருளு
நின்னையறிந்தென்னறிவைநீங்கிநிற்கவேண்டாவோ. ()

1382 அள்ளக்குறைபாவகண்டிதானந்தமெனும்
வெள்ளமெனக்கையாவெளிப்படுத்தவேண்டாவோ. ()

1393 அண்டனேயண்டரமுதேயென்னாருயிரே
தொண்டனேற்கின்பந்தொகுத்திரங்கவேண்டாவோ ()

1384 பாராதேநின்றுபகையாதேசும்மாதான்
வாராயெனவும்வழிகாட்டவேண்டாவோ. (6)



# நல்லறிவேயென்கண்ணி.



1385 எண்ணிறைந்தமேன்மைபடைத்தெவ்வுயிர்க்குமவ்வுயிராய்க்
கண்ணிறைந்தசோதியைநான்காணவாநல்லறிவே. (1)

1386 சித்தானநாமென்சடத்தைநாமென்னவென்றுஞ்
சத்தானவுண்மைதனைச்சாரவாநல்லறிவே (2)

1387 அங்குமிங்குமெங்குநிறைபற்புதனார்பொற்பறிந்து
பங்கயத்துள்வண்டாய்ப்பயன்பெறவாநல்லறிவே. (3)

1388 கான்றசோறென்னவிந்தக்காசினிவாழ்வத்தனையுந்
தோன்றலருள்வெளியிற்றோன்றவாநல்லறிவே. (4)

## பலவகைக்கண்ணி.

1889 என்னரசேகேட்டிலேயோவென்செயலோவேதுமிலை
தன்னரசுநாடாக்கித்தவங்கூத்தாடியதே. (1)

1390 பண்டொருகானின்பாற்பழக்கமுண்டோவெந்தைநினை
க், கண்டொருகாற்போற்றக்கருத்துங்கருதியதே. (2)

1391 கண்டனவேகாணுமன்றிக்காணுவோகாணுமென்
கொண்டறிவேனெந்தைநினைக்கூடுங்குறிப்பினையே. ()

1392 கல்லாலடியில்வளர்கற்பகமேயென்னளவோ
பொல்லாவினைக்குப்பொருத்தந்தான்சொல்லாயே. (4)

1393 தப்பிதமொன்றின்றியதுதானாகநிற்கவுண்மை
செப்பியதுமல்லாலென்சென்னியதுதொட்டனையே. (5)

1394 மாசானநெஞ்சனிவன்வஞ்சனெனன்றேவாய்திறந்து
பேசாமவுனம்பெருமான்படைத்ததுவே. (6)

1395 கற்பதெல்லாங்கற்றே முக்கண்ணுடையாய்நின்பணியா
ய், நிற்பதுகற்றன்றேநிருவிகற்பமாவதுவே. (7)

1396 முன்னளவில்கன்மமுபன்முனிவனென்றே
வென்னளவிலெந்தாயிரங்காதிருந்ததுவே. (8)

1397 நெஞ்சகம்வேறுகிநினைக்கூடவெண்ணுகின்ற
வஞ்சகனுக்கின்பமெந்தாய்வாய்க்குமாறெவ்வாறே (9)

1398 பள்ளங்கடோறும்பாந்தபுனல்போலுலகி
னுள்ளம்பாந்தாலுடையாயென்செய்வேனே. (10)

1399 முன்னினைக்கப்பின்மறைக்குமூடவிருளாகெடுவே
னென்னினைக்கவென்மறக்கவெந்தைபெருமானே. (11)

1400 வல்லாளாமோனுநின்வான்கருணையென்னிடத்தே
யில்லாதேபோனுலெவ்வண்ணமுய்வேனே. (12)

1401 வாக்குமனமுமவுனமுறவெங்ஙனைதநின்னை
நோக்குமவுனமிந்தநூலறிவுமுண்டாமோ. (13)

1402 ஒன்றாய்ப்பலவாயுலகமெங்குந்தானேயாய்
நின்றாயையாவென்னைநீநீங்கற்கெளிதாமோ. (14)

1403 ஆவித்துணையேயருமருந்தேயென்றன்னைநீ
கூவியழைத்தின்பங்கொடுத்தாற்குறைவாமோ. (15)

1404. எத்தனையோநின்விளையாட்டெந்தாய்கேளிவ்வளவென்
றத்தனையுமென்னாலறியுந்தரமாமோ. (16)

1405 தேடுவார்தேடுஞ்சிவனேயோநின்றிருத்தாள்
கூடுவான்பட்டதுயர்கூறற்கெளிதாமோ. (17)

1406 பற்றினதைப்பற்றுமெந்தாய்பற்றுவிட்டாற்கேவலத்தி
லுற்றுவிடுநெஞ்சமுனையொன்றிநிற்பதெப்படியோ. ()

1407 ஒப்பிலாவொன்றேநின்னுண்மையொன்றுங்காட்டாமற்
பொய்ப்புவியைமெய்போற்புதுக்கிவைத்ததென்னேயோ.

1408 காலால்வழிநடவுங்காலத்தேகண்முளைத்தாற்
போலேயெனதறிவிற்போந்தறிவாய்நில்லாயோ. (20)

1409 தன்னரசுநாடாஞ்சடசாலபூமியிசை
யென்னரசேயென்னையிறைபாகநாட்டினையோ. (21)

1410 திங்கண்முதாநின்றிருவாக்கைவிட்டாசே
பொங்குவிடமனையபொய்ந்நூல்புலப்புவதேன். (22)

1411 உன்னவுன்னவென்னையெடுத்துள்விழுங்குநின்னிறைவை
யின்னமின்னங்காணமலெந்தாய்சுழல்வேனோ. (23)

1412 ஆராவமுதனையவானந்தவாரியென்பாற்
றாராமலையாநீதள்ளிவிடவந்ததென்னோ. (24)

## நின்ற நிலை

1413 நின்றநிலையேநிலையாவைத்தானந்த
நிலைதானைநிருவிகற்பநிலையுமாகி
யென்றுமழியாதவின்பவெள்ளந்தேக்கி
யிருக்கவெனைத்தொடர்ந்துதொடர்ந்திழுக்குமந்தோ.

14 இருக்காதிமறைமுடிவுஞ்சிவாகமாதி
யிதயமுங்கைகாட்டெனவேயிதயத்துள்ளே
யொருக்காலேயுணர்ந்தவர்கட்கெக்காலுந்தா
னொழியாதவின்பவெள்ளமுலவாநிற்கும். (2)

1415 கற்றதுங்கேட்டதுந்தானேயேதுக்காகக்
கடபடமென்றுருட்டுதற்கோகல்லாலெம்மான்
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு
குணங்குறியற்றின்பநிட்டைகூடவன்றோ. (3)

---

## பாடுகின்றபனுவல்.



வஞ்சிவிருத்தம்.

1416 பாடுகின்றபனுவலோர்க - டேடுகின்றசெல்வமே
நாடுகின்றஞானமன்றி - லாடுகின்றவழகனே. (1)

1417 அத்தனென்றநின்னையே - பத்திசெய்துபனுவலாற்
பித்தனின்றுபேசவே - வைத்ததென்னவாரமே. (2)

1418 சிந்தையன்புசேரவே - நைந்துநின்னைநாடினேன்
வந்துவந்துளின்பமே - தந்திரங்குதானுமே. (3)

1419 அண்டாண்டயாவுமே - கொண்டுநின்றகோலமே
தொண்டர்கண்டுசொரிகணீர் - கண்டநெஞ்சுகரையுமே.

1420 அன்னைபோலவருண்மிகுத்து-மன்னுஞானவாதனை
யென்னையேயெனக்களித்த-வின்னையானுநினைவனே. ()

## ஆனந்தக்களிப்பு.



சங்கர சங்கர சம்பு - சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

1421 ஆதியனாதியுமாகி - எனக்
கானந்தமாயறிவாய்நின்றிலங்குஞ்
சோதிமவுனியாய்த்தோன்றி - அவன்
சொல்லாதவார்த்தையைச்சொன்னாண்டிதோழி—சங்கர.

1422 சொன்னசொல்லேதென்றுசொல்வேன் - என்னைச்
சூதாய்த்தனிக்கவேசும்மாவிருத்தி
முன்னிலையேதுமில்லாதே - சுக
முற்றச்செய்தேயெனைப்பற்றிக்கொண்டாண்டி—சங்கர.

1423 பற்றியபற்றறவுள்ளே - தன்னைப்
பற்றச்சொன்னான்பற்றிப்பார்த்தவிடத்தே
பெற்றதையேதென்றுசொல்வேன் - சற்றும்
பேசாதகாரியம்பேசினான்றோழி—சங்கர. (3)

1424 பேசாவிடும்பைகள்பேசிச் - சுத்தப்
பேயங்கமாகிப்பிதற்றித்திரிந்தேன்
ஆசாபிசாசைத்துரத்தி - ஐய
னடியிணைக்கீழேயடக்கிக்கொண்டாடி—சங்கர. (4)

1425 அடக்கிப்புலனைப்பிரித்தே - அவ
னாகியமேனியிலன்பைவளர்த்தேன்
டக்கிக்கொண்டானென்னைத்தன்னுட் - சற்றும்
வாய்பேசாவண்ணமாயுஞ்செய்தாண்டி—சங்கர.

1426 மரபைக்கெடுத்தனன்கெட்டேன் - இத்தை
வாய்விட்டுச்சொல்லிடின்வாழ்வெனக்கில்லை
காவுபுருஷனுமல்லன் - என்னைக்
காக்குந்தலைமைக்கடவுள்காணின்னே—சங்கர.
1427 கடலின்மடைவிண்டதென்ன - இரு
கண்களுமானந்தக்கண்ணீர்சொரிய
உடலும்புளகிதமாக - என
துள்ளமுருகவுபாயஞ்செய்தாண்டி—சங்கர. (9)
1428 உள்ளதுமில்லதுமாய் - முன்
உணர்வதுவாயுன்னுளங்கண்டதெல்லாந்
தள்ளெனச்சொல்லியென்னையன் - என்னைத்
தானாக்கிக்கொண்டசமர்த்தைப்பார்தோழி—சங்கர.
1429 பாராதிபூதநீயல்லை - உன்னிப்
பாரிந்திரியங்கரணநீயல்லை
ஆராயுணர்வுநீயென்றான் - ஐய
னன்பாயுரைத்தசொல்லானந்தந்தோழி—சங்கர. ()
1430 அன்பருக்கன்பானமெய்யன் - ஐய
னானந்தமோனனருட்குருநாதன்
தன்பாதஞ்சென்னியில்வைத்தான் - என்னைத்
தானறிந்தேன்மனந்தானிறந்தேனே—சங்கர (10)
1431 இறப்பும்பிறப்பும்பொருந்த - எனக்
கெவ்வணம்வந்ததென்றெண்ணியான்பார்க்கில்
மறப்புநினைப்புமாய்நின்ற - வஞ்ச
மாயாமனத்தால்வளர்ந்ததுதோழி—சங்கர. (11)
1432 மனதேகல்லாலெனக்கன்றோ-தெய்வ
மவுனகுருவாகிவந்துகைகாட்டி
எனதாம்பணியறமாற்றி - அவ
னின்னருள்வெள்ளத்திருத்திவைத்தாண்டி—சங்கர

1433 அருளாலெவையும்பாரென்றான் - அத்தை
யறியாதேசுட்டியென்னறிவாலேபார்த்தேன்
இருளானபொருள்கண்டதல்லால் - கண்ட
வென்னையுங்கண்டிலனென்னேடிதோழி—சங்கர.

1434 என்னையுந்தன்னையும்வேறா - உள்ளத்
தெண்ணாதவண்ணமிரண்டறநிற்கச்
சொன்னதுமோனமொருசொல்லே - அந்தச்
சொல்லால்விளைந்தசுகத்தையென்சொல்வேன்சங்கர

1435 விளையுஞ்சிவானந்தபூமி - அந்த
வெட்டவெளிநண்ணித்துட்டவிருளாங்
களையைக்களைந்துபின்பார்த்தேன் - ஐயன்
களையன்றிவேறொன்றுங்கண்டிலன்றோழி—சங்கர.

1436 கண்டார்நகைக்கப்புயிர்வாழ்க்கை - இரு
கண்காணநீங்கவுங்கண்டோந்துபிறான்
கொண்டார்போற்போனாலும்போகும் - இதிற்
குணமேதுநலமேதுகூறாய்நீதோழி—சங்கர. (16)

1437 நலமேதுமறியாதவென்னைச் - சுத்த
நாதாந்தமோனமாநாட்டந்தந்தேசஞ்
சலமேதுமில்லாமலெல்லாம் - வல்லான்
றளாலென்றலைமீதுதாக்கினான்றோழி—சங்கர. ()

1438 தாக்குநலானந்தசோதி - அணு
தன்னிற்சிறியவெனைத்தன்னருளாற்
போக்குவரவற்றிருக்குஞ் - சுத்த
பூரணமாக்கினான்புதுமைகாண்மின்னே—சங்கர ()

1439 ஆக்கியழித்துத்துடைக்கும் - தொழி
லத்தனைவைத்துமெள்ளத்தனையேனுந்
தாக்கறநிற்குஞ்சமர்த்தன் - உள்ள
சாக்ஷியைச்சிந்திக்கத்தக்கதுதோழி—சங்கர. (19)

1440 நிறைநிறைந்ததுமல்லவே - அந்த
நிறைபிறந்ததுமெங்கேயிருந்ததுமல்லவே
எந்தநிலைகளுமல்லவே - கண்ட
பாவனையிரண்டற்றிருக்கதுமல்லவே—சங்கர. (20)

1441 ஆங்கென்றுமீங்கென்றுமுண்டோ - சச்சி
தானந்தசோதியகண்டவடிவாய்
ஓங்கிநிறைந்ததுகண்டாற் - பின்னை
யொன்றென்றிரண்டென்றுரைக்கிடலாமோ—சங்கர

1442 என்றுமழியுமிக்காயம் - இதனை
யேதுக்குமெய்யென்றிருந்தீருலகீர்
ஒன்றுமறியாதநீரோ - யம
னோலைவந்தாற்சொல்லவுத்தரமுண்டோ—சங்கர ()

1443 உண்டோநமைப்போலவஞ்ஞர் - மல
மூறிக்கதும்புமுடலைமெய்யென்று
கொண்டோபிழைப்பதிங்கையோ - அருட்
கோலத்தைமெய்யென்றுகொள்ளவேண்டாவோ-சங்

444 வேண்டாவிருப்புவெறுப்பும் - அந்த
வில்லங்கததகாலேவிளையுஞ்சனனம்
ஆண்டானுரைத்தபடியே - சற்று
மசையாதிருந்துகொள்ளறிவாகிநெஞ்சே—சங்கர.

1445 அறிவாருமில்லையோவையோ - என்னை
யாரென்றறியாதவங்கதேசத்தில்
வறிதேகாமத்தீயிற்சிக்கி - உள்ள
வான்பொருடோறகவோவந்தேனுன்றோழி—சங்கர

1446 வந்தவரவைமறந்து - மிக்க
மாதர்பொன்பூமிமயக்கதிலாழும்
இந்தமயக்கையறுக்க - எனக்
கெந்தமெய்ஞ்ஞானவெழில்வாள்கொடுத்தான்-சங்

1447 வாளாருங்கண்ணியர்மோகம் - யம
வாதைக்கனலைவளர்க்குமெய்யென்றே
வேளானவனுமெய்விட்டான் - என்னின்
மிக்கோர்துறக்கைவிதியன்றோதோழி—சங்கர.

1448 விதிக்கும்பிரபஞ்சமெல்லாம் - சுத்த
வெயின்மஞ்சளென்னவேவேதாகமங்கள்
மதிக்குமதனைமதியார் - அவர்
மார்க்கந்துன்மார்க்கஞ்சன்மார்க்கமோமானே—சங்

1449 துன்மார்க்கமாதர்மயக்கம் - மனத்
தூயர்க்குப்பற்றாதுசொன்னேன்சனகன்
தன்மார்க்கநீதிதிட்டாந்தம் - அவன்
றானந்தமானசதானந்தனன்றோ—சங்கர. (29)

1450 அன்றென்றுமாமென்றுமுண்டோ - உனக்
கானந்தம்வேண்டினறிவாகிச்சற்றே
நின்றாற்றெரியுமெனவே - மறை
நீதியெம்மாதிநிகழ்த்தினன்றோழி - சங்கர சங்கர
சம்பு சிவ-சங்கர சங்கர சம்பு. (30)

---

## அகவல்.

---

1451 திருவருண்ஞானஞ்சிறந்தருள்கொழிக்குங்
குருவடிவானகுறைவிலாநிறைவே
நின்றவொன்றேநின்மலவடிவே
குன்றாப்பொருளேகுணப்பெருங்கடலே
யாதியுமந்தமுமானந்தமயமாஞ்
சோதியேசுத்தேதொலைவிலாமுதலே
சீர்மலிதெய்வத்திருவருளதனாற்
பூர்த்திலண்டப்பரப்பெலாநிறைவி

யண்டசமுதலாமெண்டருநால்வகை
யேழுபிறவியிற்றாழாதோங்கு
மனந்தயோனியினினம்பெறமல்க
வணுமுதலசலமானவாக்கையுங்
கணமுதலளவிற்கற்பகாலமுங்
கன்பப்பகுதித்தொன்மைக்கிடா

விமைப்பொழுதேனுந்தபக்கெனவறிவிலா
வேழையுயிர்த்திரள்வாழவமைத்தனை
யெவ்வுடலெடுத்தாலவ்வுடல்வாழ்க்கை
யின்பமெனவேதுன்பமிலையெனப்
பிரியாவண்ணமுரிமையின்வளர்க்க

வாதரவாகக்காதலுமமைத்திட்
டேகமின்றியேதேகநானென
வறிவுபோலறியாமையியக்கிக்
காலமுங்கன்மமுங்கட்டுங்காட்டியே
மேலுநரகமுமேதகுசுவர்க்கமு

மாலறவகுத்தனையேனும்வண்ண
மமையாக்காதலிற்சமயகோடி
யறம்பொருளாதிதிறம்படுநிலையிற்
குருவாயுணர்த்தியொருவர்போலனைவருந்
தத்தநிலையேமுத்திமுடிவென

வாததர்க்கமும்போதநூல்களு
நிறைவிற்காட்டியேகுறைவின்றிவயங்க
வங்கங்குநின்றனையெங்குமாகிச்
சமயாதீதத்தன்மையாகி
யிமையோர்முதலியயாவருமுனிவருந்

தம்மைக்கொடுத்திட்டெம்மையாளென
வேசற்றிருக்கமாசற்றஞான
நலமுங்காட்டினைஞானமிலேற்கு
நிலையுங்காட்டுதனின்னருட்கடனே.

## வண்ணம்.



1452 அருவென்பனவுமன்றியுருவென்பனவுமன்றி
யகமும்புறமுமன்றி மீன்றபிறழாது
குறியுங்குணமுமன்றிநிறைவுங்குறைவுமன்றி
மறையொன்றெனவிளம்பவிமலமதாகி
அசலமெறவுயர்ந்துவிபுலம்பெறவளர்ந்து
சபலஞ்சபலமென்றுளறிவினர்காண

ஞானவெளியிடைமேவுமுயிராய் (ரு)

அனலொன்றிடவெரிந்துபுகைமண்டிடுவதன்று
புனலொன்றிடவமிழ்ந்துமடிவிலதாதை
சருவும்பொழுதுயர்ந்துசலனமபடுவதன்று
சமர்கொண்டழிவதன்றெரியல்பினதாகும்
அவனென்பதுவுமன்றியவளென்பதுவுமன்றி
யதுவென்பதுவுமன்றியெழில்கொடுலாவும்

ஆருநிலைபறியாதபடியே (வ)

இருளென்பதுவுமன்றியொளியென்பதுவுமன்றி
யெனையுந்தனுளடங்கவொருமுதலாகு
முளதென்பதுவுமன்றியிலதெனபதுவுமன்றி
யுலகுந்தொழவிருந்தவயன்முதலோர்கள்
எவருங்கவலைகொண்டுசமயங்களில்விழுந்து
சுழலும்பொழுதிரங்கியருள்செயுமாறு

கூறரியசகமாயையறவே (வரு)

எனதென்பதையிகழ்ந்தவறிவின்றிரளினின்று
மறிவொன்றெனவிளங்குமுபயமதாக
அறியுந்தரமுமன்றுபிறியுந்தரமுமன்று
வசரஞ்சரமிரண்டினொருபடியாகி
எதுசந்ததநிறைந்ததெதுசிந்தனையிறந்த
தெதுமங்களசுபமகொள்சுகவடிவாகும்

யாதுபரமதைநாடியறிமே (௨)

பருவங்குலவுகின்றமட மங்கையர்தொடங்கு
கபடந்தனில்விழுந்துகெடுநினைவாகி
வலையின்புடைமறிகதமறியென்றவசமுண்டு
வசனந்திரமுமின்றியவரிதழூறல்
பருகுந்தொழிலிணங்கியிரவும்பகலுமின்சொல்
பருகும்படிதுணிந்துகுழலழகாக
மாலைவகைபலசூடியுடனே (உரு)
பதுமந்தணையிசைந்தமுலையென்றதையுகந்து
வரிவண்டெனவுழன்றுகலிலெனவாடுஞ்
சிறுகிண்கிணிசிலம்புபுனைதண்டைகண்முழங்கு
மொலிநன்றெனமகிழ்ந்துசெவிகொளநாசி
பசுமஞ்சளின்வியந்தமணமுந்திடமுகந்து
பவமிஞ்சிடவிறைஞ்சிவரிசையினோடு
காலின்மிசைமுடிசூடிமயலாய் (தெ)
மருளுந்தெருளும்வந்துகதியென்பதைமறந்து
மதனன்சலதிபொங்கவிரணமதான
வளிபுண்டனைவளைந்துவிரல்கொண்டுறவளைந்து
சுரதஞ்சுகமிதென்றுபரவசமாகி
மருவுந்தொழின்மிகுந்துதினமுந்தினமும்விஞ்சி
வளரும்பிறைகுறைந்தபடிமதிசோர
வானரமெனமேனிதிரையாய் (தெரு)
வயதும்படவெழுந்துபிணியுந்திமிதிமென்று
வரவுஞ்செயலழிந்துளிருமலுமாகி
அனலுஞ்செலுதலின்றிவிழியுஞ்சுடர்களின்று
முகமுங்களைகளின்றுசரியெனநாடி.
மனையின்புறவிருந்தவினைமுங்குலைகுலைந்து
கலகஞ்செயவிருண்டயமன்வரும்வேளை
யேதுதுணைபழிகாரமனமே. (க)

தாயுமான சுவாமிகள்பாடல் முற்றியது.

திருச்சிற்றம்பலம்

## கோச்சகம்.

---*---

இது பின்னர்க் கிடைத்த பிரதி யொன்றிற்

காணப்படுகின்றது.

தத்துவம்வேறென்னைவேறாக்கியருடந்ததிலே
யுற்றுணர்வும்வேண்டாவென்றோரிரண்டுமூன்றினையும்
நித்தியமென்றேகாட்டிநில்லாமனில்லெனவே
தத்துவத்தோடத்துவிதந்தருந்தாயுமானவனே. (க)

நந்தமதென்றெண்ணிநலிந்தவுடல்வேறாக்கி
வந்தபொருளுன்னதல்லவென்றெனதுவல்லமையு
முந்தனக்கன்றெல்லாநமதென்றேயுட்புகுந்த
தந்தையுநீமற்றுமருளாந்தாயுமானவனே. (உ)

பந்தாடுமாபோற்பதிந்துகருப்பட்டேற்குச்
சிந்தாமணியாய்ச்செகந்தனிலேதீவகம்போல்
வந்தான்மறைசைநகர்மற்றுமோர்மெய்கண்ட
சந்தானத்தானத்தவத்தாயுமானவனே. (ங)

பின்னைத்தானொன்றினையுங்காட்டாதபேரிருளி
னுன்னைத்தான்கண்ணிலர்போலொன்றாகித்தானுழன்ற
வென்னைத்தானிவ்வணமென்றெண்ணறியாவேழையென்றே
தன்னைத்தான்றந்தாண்டான்றனித்தாயுமானவனே. (ச)

இடக்குப்பையாடரவஞ்செங்கட்கேழற்கோ
டடுக்குப்பைநீத்தேயுயர்மறைசைவந்தெழுந்து
வீடக்குப்பைகோலால்விளங்கியபொய்மெய்யெனவாழ்
சடக்குப்பையென்றுதவிர்த்தான்றாயுமானவனே.

புகப்பட்டான்வல்லிருளின்பொல்லாதவேழாம்
பகப்பட்டானீங்காப்பரப்பானதீவினையி
னகப்பட்டான்மாயாவிகாரவடவியெனுஞ்
சகப்பட்டானென்றிரங்கினன்றாயுமானவனே. (சு)

கஞ்சனரிகாணாதகாரணமேயன்பருக்காப்
பஞ்சவன்முன்னேசரப்பரிமேலெழுந்தபரம்
மஞ்சுலவுஞ்சோலையின்மாமறைசைவந்தோங்கித்
தஞ்சமென்றாற்கஞ்சலெனவாடாயுமானவனே. (எ)

மனக்கவலைத்தீர்த்தென்மயக்கவிகற்பங்களெல்லா
முனக்கலவென்றெவ்வொன்றாய்வேறாக்கியொன்றுமற
நினைக்கவரிதானவின்பநிட்டையிலென்றேயுரைத்தான்
றனக்குவமையில்லானெனக்குமருட்டாயவனே. (அ)

தாயுமானவன் தாளிணைவாழ்க.

திருச்சிற்றம்பலம்.



# அருள்வாக்கியவகவல்.



## தாயுமானசுவாமிகள் துதி.



திருவளர்கருணைச்சிவானந்தபூரண
மொருவருமறியாவொருதனிச்சித்து
நவந்தருபேதமாய்நாடகநடித்தற்
பவந்தனைநீக்கிப்பரிந்தருள்பராபரங்
கண்ணுங்கருத்துங்கதிரொளிபோல
நண்ணிடவெனக்குநல்கியநன்மை
யொன்றாய்ப்பலவாயொப்பிலாமோனக்
குன்றாய்நிறைந்தகுணப்பெருங்குன்ற
மண்ணையும்புனலையும்வளியையுங்கனலையும்
விண்ணையும்படைத்தவித்திலாவித்து
பந்தமனைத்தையும்பாழ்படநூறியென்
சிந்தையுட்புகுந்தசெழுஞ்சுடர்ச்சோதி
விள்ளொணாஞானம்விளங்கிடமேலோர்
கொள்ளைகொண்டுண்ணக்குறைவிலாநிறைவு
தாட்டாமரையலர்த்தாணினைப்பவர்க்குக்
காட்டாவின்பங்காட்டியகதிநிலை
வாக்கான்மனத்தான்மதித்திடவரிதென
நோக்காதிருக்கநோக்கியநோக்க
மாதியாயறிமாயகண்டமாயகண்ட
சோதியாய்விரிந்துதுலங்கிபதோற்றம்
பரவெளிதன்னிற்பதிந்தவென்னுளத்தின்
விரவிவிரவிமேற்கொளும்வெள்ளஞ்
சுட்டுக்கடங்காச்சோதியடியார்
மட்டுக்கடங்கும்வான்பெருங்கருணை

யெல்லைக்கடங்காவேகப்பெருவெளி
தில்லைப்பொதுவிற்றிருநடத்தெய்வம்
வாதவூரெங்கைதனைவரிசையாய்விழுங்கும்
போதவூர்மேவுகர்ப்பூரவிளக்கு
சுகரையகண்டத்துவெளியெல்லாந்
திகழவேகாட்டுஞ்சின்மயசாட்சி
செழுந்தமிழ்ப்பரைச்சிவலிங்கமாகி
விழுங்கியஞானவித்தகவேழ
மெழிறருபட்டினைத்திறைவனையென்று
மழிவிலாவிலிங்கமாக்கியவருணிதி
சாந்தபூமிதன்னைருள்வெள்ள
மார்ந்தநீழலசையாக்கமனம்
பரவுவார்நெஞ்சிற்பரவியமாட்சி
யிரவுபகலற்றவேகாந்தக்காட்சி
யாட்சிபோலிருக்குமகிலந்தனக்குச்
சாட்சியாயிருக்குந்தாரகத்தனிமுத
லாணுமபெண்ணுமலியுமல்லாததோர்
தானுவாய்நின்றசத்தாந்தனிச்சுட
ரெள்ளுமெண்ணெயுமெப்படியப்படி
யுள்ளும்புறம்புமுலாவியவொருபொரு
ளளவிலாமதந்தொறுமவரவர்பொருளென
வுளநிறைந்திருக்குமொருபொற்பணி
தள்ளுபணப்பேய்துடிக்கத்தறிக்கக்
கொள்ளுமோனவாளகொடுத்திடுமாசு
பெரியபேறுபேசாப்பெருமை
யரியவுரிமையளவிலாவளவு
அரியநிறைவுதோன்றுவதீதந்
தீயுநல்லன்புவிளைத்திடும்விளைவு

தீராப்பிணியாஞ்சென்னமறுக்க
வாராவரவாய்வந்தசஞ்சீவி
யாலைக்கரும்புபாகமுதக்கட்டிநீள்
சோலைக்கனிபலாச்சுளைகதலிக்கனி
பாங்குறுமாங்கனிபாறேன்சருக்கரை
யோங்குகற்கண்டுசேர்த்தொன்றாய்க்கூட்டி
யருந்தியரசமெனவறிஞர்சமாதியிற்.
பொருந்தியவின்பம்பொழிசுற்சுகோதய
மெங்கணுநிறைந்தவியல்பினையெனக்குச்
செங்கையால்விளங்கத்தெரித்தமெய்த்தேசிகன்
றன்னையறிவித்துத்தற்பரமாகி
யென்னுளத்திருந்தருளேகநாயக
னடிமுடியில்லாவரும்பொருடனக்கு
முடியடியிதுவெனமொழிந்திடுமுதல்வன்
மெய்யலான்மற்றவைமெய்யலவெல்லாம்
பொய்யெனவறியெனப்புன்னகைபுரிந்தோ
னருளும்பொருளும்பேதமாயிருந்து
மிருதிறனென்னுமியலுமுண்டென்றே
னருளுனக்குண்டேலருளும்வெளிப்படும்
பொருண்மயந்தானேபொருந்துமென்றுரைத்தோன்
சத்தசத்திரண்டுந்தன்மையுந்தானே
யொத்தலாற்சதசத்துனக்கெனவுரைத்தோ
னுணவமறாவிடினருளுறாதென்னக்
காணருநேர்மைபாற்காணவேயுரைத்தோன்
சென்மமுள்ளளவுந்தீராதிழுக்குங்
கன்மம்விடாதெனக்காட்டியவள்ள
லுளதிலதெனவுமுறுதலான்மாயை
யுள்ளிலதெனவும்வகுத்தினிதுரைத்தோ

னில்லறத் திருந்துமிதயமடக்கிய
வல்லவன்றேனமகாயோகியென்றோன்
றுறவறத்திருந்துஞ்சூழ்மனக்குரங்கொன்
றறவகையறியானஞ்ஞானியென்றோ
னிறவாமனந்தானிறக்கவுணர்த்திப்
பிறவாவரங்கரும்போறிவாள
னத்தனதருளாலனைத்தையுமியக்குஞ்
சுத்தமாமாயையின்றோற்றமென்றுரைத்தோ
னிருண்மலமகலவிசைந்ததிலழுத்தும்
பொருளருட்டிறோதைப்பொற்பெனப்புகன்றோன்
வீறுசிவமுதல்விளம்பியபடியே
யாறுமனுதியென்றறிஞருக்குப்போன்
கொல்லாவிரதங்குவலயத்தோர்க
ளெல்லாம்பெறுமினென்றியம்பியதயாநிதி
தருமமுந்தானமுந்தவமும்புரிபவர்க்
குரிமையாயவரோடுறவுகலப்பவன்
றன்னுயிர்போலத்தாரணியின்மருவிய
மன்னுயிரனைத்தையும்வளர்த்திடும்வேந்தன்
களவுவஞ்சனைகள்செய்கருமிகடக்குந்
தெளிவுவந்துறவருள்செய்திடுந்திறத்தோன்
றன்பெறும்பேறுசகமெலாம்பெறவே
வான்பெறுங்கருணைவழங்கியமாரி
தஞ்சமென்றடைந்ததாபதர்தம்மை
யஞ்சலென்றருளுமறிஞர்சிகாமணி
சிவகோடிகளுஞ்சித்தர்கோடிகளும்
யாவரும்புகழுயாவையுமுணர்ந்தோன்
யானெனதென்னுவிறைவனெம்பெருமான்
றனவணுகியதலைவனெங்கோமா

னருணகிரியார்க்காறுமுகன்சொலும்
பொருணலமல்லதுபொருளெனமதியான்
பூதமுதலாப்பொலிந்திடுநாத
பேதமுங்கடந்தபெருந்தகைமூர்த்தி
மூலாதாரமுதலாயுள்ள
மேலாதாரமும்வெறுவெளிகண்டவன்
மண்டலமூன்றினுமன்னிபவுருவினுங்
கண்டவையத்தினுங்கடவுளாய்நின்றோன்
பகர்சமயந்தொறும்பரமேயிருந்து
சுகநடம்புரியுந்தொழிலெனச்சொன்னோன்
பேதவாபேதபேதாபேத
போதமிதுவெனப்புகன்றிடும்புண்ணிய
னதுநானெனவேயாற்றிடுமனுபவஞ்
சதுர்வேதாந்தத்தன்மையென்றுரைத்தோ
னல்லும்பகலுமறிவாளோர்க்குச்
சொல்லும்பொருளுஞ்சுவையெனச்சொன்னோன்
சுதனேகுருவாஞ்சுவாமிநாயகற்கெனி
னதிகமெய்ஞ்ஞானமல்லவோவென்றோ
னேசயோகத்துறுநிருபரெல்லாந்தொழு
மிராஜயோகத்திறையிராஜயோகத்தான்
பொறுமைதெளிவுபுனிதவாசார
மறுவிலாவண்மைவாரமியற்கை
தண்ணடர்சாந்தந்தயங்கியகீர்த்தி
யெண்ணெண்கலைபயிலிணையிலாக்கல்வி
நல்லவிரக்கநடுநிலைசத்திய
மில்லையென்னுமலெவர்க்குந்தருங்கொடை
நற்குணனெல்லாநண்ணியபெருந்தகை
சிற்குணவாரிதிருவருட்செல்வன்
கரமேலெடுத்துக்கருத்துறவணங்கிப்
பரமேயுனக்குப்பாரமெனப்பகர்ந்தோ
னலடிமேவுமரசிளையடுத்தே
சீலமெய்ஞ்ஞானந்தெளிந்தனனெனவுஞ்
சித்தமவுனிதிடசித்தமாக

லைத்தநிலையின்வளர்ந்தனனென்னவு
மூலன்மரபின்மூளைத்தமவுனிதன்
பாலன்யானெனவும்பரிவொடும்பகர்ந்தோன்
வடமொழி,யியற்கையின்மகிமையையுணர்ந்து
திடமுறமுப்பொருட்டிறத்தையுந்தெளிந்து
கண்டமுதென்னக்கனிரசமென்னத்
தண்டமிழ்மாரிதனைப்பொழிந்து
சித்தியுமுத்தியுஞ்சிறந்தருள்கொழிக்கு
நித்தியநிரஞ்சனநிராலம்பநிறைவைப்
பாடியுநாடியும்பணிந்தெழுந்தன்பா
லாடியுமாற்றியுமகங்குழைந்தெய்தியு
முடலங்குழையவுரோமஞ்சிலிர்ப்பப்
படபடென்றுள்ளம்பதைத்துப்பதைத்துப்
பாங்குறநெட்டுயிர்ப்பாகிப்பாதவித்
தேங்கியேங்கியிரங்கியிரங்கி
யோய்ந்தபம்பரம்போலொடுங்கியேசிறிது
மேய்ந்தவிழிகளிமைப்பதுமின்றிச்
சோர்ந்துசோர்ந்துதுவண்டுதுவண்டுமெய்
யார்ந்தவன்போடவசமுற்றடிக்கடி
யுண்ணடுக்குறவேயுருகியேசற்றுத
தண்ணயர்மொழியுந்தழுதழுத்திடவே
யுள்ளும்புறம்புமொருமித்துருகி
வெள்ளநீர்போல்விழிநீர்பெருக்கிக்
கன்றுபசுவைக்கருதிக்கதறிச்
சென்றுசென்றோடித்திகைப்பதுபோல
வென்புநெக்குடையவிருகரங்குவித்துப்
புன்புலால்யாக்கைபொருந்தாதினியென
வுணர்ந்துணர்ந்தன்பாயுவகைமேற்கொண்டினிக்
கணம்பிரியேனெனக்கருதியேகுறித்துத்
திருவுருவெல்லாந்திருநீறிலங்க
விருகரநளினமியன்முடிகுவித்துப்
பூரணசந்திரன்போலொளி[illegible]ட்டுங்
காரணவதனங்களின்குறுவெயர்வுற

விளநிலாவெனவேயிலங்கியசிறுநகை
தளதளவென்னத்தயங்கியெழில்பெற
வித்தன்மையெல்லாமிசைந்துமிலனருள்
சித்தெனச்சிவகதிசேர்ந்தவருரைப்பப்
பாத்திரமாடப்பரிவுடனாடிச்
சாத்திரங்காட்டித்தயவுசெய்தருளும்
வல்லவனெனவேமன்னுயிர்க்காக
வெல்லையிலன்பனிவனெனவிளங்கி.
யினவுலகத்தியற்கைபொய்யென்றே
ஞானநூன்மெய்யெனநவின்றினிதிரங்கிக்
கேவலசகலங்கீழ்ப்படமேலாய்
மேவருஞ்சுத்தமெய்யினைநல்க
வருளேயுருவுகொண்டவனியில்வந்த
பொருளேயிவனெனப்பொலிந்திடும்புனிதனை
சைவஞ்சிவனுடன்சம்பந்தமென்பது
மெய்வளர்ஞானம்விளக்குமென்றிசைத்தோன்
கதிர்விழியொளியுறக்கலத்தல்சித்தாந்த
விதிமுறைபாமெனவிளம்பியமேலோன்
முடிவினிலாகமமுறைமையினுண்மையை
படியவரைக்குறித்துரைத்தருளியவண்ணல்
சிதம்பரநேர்மைதிறமாவுரைத்திறை
பதம்பரவெனப்பகர்பரமமெய்ஞ்ஞானி
முத்திபஞ்சாக்கரமுறைமையிலயிக்கியஞ்
சத்தியமிதுவெனச்சார்ந்தவர்க்குரைத்தோ
னஞ்செழுத்துள்ளேயனைத்தையுங்காட்டியென்
னெஞ்சழுத்தியகுருநீதிமாதவ
னெல்லாநிறைந்தவிறைவன்செயலெனக்
கல்லாவெனக்குங்கருணைசெய்கடவுள்
குருவருளாலேகூடுவதல்லாற்
றிருவருளுறாதெனத்தெரிந்திடவுரைத்தோன்
குருவுருவருளெனக்கொண்டபின்குறையாப்
பொருண்மயமாமெனப்புகன்றிடுபோத
னைந்துமூர்த்திகளையுமெழிற்குருவடிவெனச்

சிந்தையிற்றியக்கறத்தேர்ந்தவர்க்குரைத்தோன்
சதாசிவமென்றபேர்தான்படைத்ததுதா
னோதவேதப்பொருளென்றெடுத்தெடுத்துரைத்தோன்
கல்லாவைகன்னல்கவர்ந்திடச்செய்தவ
னெல்லாம்வல்லசித்தெம்மிறையென்றோ
னெவ்வுயிர்தோறுமிறைமேவியதிறஞ்
செவ்வியபிரம்படிசெப்பிடுமென்றோ
னெவ்வணமெவரெவரிசைத்தனரவாவர்க்
கவ்வணமாவனெம்மானெனவறைந்தோ
னொருபானாறுக்கேயொருசிவனுட்படின்
வருமடியார்திறம்வழுத்தொணாதென்றோன்
சிவனடியாரைச்சிவனெனக்காண்பவ
னெவனவன்சிவனேயென்றெடுத்துரைத்தோன்
விருப்புவெறுப்பினைவேரறப்பறித்துக்
கருப்புகாதென்னைக்காத்தருள்செய்தோ
னிருசொல்லுரையாதியானின்பமெய்த
வொருசொல்லுரைத்தவுயர்குணபூதா
னத்துவாமார்க்கமாறையுமகற்றித்
தத்துவாதீதத்தன்மையைத்தந்தோன்
றிருமகண்மருவியதிகழ்வளமறைசையில்
வருமுணர்வாளன்மருளிலாமனத்தா
னெண்ணியவெண்ணமெல்லாந்தெரிந்தெனக்குத்
தண்ணருள்செய்தவன்றாயுமானவ
னொருமொழிபகர்ந்தவுதவியாலவன்ற
னிருபதமும்போதிறைஞ்சிவாழ்த்துவனே.

---

இது

ஆசிரியர் மாணாக்கர்

அருளையரால் செய்யப்பட்டது.



# திருப்பாடலகராதி.

—*—

# திருப்பாடற்றிரட்டு

# திருப்பாடலகராதி.

1923

# நூலின்உட்பிரிவு.

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| அகவல் | ௨௪௭ |
| அகிலாண்டநாயகி | ௧௭௧ |
| ஆகாதோவென்கண்ணி | ௨௩௬ |
| ஆகாசபுவனம் | ௭௪ |
| ஆக்குவை | ௧௬௫ |
| ஆசையெனும் | ௧௨௦ |
| ஆரணம் | ௧௦௩ |
| ஆனந்தக்களிப்பு | ௨௪௩ |
| ஆனந்தமானபரம் | ௩௯ |
| இல்லையோவென்கண்ணி | ௨௩௮ |
| உடல்பொய்யுறவு | ௧௪௭ |
| எங்குநிறைகின்றபொருள் | ௪௯ |
| எடுத்ததேகம் | ௧௬௨ |
| எனக்கெனச்செயல் | ௧௩௦ |
| எசற்றவந்நிலை | ௧௬௦ |
| கருணாகரக்கடவுள் | ௨௫ |
| கல்லாலின்கீழ் | ௧௭௫ |
| கற்புறுசிந்தை | ௧௬௫ |
| காடுங்கரையும் | ௧௬௧ |
| காண்பேனோவென்கண்ணி | ௨௩௩ |
| சிச்சிதானந்தசிவம் | ௫௬ |
| சித்தர்கணம் | ௩௦ |
| சிவன்செயல் | ௧௧௪ |
| சிற்சுகோதயவிலாசம் | ௬௮ |
| சின்மயானந்தகுரு | ௧௨ |
| சுகவாரி | ௪௨ |
| சொல்லற்கரிய | ௧௦௬ |
| தந்தைதாய் | ௧௭௩ |
| தன்னை | ௧௬௫ |
| தன்னையொருவர் | ௧௧௭ |
| திடமுறவே | ௧௬௩ |
| திருவருள்விலாசபரசிவவணக்- | ௧ |
| தேசோமயானந்தம் | ௬௨ |
| தேன்முகம் | ௮௪ |
| நல்லறிவேயென்கண்ணி | ௨௩௯ |
| னையொன்று | ௮௮ |
| நின்றநிலை | ௨௪௨ |
| பராபரக்கண்ணி | ௧௮௦ |
| பரிபூரணானந்தம் | ௩ |
| பலவகைக்கண்ணி | ௨௪௦ |
| பன்மாலை | ௮௫ |
| பாடுகின்றபனுவல் | ௨௪௨ |
| பாயப்புலி | ௧௩ |
| பெரியநாயகி | ௧௭௨ |
| பெற்றவட்கே | ௧௭௪ |
| பைங்கிளிக்கண்ணி | ௨௧௦ |
| பொருள்வணக்கம் | ௧ |
| பொன்னைமாதரை | ௯௯ |
| மண்டலத்தின் | ௫௩௬ |
| மலைவளர்காதலி | ௧௬௭ |
| முகமெலாம் | ௧௬௩ |
| மௌனகுரு | ௧௯ |
| வண்ணம் | ௨௪௯ |
| வம்பனேன் | ௧௦௯ |
| வேண்டாவோ வென் கண்ணி | ௨௩௮ |
| **எந்நாட்கண்ணியில்.** | |
| தெய்வவணக்கம் | ௨௧௫ |
| குருமரபின்வணக்கம் | ௨௧௬ |
| அடியார்வணக்கம் | ௨௧௭ |
| யாக்கையைப்பழித்தல் | ௨௧௭ |
| மாதரைப்பழித்தல் | ௨௧௮ |
| தத்துவமுறைமை | ௨௧௯ |
| தன்னுண்மை | ௨௨௨ |
| அருளியல்பு | ௨௨௨ |
| பொருளியல்பு | ௨௨௪ |
| ஆனந்தவியல்பு | ௨௨௫ |
| அன்புநிலைமை | ௨௨௬ |
| அன்பர்நெறி | ௨௨௮ |
| அறிஞருரை | ௨௨௯ |
| நிற்குநிலை | ௨௦௨ |
| நிலைபிரிந்தோர் கூடுதற்கு | ௩௦௨ |

## இஃதாசிரியர்வாக்கு



சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனில் - ஐயமறவென்
றானந்த வின்பி லழுந்துவது முத்தியெனில்
வானங்காள் மெய்ம்மின் மழை.

ஓர்க்ஷாமகாலத்தில் மழைபெய்யும்படி அருளியதென்பர்